என்னையாண்டருளேனப்புத்தேள்விதி - தன்னையுனனலுந்தாமரையுந்தியா
னென்னையப்பவென்றருயிரேயென்னை - யுன்னற்கென்னெனவோதிவணங்கினன்.(௩௧)

வணங்கினனைவாழ்த்திக்கேள்பிளாய்கம - தணங்குக்காத்தியாயம்முனியேதமேண்
கணங்கொல்காதன்மகளாவென்காதலி - னுணங்கியுற்றுளவண்மனவூக்கநீ. (௩௨)

யாவருக்குமுணர்த்திடுதூதனய்ப் - போவருக்கெனப்போக்கவவனுமே
காவருக்கங்கலந்துறப்பளளியி - லாவருக்கலன்னவடிவனாய். (௩௩)

காலைகாத்தியாயம்முனிவாழ்பன்ன - சாலைவந்துறுதாபதனைவிளித்
தோலைசெய்தலெனுன்மகன்பேதைமை-யாலையாயென்றவன்யாவும்விளம்பினன் (௩௪)

கடந்தகாலங்கண்டாக்குவானுக்குமுன் - னடந்தயாவுநவிலலுநான்முகன் - றடஞ்செய்
வார்க்குத்தடஞ்சொலுவாரினே-படஞ்செய்தேத்துவார்க்கின்னனபண்ணுவான். (௩௫)

அன்னையேயென்சொலன்பினிற்கேட்டியான் - முன்பிறும்விதிமுற்றுமறிந்துள
.னென்னையன்னமென்பக்கியென்றெண்ணலை - நின்னைவாழ்க்கைநிறம்புமாறேதுவன்.

## நிந்தாஸ்துதிபரிச்சேதம்.

சத்தியச்சகமுற்றவனங்கொல்யான் - நித்தமாமறையாவுநிலைபெறக்
கற்றநாவினன்காரணத்தாமரை - யுற்றவீட்டிலுளப்புள்யானோர்தியால். (௩௭)

சோகமாறிசுகித்தறிச்சோகமா - மோகநிற்கனிமூர்த்தியின்சீர்த்தியோ
வாகமானவனன்றவன்வண்மையை - யேகமாகவிசைப்பவரில்லைகாண். (௩௮)

மனக்காந்தேயமூர்காடுமெனையெனத் - தனக்காவோதிடத்தக்கவனல்லனீ
யுனக்காவெண்ணிடலொவ்வானவன்பல - ரினக்காமாறிருப்பானிலானுகுவான் (௩௯)

வேதியன்குலமங்கைநீவேட்டவன் - சாதியின்னதென்றியாருஞ்சாதிக்கலா
னேதுநாற்குலத்துற்றவோர்தாய்தந்தை - யேதுமற்றவனிச்சையின்வண்ணமே. ()

தேவமானிடமேதிரியக்குடன் - பாவுதாவரமோவவன்பாடுற
மேவுசாதிவன்னம்வினைகேட்டில - னீவினவியுண்டென்சொலிநேரிழாய். (௪௧)

அஞ்சிதென்னவறிவைவளர்த்திடும் - விஞ்சையாவுரிடத்தும்விநாவியே
வஞ்சமற்றுயாசித்தவனல்லன்காண் - பிஞ்சினிற்பழுத்தானிற்பிறங்குவான். (௪௨)

காயமுற்றகதியாய்தனக்கோர்த - காயமற்றவன்காயமற்றுளனவன்
தோயமுற்றுந்தூங்கித்தூங்கிமாமனை - நேயமுற்றவனைந்துநிலாவுவான். (௪௩)

அன்னமுண்டறியானொருநாளுமே - யின்னமுண்டறியானிந்தநீருமே
முன்னமானமுதலூதியம்மிலா - னென்றுவில்லவன்றன்னையியம்பவே. (௪௪)

அறையுமன்னவனுண்மைசொல்வாமெனின்-மறையெலாநமக்கென்வம்புசொல்லினே
குறைவெலாஞ்சொல்லிக்கொள்ளுமிவ்வூரெலா-நிறைவதாகிடநீருங்கேட்டித்திரால்.

உலகினையகன்றன்னைவிரும்பவோ - ரிலகுதாய்தந்தையின்குலமீகையூர்
திலகமன்னவன்செய்கைவடிவுசீர் - கலகமின்றிவினவிக்கவின்கொளல். (௪௬)

கண்டுகேட்டுக்கடிமணமாற்றுத - லுண்டுகொளுலகத்துளவொண்டை
விண்டுநீவிர்விவேகியாயுற்றுமப் - பண்டையானையென்பற்றினைபாவையே. (௪௭)

அண்டத்தன்றன்முகத்தில்விழித்தவர் - கொண்டபெண்டிர்க்குழைந்ததனைப்பினும்
கண்டபேரிலையாயினவன்கவி - னுண்டுகொலுரையுத்தமபத்தினி. (௪௮)

ஆகனத்தநீயாவிலங்கனை - மோகனப்படவாக்குவான்றன்வலை
தாகமுற்றுறச்சிக்கினைத்தாரணி - யோகமற்றவளாயுடலோய்ந்தனை. (௪௯)

கண்ணையுண்டவராகனைக்கண்டநீ - பண்ணையுண்ணீர்பட்டாடைப்பூண்விண்டோ
ருண்ணுஞ்சோறுபருகிடுநீரும்போய்க் - கண்ணுநீருகுங்கம்பலைகொண்டனை. (ரு0)

இன்னமெற்றுக்கியான்சான்றிசைப்பதே - யன்னமென்சொலையன்னமறிந்துகொள்
முன்னமுன்னமுகத்தில்விழித்தலோ - வன்னமன்னமெனப்பறந்தாயினேன். (ருக)

காடுதோறுமலைந்தவண்காண்பவர் - போடும்பூவிலைபோதிடாவாசையால்
வீடுதோறுவிதிரிடேதம்மற - வாடியாதுவழங்குவரோவெறு. (ருஉ)

இச்சையுற்றெலாமாயவர்பத்தியின் - பிச்சைக்கேங்கிப்பிறகியும்பேணுற
வச்சமற்றடுப்பாருமற்றேதுமற் - றுச்சமுற்றவொருதுணையற்றவன். (ருங)

அவனைப்போலெலாமற்றவர்யாரவர் - தவனத்தோடுதகுமுறவாகுவார்
புவனத்துட்சமுசாரிகள்புந்தியி - லிவனைச்சொல்லியிசைகூறுவாரிலை. (ருச)

மூப்பன்யாருளுமூத்தவன்பாலனிற் - பார்ப்போர்கென்றும்பளகறக்காணுவன்
கீர்த்திக்கேழற்கிழவனைத்திற்கு - மார்த்திக்கொல்லாவவனைநன்றேறுதிறாய். (ருரு)

சீர்த்திசெய்கையெலாமுஞ்சிலேடையால் - வார்த்தையாடினன்மாயவன்மாயமாய்ப்
பூர்த்திருக்குமவ்வேலையிலேபன்ன - மார்த்தசாலையிலானவள்கேட்கவே. (ருசு)

வென்றிகூறுமனத்தைவிளித்தென்றாய் - துன்றுநீதேவ்ப்பக்கியென்றுற்றுமே
நன்றுநீக்கிநவைபோலவோதிறாய் - வென்றிமேதையர்வித்தையீதன்றுகாண். (ருஎ)

மணத்தைமுற்றுமவத்திற்குழறினை - மணத்தைமுற்றுமாறாகவழங்கினை
தணத்தஞானத்தர்தாழ்வெனச்சாற்றினை-க்ணத்திலோதினர்காரியமன்றுகாண். (ருஅ)

ஆயிரவலக்காரத்தானுங்கடி - தாயிறுகித்தடையறவாற்றென்ப
பாயிரமுரைபன்னூற்பகர்தலை - நீயுணர்ந்திலைபோலுமானீங்குதி. (ருகூ)

நீதிமானைநிந்தித்தார்தலைகளைச் - சேதிநீதியெனச்சொலுஞ்சேதியை
வாதிநீயறியாய்போலுமன்னலைப் - போதிப்போதினன்பூக்குளாம்புண்ணியே. (சு0)

என்னச்சீற்றத்தெழிற்கணழற்சிகை - மன்னத்தூற்றிமறைக்குலமாதலா
லன்னமேனியெற்றுதகற்றினே - முன்னரிற்கலையென்றுமுனிந்தனள். (சுக)

எத்தனைப்பெயரெத்தனைசொல்லினுஞ் - சத்தியத்தையசத்தியம்வெல்லுமோ
சுத்தசத்துவந்தன்னைச்சுளித்ததை - மெத்தத்தாமதமென்னின்மெய்யாகுமோ. (சுஉ)

அன்னவாறெனத்தாண்டவனைச்சில - பின்னமோதினும்பின்னமதாகுமோ
மன்னுபூவைமணத்தைப்பிரிக்கினு - முன்னமானமுறைநவழுவாகுமோ. (சுங)

பயனிலாமொழியோதினைபாசிநீ - நயமிலாமொழிச்சீற்றத்தினந்தியே
யயருமன்னமுறுதற்றகாதென - வியலிலாமயிலென்னவெழுந்தரோ. (சுச)

இம்மென்றேகித்தனிற்குட்புகுதலு - மம்மானங்குமறைந்திருந்தம்மையின்
கம்மவாங்கருங்கூந்தற்கைப்பற்றவென் - னம்மாணுக்கியன்றன்பிலெழுந்தரோ. ()

ஒண்டமுடியவோரெழுத்தாதியைக் - கோதைமூடக்குளறிடுகூற்றிற்கு
வாதைமூடமறைந்திடன்மாண்பெனக் - காதைமூடிக்கனன்றகம்புக்கலும். (சுசு)

காதன்மாமணவாளனென்கண்மணி - நாதனென்றுநறுங்குறும்புன்னகை
யீதம்விண்டுகைநீக்கிக்கொண்டெடு - போதன்மேவியிற்புக்கினன்பொற்குயில். (சுஎ)

பன்னசாலைவாயிற்படிப்பண்ணவன் - மன்னியுற்றலர்மாதுகைப்பற்றலுங்
கன்னிநாணிக்கவிழ்ந்துளேபகலு - மன்னமோதியலற்றியடங்கலும். (சுஅ)

கண்டமாமுனிகாத்தியாயன்களி - கொண்டபின்செய்வரலாறுகூறுகேன்
பண்டுகேளெனப்பாரத்துவாசிக்கு - விண்டானங்கிரீசப்பேர்நல்வேதியன். (௬௯)

அறிதிராழிக்கடத்தமரந்தணீர் - மறிதியேந்திவழுத்துதீவராகன்சீ
ருறுதியென்றுரையாடினனேதிசேர் - மறுதியற்றகுதப்பெயர்மாமுனி. (௭௦)

முற்றும்.

ஆக படலம் ௫௦ - க்கு திருவிருத்தம் அ௬௦.

———:(o):———

ஸ்ரீ

# ௫௧-வது. திருமணம்புரிந்தபடலம்.

## காத்தியாயனி இருடிதேவியாருக் கருள்புரிபரிச்சேதம்.

வேறு.

பண்முகத்துமறைக்குலத்தீர்மாதேவிப்பன்னவிற்கட்பரமன்மேலாம்
விண்முகத்துவேதநாராயணனாமமணவாளவேடந்தாங்கிக்
கண்முகத்துக்காமழகின்காத்தியாயன்றனத்திற்கருணைபூத்துக்
கொண்முகத்துக்கோகநகைதனைமணந்தமாட்சியினைக்கூறக்கேண்மோர். (௧)

பற்றறுத்ததோர்பாரத்துவாசியே - முற்றவேனத்தொருமூவாமூர்த்திபின்
கற்றபேருங்காணுப்புகழம்மையைப் - பெறறமாமணம்பேசித்தீவிசிடே. (௨)

முனிவன்சாலைவாயிற்படிமுன்றிலிற் - றனியன்றன்னுருக்கொண்டுவிளங்கலும்
பனியொடுங்கிடுபோனுவுங்கண்மூச - நனிவிளங்கினனுதன்றன்மேனியே. (௩)

பாகமானபரஞ்சுடர்மேனிகொ - ளாகமாகவசந்தம்போர்சித்தசர்
வாகமாகவருதல்செய்தாலுமே - யாகாநல்லழகப்பன்விளங்கலே. (௪)

கோடிசித்தசர்குழுமியவாறெனக் - கோடிதண்ணவர்குழுமிவந்தாரென
நாடிநன்குரைநவ்வியின்காந்தியு - நாடிநன்குரைப்பாரிவணில்லரோ. (௫)

அழகின்மன்மதனையருளாளரிக் - கழகுசொல்லிடற்காரறிவுள்ளவர்
குழகன்குண்டலக்கொத்தெறிவிற்குழாங் - குழகுகூறிடக்குண்டலிக்காகுமோ. (௬)

ஆரகேயுரமோலியணிமணி - சேரவேந்தியசெம்பொனல்லாழியே
வாரவேந்துபொன்வத்திரநாணுடன் - பாரமாம்வீரசங்கிலிபன்மணி. (௭)

கட்டிழைத்தகடவுளிரத்தின - மிட்டபல்லிழையேங்கிருண்மண்டல
முட்டத்தின்னுவிற்கற்றையைமூசலும் - விட்டுப்போனவர்வீட்டினைமானுமே. (௮)

செய்யபாதங்கைவாயுந்திகண்முக - மையனுக்கழகெல்லாஞ்செந்தாமரை
வெய்யபாதகர்வேண்டக்கிடைக்குமோ - வையனார்தம்மருள்பெற்றார்க்கன்றியே. (௯)

கருணைமாமழைகொட்டிடுகண்களும் - பொருடருமறைப்புன்னகைப்பூக்களும்
வருணமங்கலமார்ந்துளவாரமும் - வருணமைந்தாகுமாப்பெருமாலையும். (௧௦)

எண்ணவொண்ணவெழிற்பூண்கலையுடன் - கண்ணன்வந்ததுகாத்தியாயனப்பெயர்
நண்ணுமாமுனிகண்டானந்தக்கட - லண்ணவீழ்ந்துகரையேறுதாடினன். (௧௧)

## மூர்த்திமான்மியகாண்டம்.

ஆடிஞனசசோவற்புதம் [illegible] தேடினேமெலாத்தேவரும்யாவருங்
கூடினேநினைக்கூடவ [illegible] பாடினேமெங்கட்பாடிப்பதுங்கினேம். (௧௨)

நின்னையார்கொணி [illegible] றேத்துவ-ரென்னையார்வுசதிலெண்ணிகொலெந்தைநீ
பன்னுதியனெனை [illegible] தாள்கைக்கா - முன்னம்வந்துமுளைத்தனையென்செய்கேன்.()

நாதநிற்குநமக்காரநானுனும் - பாதநிற்குநமக்காரம்பாவமி
லாதநிற்குநமக்காரநான்மறைப் - போதநிற்குநமக்காரம்புண்ணிய (௧௪)

கட்டமட்கெழற்பதகங்கையை - யட்டமூர்த்திக்களித்திநமக்காரம்
பட்டஞ்சூழ்விண்மண்ணேந்திப்பாலித்தசி - முட்டப்பூதரமூர்த்திநமக்காரம். (௧௫)

முத்தியீயுமுகுந்தநமக்காரம் - பத்தியீயும்பரமநமக்கார
மத்தியாளுமரனேநமக்காரஞ் - சித்தசித்தீசனுய்நமக்காரம. (௧௬)

நின்னைவேட்டுநெடும்போதுமாத்தவர் - தன்னையாற்றென்றனையைநின்முர்நிற
மன்னிவாழலற்றென்னிடம்வந்தாணீ - கன்னிதானமாக்கைப்பிடித்தாளுவாய் (௧௭)

உன்னையன்றியோருணுறக்கம்மிலா - னென்னையாண்டெனதிச்சைசமுற்றுகிடத்
தன்னையென்மகளாகத்தந்துன்வயிற் - றன்னநின்றனள்சோதிநீசோதியேல். (௧௮)

ஆண்டுகொள்ளெனவம்போருகப்பதம் - பூண்டமாச்சிரப்புண்ணியமாமுனி
வேண்டுநல்லுபசாரமுவிளக்கியே - நீண்டதேவன்முன்னின்றுன்கையாத்தரோ.(௧௯)

நண்ணுமாமுனிநீயுநின்னன்னெறிப் - பெண்ணுமாற்றும்பெருந்தவப்பேற்றினே
மண்ணுணன்றுமகிழ்ந்துமதெண்ணமே - திண்ணமாகத்திருட்டிமுனின்றனம். (௨௦)

என்றுசெல்லிவிதையியிலேகரை - மன்றுளாடியையமாதவர்தம்மையத்
தன்றிருவுளந்தண்ணினினைத்தலு - முன்னாவந்துமுடியடியிட்டனர். (௨௧)

இட்டமர்விதிக்கிச்செயலோதலு - மட்டமாசித்தியானவர்யாவரு
மெட்டுமாதிரமெட்டும்படிக்குப்பொன் - கட்டுச்சோதிமாணிக்கத்திற்காவணம் (௨௨)

அரங்கமாளிகைகளிகையைந்தேழா- வரங்கொண்மாடங்கள்கோபுரவாயில்கள்
தரங்கொளும்பலசாலைகடாழ்விலா - துரங்கொளுமுறையுட்பலவாக்கினா. (௨௩)

திருக்கல்யாணதினத்தினுக்காயநல் - வருக்கம்யாவும்வரநினைத்தன்புட
னெருக்கமாகுஞ்சுரர்மார்தர்நேருந்தொண் - டிருக்கவேண்டியிறும்பூதொடாற்றினா.()

ஆக்கவேண்டியதியாவுமமைத்தரோ - காக்குநாதன்கடையினின்றாரணன்
வாகுமூடிவழங்கினனித்தியா - சேர்க்கையோடொமான்செய்வனவாக்கியே. (௨௫)

எட்டுகோடிவசுக்களுமீராறு - பட்டபானுக்குழுக்களுமேழென
விட்டமாமருத்தேவருமீரொருக் - கட்டமாங்கந்துகப்பெரிலேகரும். (௨௬)

ஐந்தாறென்னுமுருத்திரகோடியு - நந்தாதுற்றநாலேந்துபிரமரு
மெந்தாயென்னுமிரண்டைந்துவேதரு - முந்தாநின்றவரம்பையர்முற்றுமே. (௨௭)

வந்துவேதவராகன்மணத்தினைச் - சிந்தையன்பொடுசேவித்திருக்கவென்
றந்தரத்தையிலந்தரமாக்கியே - சுந்தரிதவச்சாலையைச்சூழ்ந்தனர் (௨௮)

தங்கடங்கடாசோகவிதிப்படி - மங்கிலாமணக்காவணமாற்றினர்
துங்கராநித்தர்முத்தர்தந்தோகைமா - ரெங்கண்மாமலர்மங்கையையீண்டினர்.(௨௯)

## அம்மையாரைஅலங்கரித்தபரிச்சேதம்.

எம்பிராட்டியெழுகநின்மேனிதொட் - டும்பரிம்பருறும்பொருளோகையான்
மங்கிலாத்தவமாற்றியவாறெலா - மிங்கெழுந்தெதிரேத்திநிற்கின்றவால். (௩௦)

வருகமாமலர்ப்பூவையேமாதவ - னுருகுமாத்தவமுற்றெழுதோகையே
வருகவெங்கடமங்கலக்கிள்ளையே - வருகமாவராகன்மடப்பிடியே. (௩௧)

கஞ்சனீசன்றன் காந்தைகடொட்டிட - வஞ்சியஞ்சலித்து[illegible]ற்பவே
நஞ்சராககலுழன்மனைநங்கைமார் - தஞ்சமென்றுகைகல[illegible]ருங்கவே. (௩௨)

வந்துமூன்றரைக்கோடிபேர்மாநதி - தந்திடுந்திருமஞ்சனந்தாங்கியே
சுந்தரதிற்கோர்சுந்தரமாற்றலிற் - சந்தமுற்றசவிக்கோணட்டேயொளிர். (௩௩)

பீடிகைக்கணெடுத்தணிபேரணி - மேடுகைக்கிடாமன்மாமழைமேனியின்
மாடுகைக்கிடாமன்மயன்மாயன்கை - வீடுகைக்கிடாமல்விரல்பற்றுதி. (௩௪)

எழுகவென்றிடுமெம்மையரின்கமி - ழழகுகுங்கதிர்மென்சுகக்காந்திபாய்ந்
தொழுகுதூயசெழும்பட்டொடோங்குறும்-புழுகுதோயம்போருகக்கைபோட்டனள்.

சங்கெழுந்திடச்சாமரஞ்சாய்ந்திடத் - துங்கபேரிதுவைத்திடத்தோகையர்
மங்கைமாமலர்ப்பாதம்பெயாத்தெழுந் - தங்கணுந்திருமஞ்சனமாட்டினுள். (௩௬)

சுவணச்சோதிமலர்ப்பீடச்சுந்தரி - சுவணத்தாமணிச்சோதிப்பூண்பூண்டனள்
சுவணக்காந்திவெள்ளங்கவிழ்சூடினள் - சுவணக்காந்திமெய்ச்சோதித்தாயின்பினே ()

பூமலர்க்கைதாளாமிடைபூகமீ - தாமெனுங்கழுத்தாதியுருப்பெலா
மாமெனும்மணியாவுமெஞ்சாமலே - காமன்றந்தைதன்காதலிபூண்டனள். (௩அ)

## திருமணச்சடங்காற்றியபரிச்சேதம்.

அலங்காரஞ்செயலங்காரக்கோயினி - விலங்குமுற்பலமாலினியின்புறத்
தலங்களியாவையுந்தந்துகாப்பாளுக்கு - நலங்கெலாஞ்செய்துநாமங்கள்பாடினார். ()

புலமைவாய்ந்தவிதியாம்புரோகித - னலமைவாய்ந்ததன்மைந்தர்நலஞ்செய
வலாமேன்மங்கைக்குமாமுட்டத்தப்பற்கு - மிலகக்காப்பிட்டாரேதமில்வேதரே. ()

சாந்திகாந்திமுதலச்சதுமறை - காந்தியோடெனக்காட்டியவண்ணமோ
பாந்தமாம்பலதானமெலாம்பரிந் - தேந்தியாற்றினரெந்தையெனம்மைக்கே. (௪௧)

முக்கனன்மிகுமோதமோடேவலந் - தக்கவண்ணஞ்சுழன்றனன்முபதர்
பொக்கமற்றிடபுண்ணியவாக்கினுற் - றக்கவண்ணஞ்சதாத்தெனச்சாற்றினர். (௪௨)

மாலைமாற்றிப்பொறியையிறைத்தனர் - தாலமீரேழுந்தந்தாட்குந்தந்தைக்குங்
காலையோரைக்கணக்ககலாமலே - பாலைவாரியள்பாணிபிடித்தனன். (௪௩)

தேவநாதர்களாடினர்தேவர்கள் - பாவைமார்பங்கயன்மனைப்பார்ப்பதி
யாவதாஞ்சசியோடுமருந்ததி - பாவெலாஞ்சொலிமங்கலம்பாடினர். (௪௪)

தேவநாதமாந்துந்துபிபம்பின - பாவலோரெலாம்பல்லாண்டியம்பினர்
நாவலோரெனுநாரதனுதிய - ராவலோடிசைவீணையசைக்கினர். (௪௫)

மூன்றிரண்டுகருவிமுழங்கின - மூன்றுவேதமுழும்முறையேத்தின
தோன்றிலான்றிருவின்மிடற்றேதிரு - வூன்றியூன்றியோர்மும்முடியிட்டனன். (௪௬)

ஆரியத்தைசமேனகையாடினுண் - மாரிப்பூமழைமாறிமாறிப்பெய்தார்
பேரியங்கவண்பெட்பின்முழக்கினர் - காரிக்கந்தருவாதியர்பாடினர். (௪௭)

என்னைவிட்டெங்குமேகிடலென்றுகொ - லன்னையாந்திருவுக்கொருவாரமா
யுன்னுமோர்திருவிட்டனனுத்தம - னென்னச்சொல்லியிருங்களியெய்தினர். (௪அ)

காளமாதிகலித்திடமாமண - வாளன்மாமலராளுடனோர்மணித்
தாளமேங்கிடத்தங்கமாணிக்கமா - நீளவோங்கிலவுமேல்லாசன. (௪௯)

பீடமீதுபிறங்கிடக்கண்டவர் - நாடிமிச்சடங்கொண்டநற்பேற்றினைக்
கூடுமாறுபெற்றோமென்றுகூறியே - பாடிப்பாடிப்பூதங்களிஸ்வீழ்ந்தனர். (நுo)

ஆகாவூகூவெனுமிசையம்பர - ராகாவூகூவெனுமிசையாக்கினார்
பூகவேகம்புனிதபுரந்தரா - நாகாநாரணநாதாவெனச்சொன்னார். (நுக)

தூயநன்மணச்சாந்தளித்தாவினர் - காயகற்பகப்பூந்தொடைமாலைநன்
காயவாசத்தடைகாய்கவின்பெற - நேயத்தார்க்களித்தானந்தநேசித்தார். (நுஉ)

ஆறுநற்சுவையைந்தண்டிப்பண்ணிறச் - சோறுமோகரைசொல்லற்கரிதெனும்
வீறுமாமணப்பக்கணம்வேண்டியே - யேறுமாற்கும்பிராட்டிக்குமூட்டினர். (நுங)

அம்பரந்தருமைந்தருமவட - னம்பரக்களிவெண்ணிதிபொன்னிதி
யெம்பிரான்றிருமாமணத்தொண்டினு - லெம்பிராட்டிகளிக்கவியற்றின. (நுச)

தேவமாக்களுமாக்களுந்தேங்கின - தேவமானமுமானமுந்தாக்கின
சேவைசெய்வதரிதரிதென்னவே - சேவையாசித்துச்செய்துளம்விம்மினர். (நுரு)

கடவுட்பூவணங்காணெங்குமாவின - கடவுட்பூஞெளிகாயத்தொளிர்ந்தன
குடைகள்சாமரக்கூட்டங்குலாவின - குடைகளாடன்முதனடங்கொட்டின. (நுசு)

பூவிசைரத்னம்பொன்மணம்வீசினர் - காவிரைத்தொடைகட்டினரெங்குமே
நாவின்ரதுவைரநான்மறைப்பாட்டுகள் - சேவிறைத்தனத்தாமிறைசெப்பினர். (நுஎ)

பண்டைநாதற்கும்பாற்கடலம்மைக்கு - மூண்டாமோகைக்கடிமணத்துற்சவங்
கண்டுகண்டார்முனிவர்தங்கற்புளார் - கொண்டகூதுகுலத்ஙதயார்கூறுவார். (நுஅ)

## அம்மையப்பனை யாராதித்தபரிச்சேதம்.

பூமுகங்கொடுபூவாளிருத்தலிப் - பூமுகுந்தனைப்புல்லியவீரிடை
நாமுறிந்திடவன்றோதாமோதரன் - காமவின்கரம்பற்றியகாதலே. (நுகூ)

வல்லதன்மணவாளனைக்கீழ்க்கணுன் - மெல்லநோக்கியம்மென்னகைபூத்தலெ
வல்லுங்கண்டுமெந்தவாசம்பூத்தலெ - புல்லியின்பம்பொருந்தினர்யாருமே. (சுo)

ஆரணிப்பாகையத்தாணிமீதெமான் - காரணக்கருணைகரியோடுறக்
கீரவாணிக்கிரீசைசசியுளார் - பாரவாணிசேர்மங்கலம்பாடினார். (சுக)

சுத்தமாகுசுமங்கலிமார்களா - லத்தியேற்றிவழித்தெறிந்தார்களால
முத்தொடொன்பதிரத்தினக்குப்பையை - யெற்றியெற்றிச்சுழற்றியெறிந்தனர். (சுஉ)

வெள்ளடைக்காயமுதமும்வெம்மணக் - கொள்க்கொண்டபூக்கோவைத்தொடைக
ளும், பன்னத்தார்ந்தவமுதுங்கெரண்டம்பர - ருள்ளத்தாமுவகைக்கடன்மூழ்கினா.

ஒன்றிரண்டுமூன்றைந்தேழொன்பானுட - னின்றதீவக்கிளைநிறையாயிர
நன்றுநற்றுளவம்புனற்றூபமொ - டன்றுசுற்றியக்கத்தெச்சிலோட்டினர். (சுச)

ஈரெட்டாமுபசாரமியற்றினர் - யாரெட்டானையுமானையும்போற்றினர்
காரெட்டாக்கொடையெம்பெருமானரு - ளோரெட்டாயிரநாமமுரைத்தனர். (சுரு)

துளபநண்ணுந்துயரறுசேவடி - யளவுகுன்றுமலர்ச்சகரர்ச்சித்தார்
வளவிலாச்சசிவிளக்கேற்றினர் - பளிலாப்பதபற்பத்தையாசித்தார். (சுசு)

சந்தரைபுரந்தாண்டவராகனர் - பசுந்துழாய்கமழ்பாதம்பரிந்தளி
தசும்பென்றோதிமொணவந்தாக்கிடு - நிசமென்றோதிஜின்மலப்பாதநீர். (சுஎ)

தந்திடகவெர்டுதாமரையானர - னிந்திரன்னிபவானொடும்பர்கள்
கந்தனென்பான்கோண்மாதவர்காதல்சேர் - மைந்தர்மங்கைமாரோடுமெகிழ்ந்தனர்.
அந்தரத்தவர்க்கெல்லாமருளப்ப்ரா - டெந்தைபிட்டவரிச்சைசிறப்பது
முந்துமூவரும்யாவருமூலமா - மந்தணனடிமலர்போற்றினர். (௬௯)

பெண்ணைத்தாரையிட்டேத்துப்பிராமண - னெண்ணத்தாராங்கிரதிசயானந்த
வண்ணத்தாயதோர்வானவரோடுறைச் - சுண்ணத்தாடிச்சுகக்களிதூங்கினன். (௭௦)

நித்தர்முத்தர்முமுட்சுடனின்மலப் - பத்தராதிபகுப்புளபண்ணவர்
சித்தனேர்சவுலப்பியச்சிரெணி - யத்தியாநந்தத்தாழ்வார்களாயினர். (௭௧)

## வேறு.

ஏகநாயகன்றேவியோடிலகுவெஞ்சுடர்நிற், ருகநாயகத்தரியணைமீதுறலறிந்த, நாகநாயகர்முனிவர்களுயகரெழுவாத், தோகையோடுதோத்திரங்களைச்சொற்றிவை யுரைப்பார். (௭௨)

ஏனமாகியெங்குடியுயிர்களையெலாம்புரந்த, ஞானமாகியமேனிசேரெங்கண்ஞா திருவே, தீனராகுமெம்மிச்சையின்படியிவண்செறிந்தே, யானவேதநாயகனைப்பெ யர்கொடிங்கமர்ந்து. (௭௩)

கமலவல்லியாகின்னருண்மங்கையைக்கலந்து, விமலனாமரங்கத்துப்பரிச னம்விளங்க, முமலமற்றவிம்முனிபுரி தீர்த்தத்தின்வரம்பி, லமர்ந்திங்கர்ச்சையின ருள்புரிந்தருள்கவென்றிரந்தார். (௭௪)

இரந்துகேண்முனியிண்டை யனரணிருடிகள்வான், புரந்தரன்புவிவிண்ணவர் முதலினேர்தமக்கு, நிரந்தரம்முமதிச்சையின்படியிவணிருப்ப, வரந்தந்தாம்மகிழ்வெ றுமினென்றெம்பிரான்வருக்கும். (௭௫)

இரவியாற்றரப்பட்டதாவிறப்பினைமூப்பைக், கரவிலாக்கிடப்பட்டதாக்கதிர்ம ணிக்குழுக்கள், விரவுவிற்சுவணத்தாம்வலையத்தைமகட்குக், குரவனுமுனிகாத்தியா டனன்கொடுத்துகந்தான். (௭௬)

சனதுபுட்கரணிக்குக்காறிக்கினிற்றருதி, மனமுவந்திடுமெணிப்பொனும் நடத்து யாமானங், கனதுயத்திருக்கோயிலைச்சிற்பத்தாற்கட்டி, யினமுயர்ந்தமாசுரர்முனி வரருடனிருந்தான். (௭௭)

தாபித்தப்பனைத்தாமரைத்தாயினைப்பரனைப், பூபித்தாயுடன்புரிசனத்தணிபரி வாரங், காபுத்தானவன் கமலனுதியர்களுங்களிப்பச், சோபித்தானவைந்துற்சவங் களையெலாந்தொகுத்தான். (௭௮)

ஐந்திராத்திரியெனுமந்தவாகமத்தன்றைந்த - தெந்தமாகியமங்களோவவ்வணமெல்லா
மிந்தநாளுங்கண்டருளுவனும்பர்கள்வாழ்த்தப்-பந்தநீங்கியபாரத்துவாசிகேளென்றுன்

ஆங்கிரீசமாதவனருண்முட்டமான்மியத்தை, நாங்கிரீசவேதியன்புகழ்வியாதரா னவின்றே, நீங்களீங்கறிதிமலியின் மணந்தனைக்கேட்டுந், தீங்குதீர்ந்துனுந்திருப்பெ றுமெனச்சொன்னுன்சூதன். (௮௦)

முற்றிற்று.

ஆக படலம் ௩௧-க்கு திருவிருத்தம் ௯௭௦.

முதலாவது-மூர்த்திமான்மியகாண்டம் முற்றிற்று.

ஸ்ரீ

# உ-வது க்ஷேத்திரமான்மியகாண்டம்.

## முதலாவது - ஆலயச்சிறப்புரைத்தபடலம்.

சாத்திராதிக்கப்புராஞ்சராத்திரமுந்தழுங்கொளிமணிமுடித்தேவ
கோத்திராதிக்கக்கோகனகத்தாட்கொண்கனுங்குலமுறுமறையுட்
சூத்திராதிக்கப்புருடசூக்கமுமென்றறிவுறச்சுணரேயுலகிற்
க்ஷேத்திராதிக்கமுட்டமான்மியத்தைக்கிளக்குதுமலக்கறத்தெளிமின் (க)

வேலையத்தகங்ககங்காளமீவளியெழுவாவுயிர்
சேலையற்றபக்கிமானச்சிக்கியக்கருக்குழி
மாலையுற்றிருக்குழிக்காவாழ்த்தும்பூவராகனு
ராலயச்சிறப்புரைத்துமறிதிர்மறைசெநலந்தணீர். (உ)

நாலுகோடிமோனிகளுநான்முகனவன்மகன்
காலொரடம்பரீடரொன்றுங்காணரும்வேதம்மருட்
கோலநாதமுனிசடங்கோவிக்குஞ்ஞானகோலமா
மூலநாதன்வாழுங்கோட்டமூலமறிதிர்நித்தரே. (ங)

ஈனகென்னுவினுன்குவேதத்தெம்மனெல்லாந்தெள்ளியே
களங்கெனுதவனுமெடுத்துக்காட்டுமொணிக்கப்பிரா
னுளங்கொணீலக்கோலநாதனுற்றுவாழ்சிமுட்டநேர்
விளங்குமொன்றின்றென்றுசரதமிட்டனனவ்வீவனே. (ச)

மதிமிலைந்தசடைமிலைந்தமாசிலாதகங்கைநீர்
மதிமிலைந்தமாசின்ஞானமூர்த்தியாஞ்சதாசிவன்
விதிமிலைந்தவிந்தசீவிமானமானவிபுலையில்
விதிமிலைந்ததிலையென்றத்தமீதெடுத்துப்பாடினுன். (ரு)

சிவனும்பிருகென்றேனுமவனுஞ்சீமுட்டச்சீருக்குநே
ரெவனுங்கணடதின்றென்றத்தத்திருபுயங்களேந்தியே
கவினுமினியசரதமாற்றிக்கருதுமயாவுமுற்றன
ரவியக்வியத்தான்றேத்துமறிவிரறிமினினிதரோ. (சா)

வாரணாசிதன்னிற்றாரகத்தைநயக்தவன்சிவன்
தாரஞ்சிநாதவருளென்றேதிமுத்திகாட்டல்போற்
பூரணபுராதனுவென்றேந்துகலுழன்புகலுறத்
தேரொணுமகாசுகாதிதேவனூரிலாவரால். (எ)

அத்தனேவிளித்தாளென்றுமயன்வணங்கியணங்குட
னித்தமும்மழ்முத்தக்காசூரணத்தைநிமலன்முன்
வைத்துவைத்துமோனமுற்றவாஞ்சையாவுமன்னினன்
றத்தனுற்றமுட்டத்தின்னுங்காண்மின்ஞானக்கண்ணரே. (அ)

மரமுஞ்செடியுங்கொடியும்பூண்டுமெல்லும்புல்லுநெல்லும்வெண்
புரமுங்காடுமேரிடுங்கல்லும்புதரும்பதறும்பூமியுஞ்

சரீமுங்தேவமுனிவராகித்தங்கினவத்தலவணி
யுரமும்வரமும்பகர்வரெவர்களுரைமினுபயமன்றவலீர் (க)

குறுமுனிக்குவேண்டுஞ்சித்தியீந்ததந்தக்கொன்றைறே
வெறிபிடித்தவாகமத்தைதவிண்டபுண்டுவீடவே
முறியடித்தநீதமூத்தவெண்டிக்காலூரவீட்டியே
பொறிசெய்மெய்யளித்ததிர்தப்பூவராகக்ஷேத்திரம். (க0)

மாலளிக்குமெட்டிரண்டுபத்தொன்றுகருத்தனதி
யோலளிக்குந்திமைதீரவேண்டியவருத்திர
னூலளிக்குமெறுழியாரைப்பூமிறுனைத்தறுதனமுடி
மேலளிக்குமாறன்றேற்திவிளங்கிரியென்றுமிறுன். (கக)

சிவனுமலேயிலமலேயோடுசேர்ந்தபூவராகனர்
கவருமிந்தச்சில்லியின்கடத்தில்லன்றேகலையமுதத்
றவறலன்றிமூன்றனப்பேர்நதிகள்யாவுந்தவமிருந்
திவனெளிப்புதறிமினென்றவிருடிகட்கிசைத்தனன். (கஉ)

விருத்தசயிலமானவச்சிவப்பிரானேவீட்டிடக்
கருத்தமுசுண்டனென்றவசுரன்மாளவாண்டகளிறுரு
வொருததனுகப்பிலாபாடாண்டநாசமுற்றவோதரீர்
பெருததநீர்த்தமாகுமுட்டப்பெருமையார்பிதற்றுவார். (கங)

சனகநாரதன்மரீசிகலுழனிவர்கடற்பர
வனகன்வைகுந்தத்திலாமனேடிவந்திவ்வயன்றவ
கனகமாகுமுட்டமுற்றுக்கனவிசேவைகண்டுதன்
னினவுமுற்றிதாகுநிமலமுற்றவித்தலம்மரோ. (கச)

பதுமமாகுகற்பநாளிற்பற்பநாபர்தந்ததோர்
விதியிறுவியறறுபூசைமேவுநூற்றெட்டுததலப
பதியிலீதிப்பாரினுக்குளாதியாகும்பரிவுளீர்
முதியபருவம்வருமுனேடிமுட்டங்கண்டுய்ந்திடுமினே. (கரு)

முததராயவித்தைதமாளமுன்னிஞேர்முந்நீருடை
வைத்தவசுதையார்க்குச்சீவவடிவுதேவன்வடிவிவை
மொத்துவடிவுமுதலவோதுமூதுஞானமயப்பிரான்
சிததியீயுமுட்டநேடிச்சென்றுசெடியையொடிமினே. (கசு)

சாமவேதஞ்சாதித்தேத்திச்சாலவீறுபூத்தன
காமநாதனகனலியோதிகம்பட்டாளேக்கெளவினன்
வீமனுமாமனுனும்வேதனுனுவெணகிரி
யாமனுனுமீதிலாற்றுமாண்டவத்திலாயினர். (கள)

கேஷமினம்புயத்தண்மாலேக்கேற்றமனறவலாளரே
நாண்முனைநான்குவேதமேனியானகலுழனர்
வாண்முனைபூவராகவரதனர்வாழ்மாட்சியை
யாணமுனைஞானமரிசிக்கருள்வதருடமறிதிரால். (கஅ)

மரிசியென்னுமுனிவன்கலுழமறைப்பிரானேவணங்கியே
யுரைசெய்நாதமுற்றுமுற்றவோதியாளருனேவிடத்

தரைசெய்வாணிலெங்குமற்றதாமுணர்ந்தயானுனக்
குரியசீடனுயினேனுக்குற்றசங்கையாவதும். (கக)

மாற்றியாட்கொளென்றுதாளின்மீதுவீழ்ந்துவாழ்த்தியே
யார்த்தியோடுகைகளாத்துநிற்குந்தன்தையப்பனைப்
பார்த்துநிற்கெஞ்சங்கையென்னப்பறவைவாதபாரினே
மூர்த்திதீர்த்தகேத்திரத்துண்மூர்ந்தநின்றதெதுவரோ. (உ0)

அகிலதீர்த்தவக்கிரத்தமார்ந்தவமலனடிமலர்
நிகிலகாலமும்விடாதுநின்றநிமலவருளோனு
மிகவின்ஞானமரிசியறிதியீறிலாச்சுகந்தரு
நகவின்றூயகேத்திரச்சீர்நவிறுமென்றுநவிலுமால். (உக)

அரியினுனுமடியரானுமாயகேத்திரம்மெலாந்
தெரியிறெய்வஞ்சித்தமாரிடஞ்சுயம்புமாணிடம்
பெரியவிவையைந்துட்சிறந்தபெற்றியுற்றநூற்றெணி
லுரியதொன்றிவுலருக்கெல்லாமோங்காதிக்கமுற்றது. (உஉ)

அதையென்ருதைதாதைநீயென்ருனபாசவன்பிஞல்
வதைசெய்சன்மக்கொத்தைமாளவழங்கலானேனதன்பெயா
சுதைசெய்மிக்கசிரமவரணிசோதிசேரானந்தபவன்
நிதிசெயாதிவேதயர்கநிமலமாத்தலம்மரோ. (உங)

கட்டமிட்டவொட்டருற்றகாதுசெல்வங்காதுசீ
முட்டமென்றுமுனிவரேத்தமுன்னநின்றதத்தலந்
துட்டமுற்றவாதியிரணியக்கணேத்தொலைத்துவாழ்
பட்டமுற்றநீலராம்வராகர்பழையகேத்திரம். (உச)

திதியளித்தவிரணியாக்கன்சிதையவந்தசுவேதமா
மதியளித்தவெண்வராகர்வாழுமவனியாட்குநல்
விதியளித்துகந்துபுல்விவீற்றிருந்தவீறுசேர்
பதியதற்குநிகருரைப்பதெவர்திறம்பகர்விரே. (உரு)

பிரமனையோதிவைத்தபரிச்சேதம்.

முற்றுமற்றகன்றமூலமுற்றதாமதத்திலே
சற்றுமோதிச்சார்கிலாப்பசுக்குழுக்கடங்கதி
யுற்றநாதனுள்கிமூலமுற்றவோரெச்சத்தையே
கற்றவேதநான்கிச்சிட்டிக்காட்டினனக்காலையில். (உசா)

பூவெழுந்துவந்துளான்பூவானமெங்குநோக்கினு
ஞேவென்றியாருமற்றவான்கண்டுட்கிமூசுபையுளா
ஞவென்றேங்கியோலமிட்டழுங்காலத்தவ்வாண்டவன்
றேவென்றேதவன்கட்டோன்றித்தெளிவுதந்தத்திசைமுகன். (உஎ)

திசைமுகனையோதிவைத்தபரிச்சேதம்.

காணநின்றவன்றன்சங்கையாவுங்காணுதாக்கியே
யாணவங்கொண்மூலமாயையானவெச்சங்கட்கெலாம்
பூணவங்களேகுமாறுபுவனதேகம்பொறிமுதல்
வேணுமாறளித்தியென்னவிஞ்சைசயீந்தவிவணரோ. (உஅ)

அய்முகப்புத்தேண்முகத்தனந்தவேதமோதினன்
பயமுகத்துமீனநாதன்புாவிலக்கணங்களை
நயமுகத்தறிந்துநூறுகேள்வியாகநாட்டிடும்
வயமுகத்திராமகாநுசாசித்தானவ்வனசனே. (௪௯)

சிஞ்சுமாரசீபதிககண்டிகழுநாவிலக்கமா
யஞ்சமுற்றசோதிடத்தையானவுபயமறையினைக்
கஞ்சனுறறபின்னரச்சங்கருடணப்போகடவுள்பால்
வஞ்சமுற்றவைதிகபபோர்கருமம்யாவும்வாசித்தான் (௫0)

பின்னரும்பிரததியும்மனைறிடும்பிராணிடம்
மனனுஙகாலவிஞ்சையோடுபூசைவிஞ்சைவாக்கமும்
பனணிடதெளிந்தனுருத்தபெயர்கொள்பாணிடந்
து எனிடும்மவ்வத்தியாததுமத்துவிதததுகளற (௫௧)

யோகவிததைதபததிஞானமுற்றவித்தைமற்றவும்
போகவாசுதேவனுதைப்பெற்றபின்னப்பூமக
ளேகநாதவென்றெணற்றவாணடெலாமியற்றவர்
தாகமோடியற்றித்தம்பிரானைக்கணடுதணிவிலா. (௫௨)

ஒகையோடுபோற்றிவாழ்ததியோவேதாந்தவொருவரின
வாகையானவடிவையுட்புறம்பிலென்றுங்கண்டரே
தாகமோடுபெலியியற்றிடற்கியன்றசாமியை
காதநாதவருள்கவென்றவர்க்கந்நாதனருளுமால். (௫௩)

வட்டமாம்பூவுந்திவந்தமைந்தவுன்றன்மாதினத்
திட்டகாலமதையெட்டாவியற்றியப்பகற்கணே
யெட்டதாகுமென்சுயம்புமானங்கணடிங்கேத்தெனு
வட்டமூாத்திகோயிலாதியடைவவற்குக்காட்டினன். (௫௪)

எட்டுககாலமும்மொவ்வொன்ருயேத்தியர்ச்சியிஃதலாற்
சிட்டரங்கமேசிமுட்டம்வேங்கடத்தொடாதியா
மட்டமாவிமானசேவையாக்கிவைத்தவற்கெமா
ணிட்டமோடிவ்வண்ணம்பின்னரினிதுபேசினனரோ. (௫௫)

• எததனைப்பலூழிபேரினுமமம்மாவென்னிச்சையில்
வைத்தநற்சுயம்புமானமாள்வதில்லைமகியுளோர்
பித்திஞேலோர்காலஞ்சேவைபேணிலாதொளிக்கினுஞ்
சததசத்துநேடுஞானிமார்கள்காணவாவினல் (௫௬)

முன்னரம்பொன்னுதிரங்கர்தற்குமுன்பூசனைப்
பின்னரம்பொன்னுதிபூவராகர்க்குப்பேண்பூசனை
யன்னைமுன்னமாளுமப்பன்வேங்கடத்தான்பூசனைப்
பின்னர்கண்ணன்பதரியாதியெட்டுமொற்றிபூசனை. (௫௭)

பகுதியற்றபேர்கள்கண்டுபெணிவதொன்றுபகுதிசேர்
விகுதியுற்றபேர்கள்கண்டுவிதியறுப்பதொன்றுமாத்
தகுதியுற்றவெண்ணிரண்டுதாமரைப்பூவாணிறம்
மிகுதியுறறவிமலர்வாழ்விமானங்காண்டியென்றனன். (௫௮)

# கேத்திரமான்மியகாண்டம்.

பதியநின்றவிருவகைத்தாம்படிவங்காட்டிப்பளகிலா
விதிரீயர்ச்சியிவ்விரண்டுவிமலைவிமலர்தமையரோ
சதியறுக்குநினதுபுவனிதன்னினுமந்நாவலம்
புதியபுவியின்மீதினும்பொருத்தியாற்றுபவியெனு. (௩௯)

பரமனேதியெட்டுமிட்டுப்பாய்மிருகினன்பினர்
வரமனேதிமத்துமன்னன்மகியுளேசிறந்துள
சிரமதாஞ்சீமுட்டமெய்திச்சினகாரஞ்செய்தருங்கலை
யரிவையாந்தன்மனைவிமகரொடெய்திநின்றதத்தலம். (௪0)

## வேறு.

## சினகரமியற்றியபரிச்சேதம்.

மரிசியென்றுரைக்குமதிநுகேளந்தமான்மகன்மான்மலர்ப்பதத்தைத்
துரிசிலாதேத்தித்தேவனின்வடிவைத்தினமும்யான்பூசனையாற்றிய
பரிசுறற்கினியபடிவமெஃததனைப்பரிந்தளித்தருளெனப்பரிந்தே
யுரைசெய்தானதிதிவிதேரப்பக்குவத்தினுக்குகந்தவெய்மீசன். (௪௧)

சுயம்புநூற்றெட்டெட்டோன்றலாமெட்டெட்டோன்றுமாவிக்கிரகங்கள்
சயம்புகளீரெட்டவைகளிலெட்டுத்தழைத்திடுமப்பிராகிருதம்
நயம்படுமினியபிராகிருதம்மாநாட்டுவரிருவகைத்தாகப்
பயம்படுமோயையுறுமவர்பாரார்பரமமாமப்பிராகிருதம் (௪௨)

பிழையறுமுனிவீர்பிரகிருதிக்குட்பிறங்கிடுசீவர்கள்விழிக்குத்
தழைவுறக்காணும்பிரகிருதிப்பேர்சலிகொளும்விக்கிரகம்மே
பழையனவாகப்பகருமவ்வெட்டும்பங்கயன்பதியினிற்பதிட்டை
விழைவுடனாற்றியிவ்வுலகதனில்விளக்கினன்விமலனுணையினன். (௪௩)

பொன்னியின்வடபாற்கீழ்க்கவிகுடக்கிற்புகழ்பெறுமிருடிவந்தியத்திற்
குன்னியகீழ்ப்பால்கருடமாநதிக்கேயோங்குறுமவாசியினுயர்ந்து
மன்னியவனமைந்தியோசனையுந்திவாய்ந்துளதாயிரத்தெட்டாத்
துன்னியதீர்த்தத்தொகுதிகளவைக்கணுவேணுந்தூய்மைசேர்நிலத்தில். (௪௪)

என்னையாளெனத்தெம்பிரானருளாலெகினமேகடவுவான்சிரத்தை
மன்னியமனத்தாலானந்தபவனமதிலொருபரமபாவனமா
நன்னயத்தாம்விமானமேபுரிந்தானந்திடுமுவ்வியாக்கிருதி
முன்னிடுமூன்றுநற்பிரகாரமூாத்தமாமூலமாவெழுத்தோ. (௪௫)

சிகரமெனவுமற்றுளமணுக்கடிகழ்பெறுமண்டபக்குழுவா
மாகாரமெனவுங்காயத்திரிப்பேபரம்மனுசுகமருணுசிப்
பாகுரமெனவும்பாண்மையோதியான்பணிவிடுசோமசூத்திரத்தில்
வரத்துறவிணுப்புராணகவும்யோகவருக்கமேயிருப்புகளெனவும். (௪௬)

வின்னயத்தோடுவினங்குறப்புருடசூக்கமாம்வேதமும்விமலை
தன்னயமோதுசீபூநீளாவின்சூக்கமுந்தயங்குறவுரங்க
மன்னியவொளிசேர்மண்டபமெனவுமாட்சிசேரிந்திரைமகிழத்
துன்னியதுகளின்மண்டபமெனவுந்துலக்கினன்றூயமாமலரோன். (௪௭)

சுருதியம்மிருதியோடிதிகாசஞ்சுருக்கமினற்புராணங்க
டருமிவைக்கியைந்தவுபயங்களுமச்சகத்திரசாத்திரத்தொகுதி
வருமிவையெல்லாமொன்றிரண்டாறுநான்கெனும்பன்னிரண்டாறு
தருமொருநூறாயிரமினும்பலவாச்சாற்றமண்டபங்களாச்சமைத்தான். (௪௯)

சக்கரம்வளைந்தநாமங்கண்மலிந்துதயங்குமாமண்டபத்தெதிரின்
முக்கியமாயபெரியதென்றோதுமெம்பிரான்மூலஸ்ரீமாயை
யைக்கரும்பலியாம்பீடமென்றாற்றியாவயிற்கடிபுரிவிமல
விக்கிரகங்கட்கினியதத்துவத்தைவிதித்தணியாக்கினன்விதியே. (௫௧)

அழிவறுநிகமாந்தங்கள்கேதனமாயவிர்சடரெறிவியன்பகலாற்
கழிவறுதிவக்கம்பமாநாவேழ்கனறபுலமதிலழிவில்லாக்
குழுநிறைபூதேவின்கணநிறையாக்கூற்றுறைபொலந்திருவடியா
வழுவகல்வடக்கிற்சேனையர்கோனுவகுத்தனன்மலாமிசைக்கிழவன். (௫0)

வாருணப்புலத்துமயர்வறுமதிசேர்மங்கலகுணசுகத்தாழ்வார்
பிருணப்புகலாப்பேறடைந்துளமாப்பெற்றிசேரடியர்தம்பீடா
ருருணப்புகலாதோங்குமண்டபங்களுகந்துறவாக்கினனும்பன்
காருணியத்தாற்காத்தருள்புரியக்கருந்தவம்புரிந்தவுக்கமலன். (௫௧)

மூவ்வியாக்கிருதமெனும்பதணத்துமோதமார்பரமவைதிகமென்
செவ்வியாபகமாம்பாஞ்சராத்திரத்திற்றெருணமொழிக்கியைவுறச்சமைத்துக்
கவ்வியமூன்றுங்காப்பினுத்தரத்திற்கவினுறசகத்திரக்காலா
னவ்வியன்மானநாட்டினனகன்றநவமணிமண்டபமாதோ (௫௨)

எழுதருங்கேள்விநான்குமேசுவாகாகாரமாவெரிமணிப்பொன்னுற்
றெழுதருந்தோமில்கோபுரநயினாராகியேதுளக்கமுற்றோங்க
வழுவதுவாசற்காப்பிடுநித்தமாஞ்சுகஞானவீரியர்கள்
பழுதறவிளங்குமண்டபப்பரப்பும்பலப்பலவியற்றினன்பிரமன். (௫௩)

தென்வடகிழக்கிலம்பதென்றடியிற்செய்தொளிரரங்கமண்டபமும்
பின்னிடவிடையினூற்றிருபத்தாறடியினிற்பிறங்குமண்டபமும
மன்னிடைமூன்றுமாரையினுழியேவயங்குநூற்றிருபதாமடியிற்
பன்னிடையொன்பானிதிப்பொன்னுற்பகலகளொளித்திடுசிகரமும்படைத்தான். ()

உத்திரத்தினிற்பத்தென்னுநூற்றுக்கான்மண்டபமீசனுரிடத்தே
நத்துறதண்பூமணம்விரியொளிசேர்நன்னயவசந்தமண்டபமுந்
தத்துறுசவிசேர்சாதவேதாவினம்பரந்தன்னைத்தற்பரற்கு
மொய்த்துறுகடவுண்மணங்கமிழாறுநீஞ்சுவைமுழுதுமாற்றுதல்செய் (௫௫)

திருமடப்பள்ளியினைத்தனைப்புல்லுந்திருவணிப்பனுவலாட்டிக்கா
மொருமடப்பள்ளியுகக்குமாறுஞற்றியோங்குறுதக்கணக்கணுடை
வருமடக்கில்லாப்போகமணடபத்தைவண்ணிருதித்திசைவழுங்கும்
பெருமடக்கில்லாநூறெனுங்காலாந்பேணிமெண்டபந்தனையும். (௫௬)

மான்மணித்தேரோன்மாதிரம்பலவாமணியணிப்பொன்னிலாம்வையந்
தான்மணித்தாமமண்டபத்திரளுந்தடத்தொருகீழ்ப்புறந்தயங்கு
வான்மணிவீரவைரவக்கோனும்வடக்கினிற்பாகசாதனனு
மான்மணிக்கோவுந்தக்கணக்கேத்திரத்தையாண்டுறுகடவுளரும். (௫௭)

# கேத்திரமான்மியகாண்டம்.

மேக்கினிற்றக்கராங்கணுநிக்கவேந்தரும்வீவிலாவாகை
தூக்கியவபிமானப்பெருவலிசேர்துணைப்படைக்குழுநிறைவுற்ற
பாக்கியமிகுந்தகடிபுரியெண்டோட்பகவதியெனுமொருசத்தி
நீக்கறவல்விராப்பகலிமைகோட்டாதுறநிறுவினன்விதியே. (௫அ)

சயவிசயாதிமுத்தர்கண்மருவிச்சார்புறுகடிசெயத்தகுந்த
சயமிகுபரமபாவனமானசோபனசுகவிமானத்தை
வியமுறக்குடக்குவாயிலோட்டாற்றிவாச்சியநிதியிழைப்பூண்க
ணயமுறுகலைகணீதியொன்பான்றுனியமண்டபநாட்டி. (௫௯)

அம்மையோடப்பனதியின்மேவியகிலமாண்டளித்திடற்காகச்
செம்மைசேர்சுத்தசத்துவமாயவப்பிராகிருதமாஞ்சேடன்
கொம்மைசேர்மேனிமீதுறக்குலவுகோயிலாஞ்சயனமண்டபத்தை
நம்மையாள்பிரமன்வடக்கினிலாற்றிநசையெலாமுற்றினன்மாதோ. (௬0)

கோசமண்டபங்கள்வடக்கினிலிட்டான்கோலமாதவன்றளிகைக்கு
நேசமாங்கனறிக்கினிலொருகூபநிறுத்தினன்காலைப்பூசைக்குத்
தேசுலாஞ்சுவேதநதிப்புனலிட்டான்றிருவபிடேகமாற்றிடற்கு
மாசிலாநித்தியப்பெயர்தடத்துமஞ்சனந்தனைச்செயவகுத்தான். (௬௧)

## பிரமோச்சவப்பரிச்சேதம்.

மண்ணகம்வானத்தண்ணகமனைத்துநிறைந்துபல்லுயிர்களைமகிழ்ந்து
கண்ணகன்ஞானக்கண்கொடுநோக்கிக்கரிசறக்காத்தருள்கடவு
டண்ணிலையாயவுலகவிக்கியாதசச்சிதானந்தவிக்கிரக
வண்ணலையானந்தக்கடமதனிலேந்திராப்படிக்குத்தாபித்தான். (௬௨)

பரிசனபரிவாரங்களம்மையர்கண்மறறுளோர்பரிந்துறுபாத்தி
வரிசையின்பேற்றைநேர்நிரைநிரையாவைத்தவைகளிலவரிருப்பப்
புரிசையிற்பொலியவினிமையிற்போற்றிப்பூரவாகனிதருமகராம்
வரிசையின்சனகனத்திரிபிருகுகத்தமன்றக்கன்மாவசிட்டன். (௬௩)

சிந்துரநீலலோகிதனகத்தியன்புலத்தியன்முதற்சிறுவர்
நந்துறுகளியானந்துறக்கலந்துநாகர்கணுகர்கள்சூழ
வெந்தையென்னேனத்தரும்பெருங்கடவுளிருவகைமூர்த்தியாமிறையை
யந்தரத்தவருமந்தரத்தவருமருமறைக்குழுவுமாங்கேத்த. (௬௪)

பன்னருங்கோடியருக்கருங்கூசும்படிவராகன்முடிவேய்ந்த
வுன்னருஞ்சிரசையுற்றவராகமுகத்தராய்ச்சாந்தராயொளிசெய்
நன்னயக்கோட்டினுனியிற்பூமாதையுங்கொண்டயாராநடுவினிறுட்டி
மன்னயத்தோடுவிளங்கிருகைத்தாமரைமலருடையராமகிழ்ச்சி. (௬௫)

பூத்தநற்றெய்வுருப்பைப்போலராக்கவசகுண்டலமண்டிதபூண்க
ளேற்றிடுமெய்யுடையராமார்பிலிலங்குறுபலவணியினராச்
சாத்துறுமாறிவலகதாதரராத்தக்கணமுகத்தராத்தழங்கு
சீர்தகிசேர்கவுத்துவத்துறுமாறஞ்செறிவனமாலைமார்பினராய். (௬௬)

நூபுரதரமாபாதபங்கேருகத்தர்நூங்கிருணுங்கு
மாபரதேவமணியணியாவுமங்கிலாதுருவராமவரைப்

பூபரமாகநாட்டியபாதப்பூவராகோக்கிநெக்குருகித்
தாபரமுருகுங்கவிகளைத்தென்மாமொழியுடன்பாறிஞன்றூழ்ந்தான். (௬எ)

தண்டெனவிழுந்தானெழுந்துபின்றெழுதான்றடையறுமார்த்தியின்மூழ்கித்
தண்டெனவுடலமவசமுற்றென்றுந்தானுணராதுகிழ்க்கிடப்ப
தண்டர்கோனனபூவராகப்பேர்மலனரறிந்துவீழ்ந்துளநல்
லணடமீபவனமவிதியினைத்தொட்டேயெடுத்தருள்புரிந்தனனன்பன். (௬அ)

எடுத்திடுமயனைநோக்கிநம்மேனவீசனரிண்டையோயுனக்குத்
தடுக்கரும்வரமென்கேளெனவவனுந்தம்பிரானின்னிலந்தனிலே
விடுக்கருமூழிதோறும்வீற்றிருந்துவிபுலையோர்விருப்பமீந்தொளிருங்
கடுக்கரும்வரமீயெனவவனவ்வாறேமெனக்கருணைசெய்தனனல். (௬௯)

சிலைமயத்தேவைமானத்தைப்புரிந்தத்திருமலர்மகன்றிருகில்லாக்
கலையுரைப்படியேதாபித்தபின்னர்கவின்றருகும்பமார்ந்திங்க
ளலையுருப்பரணிநாளினிற்றுசவாரோகணமாற்றியொள்விரதந்
தலையுறவாக்கிமாசிமாமகத்திற்றண்கடலாடுசாற்றி. (௭0)

அவபிருதத்தைமுடித்தபினவரோகணத்தினையாற்றியெம்மடிகா
டவமிருந்தேத்துமென்பலிநாளுங்கொடுமெகிழ்ந்திவணுறுகென்றப்
பவமகல்வரங்கேட்டடைந்தினுநீங்காப்பருந்தவமுற்றனனென்றே
யவமகன்ஞானக்கலுழனுமரிசியறிந்திடவருள்புரிந்தருளும். (௭௧)

வஞ்சராயழுங்கிவதையிறப்பிறப்புமாறிலாதனிதியாங்கலையி
னெஞ்சராயளிப்போன்கடவுளன்றறுத்துநேரெறிக்கிடுமவன்றனே
நஞ்சராவைத்தோனதனென்றலற்றுமவர்தெருநான்மறைமௌலிப்
பஞ்சராத்திரத்தின்பணிப்படிப்பதிட்டையாக்கினன்பாக்கியத்தயனே. (௭௨)

இப்பெரும்பாஞ்சராத்திரமம்மாவிருடிகாளிதைமுனம்பிரமன்
செப்பருங்கன்னஞ்சிதைவுறப்புடைத்துத்துணைமறைக்குழுக்களைப்பறித்து
நுக்கிடுமோரைநூற்படிச்சிருட்டித்தளித்தவனுளங்கொளத்தோன்றி
யிப்பெருங்குடும்பகோடத்தையெம்போல்வார்க்கிலாதாக்குமாகமமே. (௭௩)

இரண்டெனுமாயிரம்மொருபகலாவிருப்பவனிரண்டுமூன்றுன்னு
ளரணடிடாதாளவயமுகக்குருவாலறிந்ததன்னவன்சொலத்தெரிந்தான்
குரண்டிமார்பாநுவைவசுதப்பேர்மனுவெனுங்கோமகன்கற்றுக்
குரண்டம்வண்கரண்டமுரண்டமார்வயல்சூழ்கோசலநாட்டிகன்மன்னன. (௭௪)

கரும்புருவினிய்விக்குவாகப்பேர்க்காவலனறிந்தினும்பலர்க்குந்
தரும்படிவந்துவசிட்டன்பல்லோர்க்குச்சாற்றிடச்சத்துவக்குருக்க
ளரும்பெரும்பொருளாவமைந்தொருநிமையுமமைவிலாதஞர்படும்பிறவி
திரும்பருந்தியர்தீண்டரும்பாஞ்சராத்திரமுடையவர்தெருளே. (௭௫)

ஐந்திராப்படியச்சுயம்புகளாகுமப்பிராக்கிருதத்தைமனிசர்
நைந்துறுபிறப்பைநசித்திடுசிலையாநாதவேதாந்தத்தானவிலு
மந்தமாம்பிரகிருதியினலமைந்தவர்ச்சையைத்தாபித்தானதற்கு
முந்திராப்பகலுமைந்துநற்பருவகாலமாஞ்சாறுமேமுடித்தான். (௭௬)

எழுகடல்வளைந்தபெருந்தடப்பாரிலெண்வகைச்சயம்பினுளிரண்டாந்
தொழுமடற்புவியையுத்தரித்துலகோர்செய்திடுகருமசங்கற்பத்

தழிவறநாளுஞ்சுவேதவராககற்பமென்முசரித்துகந்த
வழிவருகாமமுற்றுவாழுற்றவண்மைவாராககேத்திரமால். (எஎ)

சுருள்விரிசாலிக்குலையுயர்கமுகந்தெங்கரம்பைக்குலைபலமா
வுருள்கனியுதிரச்சலஞ்சலத்தோடுமோங்கிடுகளிறுகளிகலித்
தருமொளிவீசவெழுந்தண்டர்குளங்களேரிகண்முதலியதழுங்கத்
திருமணியிருண்மேய்ந்தொளிரிவரேழுமாடமார்திருமுட்டநகரே. (எஅ)

பிறைச்சடைமுடித்தபிஞ்ஞகனமரர்கோன்சுரர்முனிவரர்பிறருங்
கறைச்சடையறுத்தகருத்துளவவர்தங்கற்புளமனைவிகண்மைந்தர்
தறைச்சடையறுத்துப்பாதலத்தொளித்ததகுவனைச்சாய்த்ததற்பரனு
யறைச்சடைவசிக்குங்கிருட்டியாமீசனமர்தலக்குடிகளாயினரால் (எகூ)

இப்பெருங்குடிகளிலங்குறுமூரின்வளஞ்சொலவெம்மனோர்தரமன்
றப்பெருமாட்சியென்பதிவ்வகிலமறிந்துளதிசைக்கிலவென்னுச்
செப்புவரிப்பிணப்பெருந்தலச்சீரெனுங்கடலமுதினையடியே
னெப்பறுஞ்சிறியநாவினுனள்ளியோதுவனுகந்திவண்கேண்மின் (அ0)

அறிதிர்கொனைமிசாரணியத்தினமர்ந்துடன்மேயபேறடைவா
னுறுதிநெஞ்சுடைமைப்போதும்பயனில்லாப்போதுபோக்கரதவுத்தமத்திர்
செறிதல்செய்வேதச்செம்புளாங்குருவின்சீறடிசிரமுறுமரிசிக்
குறுதியாமோக்கப்பேற்றினையுதவலுதவுதுமெனச்சொலுஞ்சூதன். (அக)

முதலாவது ஆலயச்சிரப்புறைத்தபடலம் முற்றிற்று.

திருவிருத்தம் - அக.

ஸ்ரீ

## உ-வது துருமனென்கிறமகாராசன் இந்திரனவைபுகுந்தபடலம்.

அடிமகந்தனையாற்றியப்பசுவபையாவியையக்கியை
யுருவையாவையுமும்பலீகாத்தவற்குதவுமுத்தமபத்தர்காள்
பெருமைமேவியகருடனோர்மரிசிக்குப்பேசியபிழையிலா
துருமனிந்திரனவைபுகுந்திடுதணிவிலாங்கதைசொற்றுமால். (க)

வேறு.

முனிகளூற்றொருமுங்கடவுளாமுகுந்தனார்பதத்திற், கினியராகியவிருபிறப்பாளரா
யினத்தீர், முனிமரீசியினகங்கொளவித்தலத்துற்றோர்க், கினியபேறுவந்ததுசொனதி
யான்சொலவுணர்வீர். (உ)

ஆதிசிட்டிநாளாகியசுயம்பெனுமனுவி, னீதிநற்குலத்துதித்தவோர்நிருபனல்லொ
ழுக்கன், சோதிநன்மறையாதிநற்கலையெலாந்தொக்கா, தோதியோதியேயோதியின்
பிருந்துளவொருவன். (ந)

## இந்திரனவைபுகுந்தபடலம்.

துருமனென்கிறமாட்சிசேர்புகழ்மலிதோன்ற, றருமமென்பவையாவுஞ்செய்வள் ளலிற்றக்கோன், கருமகாண்டத்தின்கரைதெளிந்தவ்வணமெல்லா, மருமமின்றியேநடத்திவண்புகழ்பறைமலிந்தான். (ச)

சாதுசங்கமுங்கலைவலோர்சங்கமுந்தணவா, வாதுசங்கமுமறைப்பொருளினையுசாவுவதுங், காதுகார்முகவிஞ்சையிற்கையறத்தேர்ந்தெப், போதுநற்பகலெனச்செய்தேபொலிதருபுனிதன். (ரு)

எந்திரத்திரதந்தெளிப்புடைக்கலாவிகன்மா, வுந்திவிட்டெறியாதவொண்கந்துகமுறத்து, வந்துபோகலாமாமலைகாற்படைவெள்ள, மிந்தவண்ணமாம்வலித்தொகைப்படையுளவிறைவன். (சு)

மனுவின்மாநகராசிருக்கையிலிருந்துலகைக், கனிவினிற்புரந்தருளுநாள்காசினியரசர், பணியினிற்பணிந்திடரறவிறைமையைப்பயக்கத், துனிவிலாதவனச்சுவமேதமேதொடர்ந்தான். (எ)

உலகிலோங்குறுமுடியணிமன்னரையொருங்கே, யலகிலாததனபுயவலமேகாவெயனணிந்து, திலகமாகியதிணிபரிமேதத்தைமுடித்துக், கலகமாறிகோவலர்போற்றுசீர்கொளவி (அ)

கொக்கின்யாகத்தைக்குறைவிலாதாற்றியபேற்றூற், சக்கிரனுக்குற்றஞ்சிமெலாமூலவுசீர்சார்ந்தே, யக்கிராசனஞானவனந்தரத்தொருநா, ளுக்கியேறியத்தேவர்கோனவைக்கணேநுழைந்தான். (கூ)

நுழைந்தமன்னவனுங்கவிர்நூறுயோசனையிற், றழங்குவாச்சியத்தமனியவின்மணிதழைத்து, முழங்குமுப்பதுமூன்றுகோடிச்சுரர்முனிகள், வழங்குநாற்பத்தெண்ணாயிரர்வாழ்த்தவைகண்டான். (க0)

அரம்பைமேனகையுருப்பசியாதியர்நடிப்பச், சுரம்பெய்நாரதாதியர்சுகவிசைசொரியத், தரம்பெயைந்தருவேட்கையீந்தடிமிசைத்தாழ, வரம்பெய்மாவெளிச்சுதர்மையாமவைதனின்மன்னே. (கக)

கதிர்சொரிந்திடுகாந்திசேர்நவமணிப்பொத்திச், சதிர்சொரிந்திடுசோதிமாப்பொன்னொளிதழங்கு, முதிர்சிங்காதனமீதில்வானவரெலாமூச, வெதிர்சிங்காசன்றிந்திரனரசுவீற்றிருந்தான். (கஉ)

வீற்றிருந்துளசசிமணாளன்றனைவிளித்தே, யேத்திமன்னவனினிதுறப்பணிந்துநிற்குழியு, மாற்றன்மிக்குளவிந்திரன்வந்துளவாசற், கேற்றவோர்முகமனுஞ்செயாதிருந்தனன்மாதோ. (கங)

வந்தமன்னனைவாவெனலற்றனன்வாழ்த்தி-யிந்தவாசனத்திருவெனலற்றனன் [illegible] ரெந்தவூர்நகரென்பதுமற்றனனிமையா-வந்தரத்தவராகெனுஞ்சதமகத்தனனல் (கச)

மூன்றுலோகமும்புரந்தருள்பெருந்திருமூசு, மான்றமாதிவெண்ணரைக்கரியிவர்மகவான், றேன்றுநல்லுபசாரமற்றிருந்ததைத்தூய்மை, மான்றமன்னவன்றுருமனென்பவனுளமதித்து. (கரு)

சற்றிருந்துளநாணியேதுயர்க்கடல்சாய்ந்து, மற்றமங்கிலாதகன்றுவந்தடக்கொணுமானம், பற்றியுண்டிடப்பதைபதைத்தந்தரமகன்றே, யுற்றவூர்க்கணேயுற்றவனுள்ளமுள்ளுவனுல். (கசு)

# திருமுட்டபுராணம் இரண்டாவது
## க்ஷேத்திரமான்மியகாண்டம்.

இந்தவிந்திரன்றனதிறுமாப்பரிமார்பில், வந்தவிந்திரைவழங்கிடுவௗங்கொலோ நம்மை, யெந்தவூரெவனென்றிடாதாக்கினதப்பே, றுந்தநம்வயினுற்றிடனிவனெனே யுச்சம். (கஎ)

அழிவிலாதவெப்பேற்றையு மரியின்பாலமையி, னெழிவிலாதநற் சுகத்துயர்ந் தோங்கலாமென்று, கழியெலாக்கலையுணர்ந்தவர்கழறினனெனத்துன், னுழியெலாமு ணரறிவினிலுறிதிகொண்டனனால். (கஅ)

வானின்மன்னவைவிட்டெழுந்தவன்றனதினிய, தானன்மாளிகைத்தங்கியிராவெ லாந்தனது, மானம்போயதும்வானவர்கோனிறுமாப்பு,மீனமாகிடாதெணியெணிப்பெ ருமுயிர்ப்பெறிந்து. (கக)

மானமேபுரப்பதுபெருங்கதிசுகமகிழ்ச்சி, மானமேபரம்பொருள்கலைமறையெ லாமாட்சி, மானமேயுயிர்பொறிபுலமுடலரசகன்ற, மானமாயினனுடல்பிணமாமெ னழுதித்தான். (உ0)

மதித்தவன்விடியோரையேமங்ல்ரத்தலைவர், விதித்தவேதியர்புலவர்வேந்தாற்று றுவீரந், கதித்தசேண்ஸ்மயரொக்கல்கண்மன்னவர்கவியப், பதித்தவிண்மணிப்சொன் னவைதளின்வரப்பணித்து. (உக)

தன்னுண்மாநசையோதித்தன்றலைமகனுக்குத், துன்னுநாடரசாற்றிடுமௌலியை ச்சூட்டி, யென்னையாளுடைநாரணனிணையடியெண்ணிக், கன்னிமாவனத்துழிவந் தான்றவத்தினிரீகருத்தன். (உஉ)

கேசவன்றனைக்குறித்துவன்றவத்தினைக்கூட்டி, வாசவன்வளச்செல்வம்யான்வௌ வுவலென்றே, நேசவன்மரவுரியணிந்தணிசடைநீட்டித், தூசகன்றறுசுவையெலாந்து றந்தவனுகி. (உங)

காவலிற்புலமமைத்தைந்துபொறிக்கதவத்தை, யோவலாகிடாதடைத்துத்தனு ட்கதவகற்றி, மாவலோவொசிக்கொருபோக்குமாக்காது, தாவமோடுதெனுட்டெளிமூர் த்தியைச்சார்ந்து. (உச)

ஆறிரண்டெழுத்தானிறைமனுவினையாத, லீறிரண்டிலாணிருபதப்பூவுளமிருப் பத், தேறிரண்டிராப்பகலினல்லுருவினைச்செய்தவ், வாறிரண்டடிலாமனத்துடன் யோகமேவரித்தான். (உரு)

உத்தமத்துவாதசவெழுத்திமமலையோங்குஞ், சுத்தமாங்கடந்தனிற்சுகாசனத்தினி லிருந்து, மொத்துங்காமமாதிகடமைமுரித்துவெம்பசிநோய், நத்துபானநற்றுயின்மி குபையுளைகவித்து. (உசு)

மடிமடித்தவனுகிமந்திரந்தனையெண்ணிப், படியிடத்தெலாவற்றையுஞ்சமதிட் டிபண்ணி, யடியிடத்துறுமைம்முகனறுமுகனன்கு, முடியிடத்துளன்முதற்சராசர மெனாமன்னி. (உஎ)

உண்டுமிழ்ந்தருளொருபெருங்கடவுளையுள்கிக், கண்டநற்கருத்துடனொருவைரங் கண்டவனு, யண்டர்காதவத்தருள்கெனமூன்றுநல்லாண்டு, சுண்டியாகிநற்சமாதியிலி ருந்தனனண்ணுருமன். (உஅ)

## ஆநந்தபவனமடைந்தபரிச்சேதம்.

அப்போதத்தனலைகவ்விசும்பினிலசரீரி, கப்பேகான்றவக்காவலோய்நின்றவங்க ண்டிங், கிப்போதெம்பிரானெனதிர்கொடுவெந்தனையிச்சை, யொப்போவாக்கலனின்றவ த்தினையொழித்தினிதே. (உகூ)

## இந்திரனவைபுகுந்தபடலம்.

நித்தியத்தடனோர்ந்துளவானந்தகடமா, முத்தமத்தந்தச்சிமுட்டத்தலத்தினிலோம்பல், வைத்திருந்துளதேவராட்டெனும்வராகன்பா, வித்தினத்திற்சென்றருந்தவமியற்றினையெனிறே. (௧0)

நின்கருத்துமுற்றிடுமெனக்கேட்டவந்நிருபன், றன்கருத்தினிற்றளர்வறவெம்பிரான்முட்கண், மன்கருத்தினனுகியக்கட்டத்தைமறுத்து, மின்கருத்துளவான்மொழிப்படிவழிமீண்டான். (௧௧)

பொச்சைப்பூதரம்பொங்கர்பைம்பொன்மதினகரம், பச்சைப்பைங்குழுபடுநதிநதமெலாம்படர்ந்து, நச்சுநாகஞ்சொன்மொழிப்படிக்கோட்டுமோநாத, னிச்சைவைத்துளசிமுட்டத்தலத்தையுற்றிவர்ந்தான். (௧௨)

பீதமாதளமபூவியைகாஞ்சினிப்பிதிரைச், சீதராவெனும்வெண்மணிணுந்திவாய்நிகழச், சோதிமாவிளக்கிசைவுறத்திருமகடனையே, போதமேவிடுபாலமேவைத்தனன்பூமன். (௧௩)

முட்டங்காணலுமுட்டற்றபாவியேற்கிந்தச், சிட்டர்சிமைநாஞ்சேவிப்பக்கிடைத்ததேயென்று, விட்டதீயனுத்தண்டமிட்டந்நகர்வீதி, பட்டடர்ந்திடுபட்டங்கட்படப்பைகள்பணிந்து. (௧௪)

வலங்கொண்டப்பனுமன்னையுமகிழ்விளையாட்டிற், பலங்கொண்டோங்கிடுநித்தியத்தடத்தினிற்பரிந்து, நலங்கொண்டோங்கியமுறைப்படியாடிநன்னூன்று, தலங்கொண்டோங்கியமந்திரத்திருமணைச்சாத்தி. (௧௫)

நித்தியக்கடன்யாவையுநினைவுடனுற்றி, யத்தனுர்விமானத்தினிலமலனைப்போற்றி, சுத்தனுக்கிடும்படியுயர்சோதிவாழ்தலத்திற், சத்தியாரெனும்பூப்பிராட்டியாலயந்தனைச்சார்ந்து. (௧௬)

பாவநாசனப்பூக்குளக்கீழ்த்திசைப்பாங்கர், தாவநாசனத்தாறுவாழும்பரந்தங்கிக், கோவநாசனச்சாந்தனுத்தவமுறைகொண்டு, சாவநாசனும்பூவராகன்றனைச்சார்ந்து:

பாதசூடந்தான்சேவைசெய்கோயில்வாழ்பரனைச், சூதமாடலற்றடங்கியவணமுறுசூட்சி, நீதமாமனமுதற்பரிசனங்களைநிறுவி, யாதமானையிலாக்கிமாதவத்தினிலமர்ந்தான். (௧௮)

கோடைநாளிற்றீயைந்தகிலங்களைக்கொளுவ, வாடையாதிவிட்டணவநடுவண்மியேயடங்கி, வாடைநாடனிலீர்ங்குளிர்வாவியில்வைகி, நாடநாடருநாரணப்பரந்தனைநாடி. (௧௯)

அண்டம்விண்டிடவாட்டினுங்கோட்டுடிாபத்தி, கண்டவாறுசெயூர்வனநீரினனிறித்துக், கொண்டவாறுசெய்காலத்துங்குலேகலாமனத்தாற், பண்டுங்காத்தருள்புரிவராகனையெண்ணிப்படித்தான். (௨0)

தன்னிடம்படுத்திடுபொறிதரணியாண்மன்னன், றன்னிடப்பெருந்தவமுனுற்றழியெழுங்கனலாற், பொன்னிடத்தையுமண்ணிடத்தையும்புடைத்தேற்றி, மன்னிடச்செயன்மானவாயினவெலாமண்ணும். (௨௧)

அண்டமாகியகுகையிடையகிலத்தையடைத்துக், கொண்டிம்மன்னரிபதத்தவாக்கனலினுற்கொளுத்தக், கண்டவாகண்டலன்சிதிகண்டனுக்கிடுமப், புண்டரீகனுமுயிரெலாங்கனலினிற்புரண்ட. (௨௨)

அரம்பையாதிமங்கையரெலாமங்கையராளுர், சரம்பெய்வாயவீணையரெலாஞ் சுரம்பெயலாளுர், சரம்பெய்வான்மெலமெல்லவேசரம்பெயலாளுன், வரம்பெய்மாவராகன்றவமன்னவன்முன்னே. (சங)

வசந்தநாண்மலர்ந்தழகுசெய்வனத்தினில்வலாரி, யிசைந்துளான்றவமழிப்பவென்றேவியவெல்லாம், பசைந்தஞானவைராகராம்பிரபத்திபரர்த, மசைந்தெறுமனவலிக்கிணைமன்மனமான. (சச)

மன்னன்றன்பதமருவிடவருந்தவமழிப்ப, வென்னவாற்றலுக்கேங்கிடுமிந்திரன்சுரர்கண், முன்னஞ்சேவைசெய்திருப்பத்தன்றந்திரமுழுதும், பன்னியாற்றினுமவன்கண்மாத்தாணெனப்பட்டான். (சரு)

பகவன்ஞமசங்கீர்த்தனபரரவன்படிவந், தகுமுன்னேக்குவானன்றியோர்தேமுகந்தன்னே, நகமுன்னேக்கிடாரந்நிலையினையப்பூபதியுஞ், சகமுந்தீதுஞ்செய்வெள்ளிகைவிழுத்திலன்றுயோன். (சசு)

## சக்கரத்தாழ்வானெழுந்தருளியபரிச்சேதம்.

நிலையினிற்சலியாநிலைநிருபன்மேற்சீறிக், கொலையினிற்சலியாச்சுரிகொண்கன்றன்கொடிய, சிலையினைச்சலியாதறத்தறித்திடுதிண்கூர், வலியினிற்சலியாதவச்சிரப்படைபிடித்து. (சஎ)

இன்னுஞ்சற்றிவன்றவங்கெடாதிடினுயிரனைத்தும், பன்னும்பற்பமாகிடுமெனச்சுலவியப்படையை, மன்னன்றன்சிரமறுத்திடவிடுதலும்வையந், துன்னும்பையுளிற்சுழன்றுவன்றுயர்க்கடல்சோர்ந்த. (சஅ)

தவத்துளான்றலைதுணித்திடவரும்படைதன்மேற், பவத்துளாரறியாதவேனபபெருமபரம, னவத்துளாகியகோலெலாநடுங்கொளிப்பரப்புஞ், சிவத்துவச்சிவக்கதிர்வளையேவினன்சீமான். (சகூ)

கழுமுண்மாசதகோடிவேற்படைக்கப்பணங்க, டொழும்வண்மாட்சிசேர்படைக்கலங்கட்கெலாந்தோலா, தெழுநற்சக்கரவர்த்தியாமாழியேழுலகும், விழுநலுக்கிரத்துடனுலகேத்தவான்மிளிர்ந்த (ருo)

ஆயிரங்கதிராங்கனற்கற்றைறவெஞ்சோதி - பாயிரம்மறைபாடுவானுருவெனப்பரப்பி
யாயிரஙகுளிர்நாமதேவன்னடியவரை - மாயுறச்செயுமாகதருளர்கொலோவம்மின். ()

எம்பிரான்படையிருட்குழுநக்கியுக்கிரங்கொண், டம்பரத்தவரத்தன்றனடியரையடர்வா, ரிம்பரும்புரெங்கிருக்கினுமெரிப்பல்யானென்னுப், பம்பரம்மெனவுலகெலாஞ்சுழன்றிடப்பறந்து. (ருஉ)

வேறு.

அண்டம்பலகண்டம்படுமோசத்தைவிடுத்துத், தண்டம்படல்தணவாதெனுந்தழன்மாண்டொளிகோடிச், சண்டங்கிரணங்கொண்டடர்சரிநாதன்விடுப்ப, பண்டங்கெழுமாவச்சிரப்படைமுன்மலைவுற்ற. (ருங)

சயமீந்திடுகுலிசத்தெதிர்தாசப்பெயரென்மாப், புயநீங்கரிதாகப்பொலிபுத்தேடகைவிடலை, நயமோடறிவயிரப்படைவிடுத்தாணிடாதி, வியமாறிடவோடோடலைவிண்ணோரறிதுற்றார். (ருச)

## ௨-வது திருமனென்கிறமகாராசன்
## இந்திரனவைபுகுந்தபடலம்.

### இந்திரனுதியரிரிந்தோடியபரிச்சேதம்.

*மலைவார்சிரமெல்லா னொடிவரையிற்பொடியாக்கி, நிலையாகுதுமென்ருங்குறு நெறியாழியையிமையோர், தலையானவன்கண்டச்சுடனந்தோவினிச்சகியாண், மூலை யுண்ணமுதுண்வின்சுக்முற்ருதெனமுன்னி.* (௫௫)

*வெண்மாப்பிளிறிட்டோடிடமேடந்தொடர்ந்தோடத், தண்மாக்கருமெருமைப்ப கடோடத்தடம்பூதம், மண்மாத்தடங்காணுதழிந்தோடப்பெரும்வாரி, யுண்மாப்பெரு வன்மீனிடருற்ருர்கலியோட.* (௫௬)

*கலையானுயிர்கலைந்தோடிடக்காண்வச்சிரக்கண்ண, னுலையாமனமுலையத்தசமுக் கப்படர்ந்தோட, நலியாவொருநக்கன்னிவரேறேறிநடாத்தி, வலியாரெனுமகர்தம்பி ஞன்மான்மேவிடவோட.* (௫௭)

*சிவ்ஞேடிடமகஞேடிடத்தேவாதிபஞேடத், தவரோடிடச்சுரர்தானவர்தாமோ டிடத்தரைவா, ணிவரோடிடவிரைந்தேயெறிற்யெரிபின்ருெடராழி,யெவணேகினும் விடுவன்கொலென்றினிதேகினதன்றே.* (௫௮)

*எண்மாதிரத்தவரோடலையெட்டோங்கொலோவென்ரு, விண்ஞேர்விழுகண் ணீர் வழுக்குறவீழ்ந்தெழுந்தோடத், திண்மாச்சுடராழிச் சுதரிசனப்பெருந்தேவன், கண்மாச்சுடர்கொண்டின்னவர்கலங்கப்பினரெய்தும்.* (௫௯)

*விடுவேங்கொலெம்மான்ருெண்டன்மீதெழுந்தோருயிர்விட்டுப், படுமுன்னெ னப்பின்னேவருதாரிதேர்ந்தபண்ணவர்க, ளிடந்தாவிடமெல்லாஞ்சுழன்றுயிர்காப்பவ ரிலையென், றடங்காவழுங்கலையோதியவ்வயன்பூரையடுத்தார்.* (௬௦)

*அயன்ருமரையடிமீதபயங்காத்திகொலென்று, செயன்மாண்டவாசவனுதியர்செ ன்னிப்படச்சேவித், தியன்மாண்டவிராசன்பொருட்டெழுந்தேயெமையெல்லா, நயன் மாண்டிடத்தொலைப்பானெனணிநாராயணனுன்.* (௬௧)

*வென்காட்டியேவெள்கிக்கடிவிரைந்தோடியெம்மாவி, மின்காட்டிடகின்றன டைக்கலமாயினநெடியோன், பொன்காட்டியபூமேலெழு புனிதாவெனவழுதார்க், கின்காட்டியவிசைப்பெண்ணிறையிவ்வாறிசைத்திடுமால்.* (௬௨)

*அறவாழியந்தணனுகியவம்மானடியார்தம், மறவாழிமாற்றலர்மீகடவியசக்கரமத னைப், புறவாழிமண்வானிற்றடுத்திடுவெற்றியுற்ருரு, நிறவாழியிலுண்டோசொலிர் நிமையாவிழிவெற்றீர்.* (௬௩)

*ஈடோடெடுப்பில்லாவெமதிறைவன்கரமீலுங், கோடோடிணையாழிக்கடவு ளைவெற்றிகொடேவ, ரீடாயிடினீறுக்கிடநிறைபூரணற்கையய, னாடாமறைநவிலுற்ற னைதநாஞேதிடலாமே.* (௬௪)

*மாயாவல்லியாழிப்படையோடோர்பொருவயமார், வீயாவலிமேவுஞ்சுரர்விபுலைக் கணுமுளரோ, வாயாவலியமராதிபவமுதாசனத்தவர்காள், சாயாவலிமுனிகாளெனச் சாவித்திரிகணவன்.* (௬௫)

*அருளாழியெம்மானைநன்றகமேத்தியஞ்சலிசெய், வருமாழ்மாதவர்விண்ணவா சகிநாதன்மற்றவரோ, டிருளாழியற்றிடுமாரருளீசன்றுயின்மேவும், பெருமாழிவெண் ணமுதத்தடங்கடன்மேவினன்பிரமன்.* (௬௬)

பிரமன்னுயிர்பேணித்தரவமுந்தேவபிரானே, டாமங்கையர்திருவாங்கிடாதைய
ன்றுயின்மேவுந், திரமன்னியகோயின்மிசைச்சென்றேத்துழித்தேவன், வரமன்னியவ
னசன்முதலினர்கேட்பவருக்கும். (௬௭)

சரணாகதிசெய்தேத்திடுசலசக்குடிமகனே, மரணாதிகளறநுங்களைமகிழ்ந்தாளுது
மகிழவீர், சுரராதிகளதிமாபதிபோ தீரெனச்சொல்லும், வரராதிகளதிமாவிதி முத
லோர்தமூர்வந்தார். (௬௮)

முற்றிற்று.

ஆக படலம் ௨ - க்கு திருவிருத்தம் ௧௭௧.

———:(o):———

ஸ்ரீ

## ௩-வது துருமன்வேள்வியாற்றியபடலம்.

கருமன்னுயிர்கலந்தவ்வுயிர்கருமங்களையெண்ணி
யிருமன்னிருவினையூட்டியாளெம்மான்குணவின்றே
மொருமன்னுயிருளநாளுமுண்ணறிவீரனல்வேள்வி
துருமன்னெனுமொருமன்னவன்றொடங்கிச்செயல்கேண்மின். (௧)

வேறு.

மரிசியென்றமுனிவவம்மாத்தவக் - குரிசிலாற்றுதவத்தீகொளுத்திடன்
முரிசெய்வேதன்முதலினோர்மூவாவவ் - வரிசெய்யாரருளாலின்றமைந்தபின். (௨)

சககரத்தையெம்மானுபசங்காரம் - வைக்கவுற்றபினன்னவன்மாதவன்
றக்கவாறெழாத்தாமதத்தாலுவன் - மிககவெண்ணிவெதுப்புற்றோனாகியே. (௩)

புதளம்படுமோர்குழிவெட்டினன் - சீதளம்படுசெங்கனல்கொட்டினன்
காதலக்கருமோமங்கவின்பெற - மீதளககரும்வேள்வியொன்றாற்றினான். (௪)

இனனவேள்விக்குமீசனெழாவிடின - றன்னையேபலிசெய்டததாவெணணினான்
பின்னரும்பலபோதுதீப்பேணியு - மென்னையாள்பவனெழாதறிந்தமன். (௫)

தனதிரத்தத்தைத்தானறுத்தக்கினி - வனமுகத்தவிசாகிடவாக்கினான்
கனமுகத்துத்தன்புண்ணினைக்கவ்வியே - வினமுகச்சமித்தென்னவெரித்தனன. (௬)

அத்திரத்தப்புண்ணாக்கைகழயயூற்றியே - கத்திரத்தத்தீர்காணவுகுத்தனன்
மத்தகத்தைத்துமித்துத்தீமாய்த்திட - வத்தேகித்துக்கையொள்வாளுருவினான். (௭)

கிரசறுத்துத்தீச்சேர்ந்திடச்சிந்தைசெ - யரசன்முன்னரெம்மாதிவராகனார்
சரசமோடவ்வன்றன்கரம்பற்றியே - முரசமோதிடமுன்னர்நின்றானரோ. (௮)

வாட்கொடன்சிரமெற்றுழிமாதவ-ளுட்கொள்வாகனமாதிரத்தம்பரா [ரோன்றினான்.
தாட்கொண்டேத்திடத்தாவின்மாவாரணந்-தோட்கொண்டோங்கிடத்தோன்றன்முன்

தோன்றுஞானவராகநற்சோதியை - யான்றமாமனுவாற்றொழுமன்னவ
னீன்றஞானபத்திக்கிளையயற்புத - மான்றமுககரணங்களுமாணபுற. (௧௦)

களினான்குபுயங்களுநற்படை - யொளிநகும்பலவொண்மணிப்பூணகளுங் [ம்.
களிகொண்மாழைக்கதிர்விற்பொழிதரு - துளிகொண்மேனித்துகின்மணிப்பூண்களு

அவிரிரத்தின்த்தாமபிடேகமுங் - கவினுங்காந்திக்கலன்களுங்காந்துறப்
புவனமாதிடப்பாகம்பொலிந்துறச் - சிவனயன்றேவர்செங்கரங்கப்புற. (௧௨)

அந்தமற்றவானந்தவீட்டம்பரர் - சிந்தமாமலர்வாச்சிலஞ்செய்திட
முந்தவந்தமுதல்வன்றவம்புரி - நொந்தமன்கரம்பற்றியேநோவற. (௧௩)

கருணைமாமலர்க்கண்ணால்விளித்தகோ - தரணிமன்னவதாழ்வறவாற்றிய
மரணமற்றவெம்மாத்தவமெண்ணியே - காணமுற்றிடக்கண்டனங்காண்டியால். (௧௪)

என்னுமிச்சையிரக்குதியீதுமான் - மன்னவென்னுமறைத்தேரின்மான்மொழி
தன்னைத்தற்பரன்காட்சியைத்தாழ்விலான்-றன்னுஞ்சோதிஞானக்கணூற்றுன்பற. ()

கண்டுகண்புனல்காரவெங்கத்தனே - யண்டுநின்முனெழுந்தடிவீழ்ந்தெழுந்
துண்டுசேவையுகப்பிற்றுதித்திடப் - பண்டுண்டாமுடல்பட்டுளதைலால். (௧௫)

வலியற்றேனெனுமன்னுடன்மீதெம்மான் - பொலியுஞ்செங்கமலக்கையினுற்புனை
நலிவகன்றிடநீவினநாளினே - யொலிசெயிட்டியலுக்கியவொண்டவன். (௧௭)

இரச்சிமேமையெலும்புரியாவுமே - வரச்செய்தோங்கிவளர்ந்துசெழித்திட
றரச்செய்தேத்திப்பணிவலிச்சார்ந்துமுன்-னுருவுறச்செய்தானேத்தினுட்பூத்தவன். ()

தோரைமேதையெலும்புரிதோள்புணுங் - தரரையாகித்தழைத்துவளர்ந்தெனப்
பாரைவானைப்படைப்பரன்பாணியாற் - சீரையெய்தியசெய்தவமன்னவன். (௧௯)

களிமிகக்கொடுகொண்கனகாம்பர - னளிமிகச்செயுமற்புதக்காட்சியாற்
றுளிமிகச்செயுங்கண்ணநீர்தோன்றற - நளிமிகச்செயுநாமங்களோதுமால். (௨0)

நாகமேறிநடுக்கடன்மீதிலே - நாகம்விண்மணினண்ணிநோல்வகை
யாகமீந்திடுயோனிசேராவியு - ளாகமேவியருள்பரமேயென்கோ. (௨௧)

தாகந்தீரக்குளிர்முகிறந்தவர் - போகங்கூடப்பொலிந்திடுமோடதி
வாகமாகவழங்கியளித்திடு - யோகமேவியவோதேவனேயென்கோ. (௨௨)

கருவினுள்ளுயிருள்ளிருந்தேகலி - னுருவினுள்ளுயிருள்ளிருந்தொண்விதை
மருவியுள்ளிருந்தாகுஞ்சுவேதநீர் - பரவியுள்ளிருந்தாள்பரமேயென்கோ. (௨௩)

ஆலமேவியமர்ந்துலகம்மெலா - மூலமாயையுண்மூட்டினனேயென்கோ
காலகாலமாந்தத்துவக்குப்பையுன் - சீலந்தேர்கிலாச்சின்மயனேயென்கோ. (௨௪)

பூரணசசிங்கமானபுராதன - காரணக்கரியருள்கமலாதிபா
நாரணப்பெயர்நாமநரோத்தமா - வாரணச்சிரவத்தாவெனக்கருள். (௨௫)

ஆக்குவானையழிப்பவனேயருள் - போக்குவானுயிர்போக்குவானேயருள்
பூக்குமாறுந்திபூக்குவானேயருள் - நீக்குமாறிலாநின்மலனேயருள். (௨௬)

காட்டுமாவிகளைக்கவின்பெணவலே - மூட்டியேமுளைப்பித்தவர்முன்கொடு
காட்டிக்காட்டிற்சுழல்கவிபோலவ - ராட்டக்கண்டாசமாடுவானேயருள். (௨௭)

காத்திரங்கருத்தன்பிற்கலங்குறத் - தோத்திரங்களனேகந்தொடுத்தரோ
வேத்தியேத்தியுருகுமவனையெம் - மூர்த்திநோக்கிமுழுதருள்செய்யுமால். (௨௮)

முற்றிற்று.

ஆகபடலம் ௩ - க்கு திருவிருத்தம் ௧௭௭.

———:(0):———

# ௪-வது துருமன்மகாபலியாகியபடலம்.

### வேறு.

பூபலிகொடுத்தெஞ்ஞான்றும்போற்றுபூமகணுதற்குப்
பாபலிகொடுத்துளாக்கும்பண்டிதத்திறமைபூண்டீர்
சேபலிகொடுக்கவென்றுன்றிண்வெறிபோக்கியாக்கை
மாபலிகொடுத்தான்றன்னைமாபலிசெய்தகேண்மின். (௧)

## எம்பெருமான்கருணைபுரிந்தருளியபரிச்சேதம்

### வேறு.

நன்னயங்கிடந்தபொன்னகர்க்கிழவனடாத்தியநெறியதனுன்
மன்னயமானமீர்ப்பலிப்பெரியமாதவம்புரிந்திடுமதிசேர்
விண்ணயவேந்தேநீபுரிதவத்தான்மிகுகளியெய்தியாம்வந்தா
முன்னயவரமென்கேளெனவனுமுவகையினின்னணம்விளம்பும். (௨)

கடுமுரண்குடிக்குநெடுங்குரற்பகுவாய்க்கரிவருகரியவனைப்
படுமுரண்வலியவொளிதழைதேவர்பதியினுக்கரசெனப்படுமவ்
வடுமுரணுரிமைவாசவனுக்கும்வரமடியேன்பெறவரத்தை
யிடுமுரணகலாநீசவென்றனைசமுற்றுமாறெனவினவினனால். (௩)

தனையவமதித்தவிந்திரனுரிமைதானடைந்தவன்றனையலக்கண்
மனையவனுரியருடன்படவேண்டிவந்துமாதவம்புரிமன்னை
யெனையருளமலனேங்கிநல்வேந்தேயெனைநினைந்தியற்றியதவத்திற்
புனைபெருந்தாமதப்பலியியற்றிப்புந்தியற்றுரினிற்புரிந்தாய். (௪)

தாமதக்கொடியவேள்வியிற்களிக்குந்தேவரினெனையெணித்தடியான
மாமதவிரத்தவாரியார்ப்பூரணுகுதிவழங்கிடவழக்கோ
நீமதமுடையபலியியற்றிடலைநேர்தலானீநினைபலத்தை
வீமதமகன்றமேலெழுமுகத்தின்மேவுவையிந்திரன்வீடு. (௫)

இனிவருகருப்பத்தினிலமரேசனென்றிடுபதவியையென்று
பனிவருநீசெயசுரயாகத்தாற்பலித்திடுமசுரனுத்தோன்றி
யனிவருபலியென்றுகுநின்றனக்குநல்லுபசாரஞ்செயாத
முனிவருதேவர்கோன்றனையுலக்கணிட்டவன்றுயர்க்கடன்மூழ்கி. (௬)

எல்லையிலமரேசன்வள்மெனைத்துமினிமையிற்கவர்ந்தவனேவா
வல்லலிலுழப்பவாக்குதியினியோராக்கையிலப்பகனுனுன்
வல்லயாகத்திற்கெழுந்துமூவடிமண்வாங்கிநீகவரவன்மூன்றுச
சொல்லிடுமுலகைப்பெற்றவற்கீவன்றேருதிருமனுமரசே (௭)

மாங்கிசம்பலியெற்காற்றுநின்குறையான்மாவலியாகிநின்மாட்சி
நீங்கிடப்புரிந்தவிந்திரனமுங்கீயளவறுசுகமெய்தி
யோங்குதிபின்றையென்பதமகலாவொண்டவஞானபத்தியினு
ளாங்குறுமாகண்டலனெனநெடுங்காலரசிருந்தாக்கையையகற்றி. (௮)

முத்திவீடுறுதியளவறுதவத்தான்முதிர்ந்திடுதருமனென்றிசைக்குஞ்
சத்தியும்புகழுங்கல்வியுந்தயையுஞ்சாந்தமுமுடையசத்துவனு
நித்தியனுதியெனவருள்புரிந்தநிருமலப்பூவராகப்பே
ரத்தனுகாயமின்னலின்மறைந்தானறிதிமாமரிசியென்றவத்திர். (௯)

பூத்தலர்விரித்தசேப்படுகமலம்பொங்களிமூசறுபாட்டின்
சீர்த்திசெய்முட்டத்துனுற்றிடுமாதவத்தினுற்சிற்பரனளித்த
கீர்த்திசெய்தவத்திற்களித்திடுவேந்தன்கிருட்டியைப்பணிவிடைகிடைத்துச
காத்திடுதனதுநகர்வயிற்சென்றுன்கவின்படைக்கணந்தொழமாதோ. (௧௦)

அரிசியினருட்செந்தாமரைப்பூந்தாளகலகில்லாவருண்ஞான
மரிசியேயிந்தடன்னவன்காணுமாப்பெருங்கலந்தயைமேவி
யுரைசெயும்பிரகலாதனென்றேத்துமுத்தமன்குலத்தினிலுதித்தத்
தரைசெயுந்தாதாவென்றமாபலிசீர்தகவுறவறிதிர்தக்கவரே. (௧௧)

மறைபடுதவத்துமரிசியென்பவர்க்குமறைவடிவாகியபுட்கோ
வறைபடுவயினதேயமாமுனிவரிசைத்தனரிமையவண்டல்ஞ்சார்
குறைபடுரேமிவனத்தினிற்றவஞ்செய்கோதிலாவந்தணர்க்கெல்லீர்ம்
தறைபடுதவஞ்செய்முட்டமான்மியத்தைச்சாற்றினன்பிறவிநோய்தணிப்பான். (௧௨)

முற்றிற்று.

ஆக படலம் ௪-க்கு திருவிருத்தம் ௧௮௩.

———(0)———

ஸ்ரீ

# ௫-வது ஏமகேசன்வரம்பெறுபடலம்.

பூமணித்திருவைமார்பிற்பூண்டொளிர்புனிதன்பாத, நாமணித்திருவைநாட்டுநன மனத்தவத்திரெம்மான், ருமணித்திருவைச்சீமுட்டத்தினிற்றருமகேசன், கோமணித் திருவைநாட்டிவாழ்வளங்கூறுகேமால். (௧)

பாய்திரையுடுத்தஞாலப்பரப்பினிற்பகடுவாய்ந்த, மேய்புரைதோண்மாஞால மெல்லியண்மகிழ்நன்பாதம், தோய்புரையகன்றஞானமரிசியேதுகளிலவ்லூர், வாய்பு ரையகன்றவேமகேசன்றன்வரச்சீர்கேண்மின். (௨)

விடைக்கொடிநிறுத்தினுன்றன்வெந்தகருருவைவீட்டிக், கடைக்குறைபடுமா காதுகாத்திடுகடவுளெனப், படைக்குறைவகன்றகேத்திரதுக்குவடாதுபாங்க, ரு டைக்குறைவகன்றிங்கோங்குங்கிருட்டனையுகந்து சூழும். (௩)

பேரருள்ளனுனவெறுழியாம்பெருமானின்பச், சீரருளோகையோடுசெப்புவார் செல்வமானச், சார்வளஞ்செழித்தசால்பாற்காஞ்சியாந்தருதிவாய்ந்த, நீர்வளநகரந்தன் னையாளுமோர்நிருபனுண்டால், (௪)

மணிமுடிகவித்துநீதிவழுவறநாடாண்மேலாத், திணிமுடிதருமகோசனென்றிடு சிறந்தநாம, வணிமுடியரசர்போற்றவா வயினெளிரன்னுற்குக், கணிமுடிவிரண்டு பேர்கள்களத்திரமுண்டுமாதோ. (௫)

## இந்திராதிதேவர்கள்வானரங்களாகப் பிறக்கும்படிக்கு பிரமன் சாபமிட்டபடலம்.



கொழுங்கொடிமுல்லைசண்பகங்குல்லைமல்லிகைமதுகரங்குழுமி
யுழுங்கவினலர்கற்பகமுதலருச்சித்துலகளவிடும்பதமேத்தித்
தொழுங்கலைச்சுருதியாளரேயொருகாற்றுமிலாப்பிருகுமாமுனிவ
ரெழுங்கவின்பிரமவர்த்தககேத்திரன்கணேயெழுந்தருளினரால். (உ)

பரத்துவமரியேயென்றதத்துவத்தைப்பலமறைச்சுருக்கெலாம்பகர்தல்
கரத்தினிற்கனியிற்கண்டுநற்கருமாராத்தியனென்றிடுகருத்திற்
சிரத்தைசெய்தனந்தநாளெலாநோற்றுஞ்சின்மயன்சேவைசிக்குதலற்
றரத்தைசெய்மனத்தோடவனுறுபிந்துசரசினூர்வரம்பினிலமைந்தான். (௩)

ஆசனத்திருந்துவாசியைநேசித்தைம்பொறியகலலைமறித்துப்
பேசலைவெறுத்துப்புலன்களையொறுத்துப்பொலிமனமெய்யினைப்பிடித்துக்
கேசவன்கமலமலர்ப்பதங்கிடத்திக்கேதமற்றிடுமவன்படிவை
யாசமிட்டவிருமிதயதாமரையாஞ்சிதம்பரமதன்கணேயமைத்தான். (௪)

சங்குசக்கரகதாயுததரராய்ச்சாமமாமேனிசார்ந்தவராய்ப்
பொங்கெழிற்பீதாம்பரதரவரதபோகராய்ப்பொலிதருசோதி
தங்குகுண்டலஞ்சேராரகேயூரகடககங்கணமுடியாராய்
மங்கைவைசயந்திவனமறைச்சிலம்புமலர்ப்பதவடிவராய்க்கண்டான். (௫)

உவப்புடனளவிலாதவாண்டெல்லாவுடல்சிலைமதலையிலாக்கித்
தவத்தினிலிருக்குமேல்வையிலாங்குத்தவத்தினர்சேகரரான
வல்த்தமில்பாண்செய்மகதியாழேந்துமத்தராநாரதரகிலம்
நிவப்புறுகிமலவரிகரியென்றேநிலைதவமுனியெதிர்நின்றார். (௬)

நின்றிடுமுனியைக்கண்டிடுமுனியுநேயநன்முகமலல்விளித்துத்
தன்னெடும்பள்ளிதனிலவர்க்கியற்றுந்தரத்தினிற்சாய்தலற்றாக்கி
மன்னிடுபெருவளாகமாநிலத்தென்வியப்புகண்டுளிரதனுலே
துன்னிடுமுமதுமுகமலர்ந்தவிருமுறுவலிற்றென்றினீருரைமின், (௭)

எனவினவுழிமாநாரதகாமரெழுவியப்புறுகளிசிறப்பப்
பனுமொருசுயம்பாந்தலங்கணூற்றெட்டிற்பகடியெரெட்டினினிரண்டா
வுனுமொருதண்டகாந்தனும்பிரமமுகந்தருண்முட்டமுற்றெம்மான்
றனதுறுவினைச்சேவித்திவணடைந்தேந்தலத்துயர்வினைக்கரிசிகந்தேம். (௮)

அப்பெருந்தலத்திற்பனுவலாட்டித்தாயட்டபோனகத்தினையயனு
லொப்பறுமொருவராகன்கண்டருளவுகப்பித்தவோதனமாதி
கைப்பட்டக்கொண்டேயருந்தியகளிப்புங்கடையனும்புலையன்கையிடினுந்
தப்பறும்புனிதமெனுமன்னமாட்சிதனையும்யானினைந்தெழுமகிழ்வும். (௯)

ஏந்தலாரந்தத்தலப்பிரசாதமிமசேதுவரையுமார்தூய்மை
வாய்ந்துளவளனும்வழங்கிடம்மான்மியந்தனைமறைகளிற்சாம
மாய்ந்துசெய்பழிச்சறனையுநந்தர்ந்தையரவணிமூர்த்தியுமன்பு
தோய்ந்துபல்லாயிரப்படியாகத்தொடுத்துளதோங்குநூற்றெருப்பும். (௧௦)

அலகருதேவர்மனிசராதியரங்கடைந்துளபேறுமுண்ணினைந்து
விலகறவெழுந்தவுவகையாலடங்காவிதத்திவணடைந்தனனென்றன்
பலகருமங்கள்யோகுகள்பயின்றுபரம்பரன்றனைபுளேபார்க்கும்
நலகருமஞ்சேர்பிருகினிதேத்திநாரதமுனிவவச்சீருள். (௧௧)

ஒன்றெனுமுரைத்தென்னுளங்களிகூரற்குளுற்றதியென்றவர்க்கிவரு
நன்றறிமுனிவீர்நீரறியாதென்னவில்குவிரெனவினவுதலாற்
சென்றவோர்காலத்தாகியவாறொன்றியம்புவல்கேண்மினத்தேவ
மன்றினின்மாகர்நாதனுஞ்சுரருமருவியோர்நாளினிற்சேர்ந்தார். (௧௨)

சேர்ந்துளதேவரவைக்கணேயெழுதெளிமுனிவரர்கள்செஞ்சுருதி
யார்ந்துளமிகுதியாதிநன்னூலிலாப்பிடுவாக்கியார்த்தங்க
டோர்ந்துவினவியொருவருக்கொருவர்பூருவோத்தரத்திறந்தெளியச்
சார்ந்துசொற்போரைப்புரிந்துளபோதுதானவர்பகைகளாந்தேவர். (௧௩)

விதிவிதிபிரமனறிவுளனுயும்விதிநிடேதம்முணராமற்
சதிவிதிமாறன்கலையினூற்பிளந்தசவியகன்மதியினிலெழுந்தீக்
கதிவிதிகாமக்கனலவிதிறனற்றவனியற்றிடுசெட்டியெழுந்த
மதிவிதிகலைமாதெனுஞ்சரச்சுவதிமகளெனுமுறைவழுவாக. (௧௪)

புணர்ந்தடங்கரியகலவியின்புணரிவிழுந்தனனெனிற்பிறகெவரே
தணந்திடற்கரியர்காமமாதிகளென்றுரைத்துரைத்தவையெலாங்கேட்ப
வுணரகலேளனத்திறலேகேயென்றுகையார்த்தவர்நகைத்துத்
தணந்தனருண்ணுமமுதிறுமாப்பாற்றங்கலைமறந்துளவமரர். (௧௫)

அச்சவைக்கரசனுகுமிந்திரனுமப்பெருங்காமியர்தவனைக்
கொச்சையனென்றுட்கொதிநாகிடற்கென்கொடுத்துளதருமநூலென்று
நச்சினர்கேட்பநகைநகைத்தார்த்தானல்லரைநகுவசையுரைத்தல்
வைச்சிடுநலங்கெட்டின்னலாலென்னுமதிநெறிநாடிலாமன்னன். (௧௬)

அம்மொழிபகாந்தவவைக்கணேயாகாலுகூடவென்றறைறதருவீணை
தம்முழியகலாக்கந்தருவருமச்சவிவிதியுலகினிலேகி
நட்முடைத்தந்தையடிபணிந்தையநாகர்கோமானியலவைக்க
ணும்மிடவருளாலுற்றனமங்கணிகழ்ந்ததிவ்வாறெனவுரைத்தார். (௧௭)

அம்மொழிகேட்டவக்கணம்பிரமமரியலவென்றவர்மீது
தம்முழியகலாச்சாந்தர்தஞ்சீற்றற்றகவெனச்சினமுதிர்ந்தோங்கி
யம்மவோவென்னுவிழிவழியொழுகுமனற்பிழம்புலகெலாமழிப்ப
விம்மியவாபோற்கருத்துறுத்தழுங்கிவிழித்தவர்முனமிவைவிளம்பும். (௧௮)

கேண்மினோவீணைக்கிழவர்காணம்மைக்கிளரொளிசுடர்முடித்தேவர்
பேண்பிதாமகனென்றுணர்கிலராகிப்பிழைபடவேளனம்பேசு
மாண்மொழிவழங்கிக்குரக்குச்சேட்டைகளைபழங்கலாலிவர்பலவைகற்
காண்மலைகானமாறுகளாதிவிடமெலாங்கவியுருவெடுத்து. (௧௯)

அலைந்திடக்கடவரிந்திரனுமெமர்ந்திடுமொன்றுமுப்பஃதாப்
பலந்தருமிமையோரென்றுயர்ந்தோங்குவெங்கதச்சாபமேபகர்ந்தாம்
வலந்தருவீணைக்குரியர்காள்புருடர்வாமபாகம்மனைக்கான
தலந்தருமென்றதருமநூற்படிக்கென்னிடமெழுபாரதிதன்னை. (௨௰)

என்மனைக்கிழத்தியாகயான்மருவியென்னுனீநாத்தலத்திருத்தி
மன்னுயிர்க்கானமெய்யினைவயக்கிவாக்கினளுடன்மருவினன்யா
னுன்னியவுந்திமலர்தருமப்பனுகந்திடுமோரணையாலென்றனுத்
தன்னுழியிருந்தார்தமக்கிவைவழங்கித்தன்சினந்தணிந்தனன்விதாதா. (௨௧)

## உசு-வது. இந்திராதிதேவர்கள்வானரங்களாகப் பிறக்கும்படிக்கு பிரமன் சாபமிட்டபடலம்.

முப்பதுமூன்றுகோடிதேவருந்தீச்சேட்டையிற்குலவியமோத
வப்படியூதனில்வானரராகியலைந்திடக்கடவரென்றியாருஞ்
செப்பிடுசாபஞ்செய்தனனதனைத்தேர்கிலாத்தேவர்கடமக்குத்
தப்பறுதவத்துவீணைநாரதனுஞ்சாற்றுதுமென்றுளேகினையா. (உஉ)

அருள்புரிந்தேகுதும்மெனச்சுரர்களவைக்கணேயேகியம்பரரே
யிருளறுநூல்களியாவுநாக்காக்கவென்றவாக்கினைத்தவிர்ந்தயனைப்
பொருள்செயாதுரைத்தபொக்கினுற்குரக்குயோனியிற்பிறப்பினையெடுக்கத்
தெருள்செய்வாக்காலேசபித்தனனுணர்மின்றேவர்காளென்றநாரதனும். (உ௩)

கண்டிடுவெள்ளிக்கதிர்பொழிகயிலையேகினனிதையுணர்ககனர்
மண்டியவயிற்றுத்தீயினின்வெதும்பிமலிந்தெழுபீழையின்மாழாந்
தண்டர்கோனொடுமளவளாய்நொந்தேயம்மவென்செய்துமென்றலற்றிப்
புண்டரீகன்றனிடமெழுந்தடியிற்பொக்கெனவீழ்ந்துமுன்புலம்பி. (உ௪)

எங்களைப்பயந்ததாதையேயாங்களியற்றியவேதத்தான்மண்ணிற்
சங்கையின்மந்தியோனிவாய்ச்சனிப்பச்சாபமிட்டருளினையேனு
மங்கெமதமலனுதிப்பிரானுற்கடியராத்தொண்டுசெய்ஞானந்
தங்குறவேனுந்தயவருளென்னுச்சரணத்திற்சரணமென்றழுதார். (உ௫)

அழுதலர்பொருமலுடன்றொழுமவர்மேலாரணற்கருள்சுரந்தடுக்கா
வழுவலரானவானவரேநீரனைவரும்வழுவினையகற்றத்
தொழுதலர்நித்தியக்கயதீரத்தோமிலாமுட்டமாந்தலம்போந்
தெழுபொறிகரணமாதிகணீக்கியீறறுதவத்தினிலிருமின். (உ௬)

தவத்தினிலிருந்தாற்றுமைத்தாயாரருளினுற்றம்பராபரனு
மவத்தினைமாற்றுமாதலாலவனேயகன்மினேவென்றருளியபின்
பவத்தினைமாற்றப்பதைத்தபண்ணவர்கள்பண்ணவம்பாற்றுமாமுட்டச்
சிவத்தினைப்பெறுவான்சென்றுமாதவத்தைச்செய்திடலாயினர்மன்னோ. (உ௭)

இமையவர்க்கிறைவனம்பராருடனேயிலங்கிடுதனுகரணங்க
ளமைவுறச்சலியாதம்பரந்தாமனடிமலரகத்தினராகிக்
கமைவுறக்காய்ந்தகட்டைகண்மானக்கடுந்தவமுற்றநாண்மனுவென்
றிமைமிகுமேந்தலாகிடுமவனுமிச்சைமுற்றிடவவணெழுந்தான். (உ௮)

சுரருடன்கூடியவர்முறைப்படியேதுளக்கமற்றமலனைக்காணும்
வர்முறுதவத்தில்வதிந்தனனூறுவருடமாவமரர்களுடன்செங்
கரமுறுந்துளவத்தெடுமணிவடத்தைக்கையகன்றறிகலாவயிரம்
பிருகுமாமுனிவவிவரிவ்வாறுற்றுநாண்முனோர்சரிதைபேசுதுங்கேள். (உ௯)

முற்றிற்று.

ஆக படலம் உசு - க்கு திருவிருத்தம் க0டு0.

——(*)——

# உஎ-வது கண்ணுவமுனிவர் தவமியற்றியபடலம்.

வேறு.

மண்ணவரும்விண்ணவருமற்றுமுளவிலங்குபக்கியசைதனிற்ற
லெண்ணவரும்யாவுமுளவண்டகோடிகடம்மையுண்டுகொன்ற
வண்ணறனையகக்குகைக்கணடக்குகின்றதகரவித்தையறிந்தமேலீர்
கண்ணுவரென்றிடுமுனியுமனுவோடுவிரதமுற்றகலந்தைகேண்மோ. (க)

வேறு.

சார்ச்சுவென்றமனுவந்தரத்திலே - மோட்சவிச்சைமுமுட்சுளவேதியன்
சாட்சியாகச்சராசரத்துண்ணிறை - யாட்சிநாதனைக்காணவாவாகினன். (உ)

ஆய்ந்தகண்ணுவனென்றிடுமந்தண - ஞேய்ந்தவெம்புலனுற்றவணுகித்தாள்
வாய்ந்தவோர்விறலைத்தறையூன்றியே - காய்ந்தவெய்யிற்பனிகருதாமலே (ந)

முக்கணீசனுமுன்கமலத்தனுந் - தக்கநற்றவமாற்றியுஞ்சார்கிலாப்
பொக்கமில்புண்டரீகக்கண்மூர்த்தியென் - பக்கநோக்கிப்பரிந்தருளென்றரோ. (ச)

மனனுபன்னிரண்டுக்கரமாமனு - தன்னைநன்றுருதாக்கச்சவித்தொரு
முன்னுமாண்டோச்சலற்றிடமோதமாப் - பன்னுமாதவந்தன்னைப்பயின்றனன். (ரு)

ஆண்டொன்றுருதனித்திரையாதிவிட் - டண்டகோரவிருந்தவமாற்றுழி
நீண்டமாதவனோரருளாற்பக்கி - தாண்டுவொனிலோர்சத்தம்பிறந்தது. (சு)

விண்டுவேண்டிவிளைதவமுட்டமொன் - றுண்டோர்மாத்தலமவ்வயினுற்றையேன்
மண்டுநின்குறைமாற்றும்வராகனு - ரண்டவனெனவோதியடங்கிற்றால். (எ)

ஆக்கையறறசொலேற்றவனக்கணந் - தாக்குமின்பினிற்றங்கித்தவத்தைவிட்
டேக்கமோடவணுாரலுக்கேகுழிப் - போக்குமாநெறிதன்னிற்புலத்தியன். (அ)

முனிவன்காணவவன்பதமுன்றிலிற் - கினிதினேத்திக்ககனங்கிளத்திய
பனியினைப்பகர்தலைசாற்றியத் - தனியன்மாத்தலமென்னணஞ்சாற்றுதி. (கூ)

என்றுகேண்முனியின்பவினுவினைப் - பொன்றிலாதபுலத்தியமாமுனி
நன்றுகேட்டந்தநற்றவனற்றவ - வின்றுஈானவணுற்றிவணெய்தினேன். (கo)

திருமணுளன்றினந்தினமென்னுளே - மருவிநாளுமழுங்காவடிவினைத்
தரவுந்தாழிலவன்பத்திமுற்றவும் - வரமடைந்தனன்மாதவப்பேற்றினுய். (கக)

நீயுமவ்வயினேருதிபோதியென் - றுயுமத்தலமாட்சியுமன்னணம்
வாயுமாறுவராகன்றன்சேவையாற் - றேயும்பேறுஞ்சொலிச்சொலிப்போக்கினன்.()

சொன்னமாமுனிசொற்படியம்முனி - மன்னுமார்க்கத்தலநதியாடியே
யென்னையாளிறைகுண்டலியேந்துறத் - துன்னுதூயதுயிலமர்தில்லையை. (கஙு)

சேவித்தேத்தித்தெளிந்திடுவெள்ளையுங் - காவித்தோற்றமுமாகுமீராற்றையும்
மேவித்தோய்ந்துயர்சில்லிகைமீவனந் - தாவித்தாவிச்சென்றவ்வயிற்றங்கியே. (கச)

நித்தியச்சுகநீராடிநின்மல - வத்துவானவராகனைப்போற்றினன்
அத்தனூர்படிவந்தமுதன்புற - வுய்த்தவுள்ளத்திலுண்டுண்டுறங்கினன். (கரு)

முற்றிற்று.

ஆக படலம் உஎ-க்கு திருவிருத்தம் கoசுரு.

——(o)——

# உ அ-வது. சேனைமுதலியார்

## சேனைசாதித்தபடலம்,

### வேறு.

வானைமுதலில்யார்படைத்தார்வளிதீநீர்மண்முழுதுடன்பூ
வானைமுதலில்யார்படைத்தாரவர்வந்தாள்கவென்றமத
யானைமுதலியாகவருமழகனடிசேரந்தணர்காள்
சேனைமுதலியாரெழுந்த சேவைபுரிந்தசெயல்வகுப்பாம். (க)

### வேறு.

மனுவுமாகருமாகர்தம்மன்னனும் - கனிவுண்டாயகனவிலையைநாடியே
பனிவெயில்குளிர்வெப்பம்பதம்புனல் - தொனிசெயுமழைதொடக்கத்தவாம். (உ)

ஊறுசெய்வனயாவுமொறுத்தரோ - நூறுகாலஞ்செயாண்டுளநூறிலா
வீறுசெய்யுமகோரமாவெந்தவந் - தேறுமாமனத்தோடுஞ்செய்தாரரோ. (௩)

மோனவிந்தியமுற்றிடுதேவர்கண் - மானநற்றவந்தேர்ந்தவராகனார்
ஞானநித்தியரோடுநண்ணுமையால் - வானமுற்றவர்யாருமாழாந்தரோ. (௪)

எம்பிரானேயெமக்குணிறைந்துள - தம்பிரானேதனக்குத்தானாகிய
தும்பிதுப்பினைத்தோன்றித்தொலைவுசெய் - நம்பனேநங்கணற்றுதிநாடுதி. (௫)

எங்குமானநினெண்ணறுங்கண்முனே - நங்களின்றவநண்ணிலைபோலுமா
லெங்குமானநினெண்ணறுங்காதுக - ணங்களின்றுதிநண்ணிலைபோலுமால். (௬)

தேவதேவவந்தாளுதிதென்றமிழ் - நாவரோதுநாராயணவாளுதி
தாவராதியெலாவுளமாயவை - மேவவாள்பரமேலவவாளுதி (௭)

சங்குசக்கரசாமிவந்தாளுதி - சிங்கரூபசிவாசிவவாளுதி
சங்கரர்க்குளாஞ்சங்கரவாளுதி - சிங்கமாய்ச்சிம்புளைச்செற்றோயாளுதி. (அ)

கருணைமாகடற்கண்ணனேயாளுதி - யருணனுக்குளருணனேயாளுதி
வருணனுக்குள்வருணனேயாளுதி - முருகனுக்குண்முருகனேயாளுதி. (௯)

ஐந்துநான்கைந்துதத்துவத்தாகிய - ஐந்துநான்கைந்துமற்றவவாளுதி
ஐந்தொன்றாறுமிலாதவனேயருள் - ஐந்தொன்றாறுமற்றாள்பரனேயருள். (க0)

மூன்றுதீயுண்முளைபரனேயருண் - மூன்றுகாலமுமுட்டிலானேயருண்
மூன்றுநீரைமுரித்தவனேயருண் - மூன்றுமூர்த்தியுண்முன்னவனேயருள், (கக)

அருளவானிலாவிர்ப்பவித்தாளுவாய் - கருடவாகனகந்துகனேயென
மருளிலாமனுமாகருடன்கர - மிருளிலாச்சிரமேந்திவானோக்கினார். (கஉ)

அண்ணாந்துற்றகண்டித்தாற்றைநோக்கினார் - கண்ணாகண்ணாகடிதெழுவாயென்றார்
விண்ணார்முன்னிலவ்விக்குவசேனரை - யெண்ணாமூர்த்தியேவவந்தவீசனும். (க௩)

சின்மயாநந்தசோதிசொரிந்தெழு - நன்மயானந்தமேனியுநற்கலை
பன்மயாநந்தப்பன்மணிப்பூண்களுந் - தன்மயானந்தச்சாந்தாதிநீர்மையும். (க௪)

கமலமானகண்வத்திரபாதமுங் - கமலமானவாழிசங்கக்காந்தியுங்
கமலமானகரமணிவேத்திரங் - கமலபாணியிற்காண்முடிச்சோதியும். (க௫)

வானமெங்குங்கமழ்வனமாலேயும் - வானமெங்குங்குளிரொளிவாசமுங்
கானமெங்குங்கழறிநொரத - கானமெங்கணுமானவர்காணவே. (கரு)

கொண்டசேனுமுதலியார்கோக்கனே - யண்டவந்தமர்ந்தார்தவமாற்றுவார்
கொண்டகொள்கையைக்கொண்டிடநேர்ந்தரு - ளண்டநின்றதறிந்துளதேவர்கோன்.

உயர்நிலத்தினரோடெழுந்தோங்குவா - னயர்வறத்தோன்றும்விக்குவசேனரை
மயர்வறத்தோன்றுமாறுகண்டேத்தினர் - துயரறுக்குஞ்சுடரடிசூடினர். (கஅ)

சூடியாடித்துதிபலபாடினு - ராடியெங்களாழ்வாரெழுந்தாரென
வோடியேயுபகாரமிட்டெச்சிமேன் - மூடிக்கூப்பியேமுன்னநின்றார்த்தனர். (கக)

ஆர்த்துளார்தமையம்பரனார்விடுஞ் - சூத்திராவதிகாதலர்சோதிவான்
காத்தவிந்திரனேககனத்தரே - யேத்துநங்களீறற்றபராபரன். (உ0)

சேயநல்லதிருப்பவளச்சோதி - வாயலர்க்கணெழுந்தருண்மாற்றநீர்
நேயமோடறிந்துய்யுமின்யாதெனிற் - காயமாயினரோடமிக்கானெலாம். (உக)

கூடுந்தேவக்குழாத்துடன்கூடியே - நாடுமிந்தவனத்தைநன்றுய்வலந்
தேடித்தேடிச்சுழன்றுசேவிப்பிரேற் - பாடும்வேதப்பழம்பொருளாகுவான். (உஉ)

பூவராகன்பூப்பூவையரோடெழுந் - தாவதாமுமக்காவனவாக்கித்தீப்
போவதாகப்புகன்றருளீந்தனன் - தேவநாதநீசெய்கெனச்சேணினே. (உங)

புகுந்துபோயினபின்னர்ப்புரந்தரன் - தகுந்தவிண்ணவரம்மனுதாபதர்
வகுந்தமாவனச்சேவைவனத்தினை - மிகுந்தவன்பின்வலஞ்செயமீண்டனர். (உச)

முற்றிற்று.

ஆகபடலம் உஅ - க்கு திருவிருத்தம் க0அக.

———(*)———

ஸ்ரீ

## உகூ-வது. வாசவனுதியா

## வனந்தொழுதபடலம்.

அந்தராதிகளுமைம்புலங்களுங்கேளாதிகளைந்துமான்மனமு
நைந்திராவசகன்னுரணநின்றுள்சரணெனநியாசஞ்செய்துள்ளீ
ரிந்தராவணிந்தாருதியர்கவிகளாகிடவிட்டசாபத்தா
னிந்திராதியரம்முட்டமாவனத்தையினிதுறவலஞ்செயல்கேண்மின். (க)

வேறு.

பூவராகர்தம்பூப்பதம்பூத்ததோர் - காவதாகுங்ககனத்தையெம்பிரான்
சேவைமேனியிற்கண்டந்தச்சேனுளா - ராவலோடமெடியறுபாதபம். (உ)

போலவீழ்ந்துவணங்கிப்புகழ்பல - காலமோவுறச்சாற்றியேதங்கடஞ்
சாலபாணிகடஞ்சிரஞ்சாரவே - வோலமாமறையோதிடலாயினர். (ங)

முன்புமுன்புகதிர்கண்மூனைதிசை - யன்பினேக்கியகன்றவினத்துட
னின்பினேகிவருங்காவிலங்குறுந் - துன்பினீக்குஞ்சரகின்னுரூடர்ச்சியில். (ச)

ஓங்குமுக்கனிப்புன்னாகவோடையில் - வாங்குதாமரைநீலங்குமுதமான்
வீங்குவள்ளையல்லிக்கணவீக்கணந் - தாங்குதீரத்தடப்படப்பைபக்கணம். (௫)

காணுகின்றசரசருகிற்கணம் - பூணுகின்றூர்போய்ப்புக்குபுகாணுழி
யாணர்நின்றவக்காடுமாகாயமா - மாணரேயதுமாயமாயிற்றரோ. (௬)

பாகமாவனமென்றபேர்பட்டது - போகதேவர்முன்போயவியப்பினை
மாகதேவரறிகிலர்மர்மமாம் - யாகமாதவயானுமுணர்கிலேன். (௭)

காடுகாணுமலைமறைவானபின் - னாடுமிந்திரனாதியரங்கொரீஇச்
சேடர்முத்தராத்திக்கினிற்சேவலும் - பேடுங்கூடும்பிரமவனத்தினை. (௮)

தண்டமாத்தவந்தன்னையியற்றிடு - மண்டராகியமுத்தரையன்னணங்
கொண்டசுவேதமெனும்பெயர்கூறிடக் - கண்டதீர்த்தக்கரையினைக்கண்டனர். (௯)

முத்தரென்றிடுதேவரைமூசுறு - புத்தேளிரொடுபோனபுரந்தரன்
பத்தியிற்பணிந்தேத்தலுமீவிலான் - வைத்தவித்தம்போலும்மறைவாயினர். (௧௦)

குருவைநிந்தைசெய்வான்கொண்டகல்விபோன் - மருவிடாதந்தமுத்தர்மறைந்தபின்
பொருவிலாத்துயர்புண்ணியர்போயறைந் - தருவமானதறிந்தவரற்புதம். (௧௧)

என்னசொல்லலெனவெண்ணியாண்டகன் - றுன்னுமுத்தரதிக்கின்கணும்பர்கள்
பொன்னின்சுக்கிலமாநதிபோயின - ரன்னதீரத்தமைந்துளபேர்களை. (௧௨)

பார்த்துநீவிர்யார்பன்னுதிரென்றிவ - ரார்த்தியோடுகேடாவலுக்கன்னவர்
பேர்க்கிலப்பிரமத்தைதவாதித்திடு - தீர்த்தமாகாலரூபர்யாந்தேருதிர். (௧௩)

காலரூபர்கள்யாங்கள்க்ரிசறு - மூலரூபமுகுந்தன்முத்திப்பத
நீலரூபவராகர்நெகிழ்த்திடச் - சீலரூபதவத்தைச்செயாநின்றேம். (௧௪)

என்றுசொன்னுரையேத்தியவன்னோரீஇப் - பொன்றிலாவனம்யாவையும்போற்றியே
நன்றுநாகருநாகர்தங்கோனுமே - துன்றுநீலமாநதிதுன்னினர். (௧௫)

நீலமாநதிநேர்ந்தவனேக்குழி - ஏலவேழ்வகையான்விருடிகள்
சாலவின்புடனண்டரைச்சார்ந்தவர் - கோலவின்புடன்கூடிக்கொண்டாரரோ. (௧௬)

கூடிவந்தவேழ்மாமுனிக்கூட்டமு - நாடிவந்திடவிண்ணினன்னுடரும்
வீடிமாமலர்வீட்டினனைத்தரு - காடுவாழ்காத்தியாயர்தம்பாழியை. (௧௭)

நோக்கியப்பெரியார்நுதலாசியை - யூக்கமோடும்பரோகையிலுற்றரோ
தாக்குங்கீழ்க்கடற்சங்கமஞ்சார்ந்தவ - ரேக்கமற்றநீராடியயாவரும். (௧௮)

நீலவெள்ளைநீர்நேரிடமாடிய - சாலயாவருஞ்சார்ந்திடுவெண்மணைப்
பாலமீதுபதுமினியோடணிந் - தேலவின்றுளவிற்றுமரைக்கணே. (௧௯)

ஆனமாமணித்தாழ்வடராகியே - மோனவிந்தியரூப்பர்களெண்ணுறு
மானமாத்துவயத்தையடைந்துள - வானமாதவவாயினராகியே. (௨௦)

அகலாவவ்வகரப்பொருளாகிய - தகராகாயமாந்தில்லைத்தலத்திலே
புகலாவிட்டுணுசாயியைப்போற்றின - ரிகலாவின்பிடையேன்றவணிங்கினர். (௨௧)

போற்றுமுத்தரப்பொன்னிபுகுந்தரோ - மாத்தியானவனுட்டானமாற்றினர்
சாற்றுமாதண்டகாசுரன்சார்ந்துள - வேற்றமாங்கங்கைமாநகரெய்தினர். (௨௨)

தண்டகப்பெயர்த்தானவன்செய்பணி - கொண்டவன்குறித்தோதியவண்ணமே
கண்டவீசானதிக்கிற்கவின்மிக - மண்டுமென்னுமாக்ஷேத்திரமன்னினர். (௨௩)

பிரமன்கந்துகவேள்வியிற்பெற்றோர் - சிரமமாஞ்சாவந்திரவருந்தவம்
மருவவாற்றுமதங்கமுனிவராச் - சிரமமெய்தினர்தேவரனைவரும். (௨௪)

மன்னுகேத்திரத்தக்கினிவாவியிற் - பன்னும்யாரும்படிந்தங்குத்தோன்றிய
மின்னும்வீரநாராயணவீசனூர் - முன்னமெய்திருமுடியடிவீழ்த்தியே. (உரு)

தண்டந்தாங்கெமனுலுறுபீழையெற் - கண்டாதாளுதிநிற்சரணென்றமாக
கண்டமாமுனிகாலனூரேகிடா - மீண்டுசெய்தருள்வீரநாராயண. (உசு)

அடியரவ்வயனுக்குஞற்றுசினைப் - பொடியதாக்கிப்புரந்தருளென்றரோ
குடிகள்யாருங்குழறித்துதிகளா - விடையடைந்தவன்விட்டவ்வனமெலாம். (உஎ)

கண்டுபோற்றிவரும்வழிகானிலே - கொண்டன்மேனிகொழித்திடுசோதிசே
ரண்டராமரிபாரிடரங்குளா - ரண்டரண்டிடவந்தராமாயினர். (உஅ)

செழித்தமெய்செய்ததேவனென்றெண்ணுது - பழித்தபாதகரின்னர்முகத்தினில்
விழித்தலாகாதென்றேகொலவ்விட்டுனு - வழிக்கிலம்பாரம்பரமாயினூர். (உகூ)

என்றுகூறியிராவிற்குண்முட்டமே - நன்றுவந்துறுநித்தியநாமமார்
துன்றுபட்டத்தொடரினிற்றெக்கணத் - தென்றிருந்தமலன்னருளெண்ணியே. (௩0)

இருக்கும்ராவினிலிம்பருமும்பருந் - தரிக்குங்காதிற்குநோக்கிற்குந்தண்டிலா
விரிக்குமின்னிசைவேதத்தினின்னிசை - தெரிக்குமின்னிசைதூரியவின்னிசை. ()

பாடுமின்னிசைபன்னியர்பன்னியே - யாடுமின்னிசையாராதனையிசை
கூடுமின்னிசைகோதில்குணஞ்சொலி - நாடுமின்னிசைநாகர்கள்கேட்டனர். (௩உ)

கேட்டயாவருங்கூடியிக்கேதமில் - பாட்டுமாட்டுமெங்கென்றுபரிந்தரோ
நாட்டங்கண்டிடநாடியுநாடிலா - வாட்டங்கொண்டனரின்றுமுண்டாங்கரோ.(௩௩)

அல்லிராமுற்றுமாயவிவ்வற்புதஞ் - சொல்லயாவருண்டவ்வராகன்சுக
நல்லகோவினினுளுமுண்டிவ்வணம் - புல்லுநித்தருமுத்தரும்போற்றல்காண். (௩௪)

விடிந்தவோரையவ்விண்ணவரக்கயம் - படிந்துபன்னிரண்டாகியபுண்டரங்
கடிந்தநன்மனமாதிகள்கட்டியே - யொடிந்ததீயராயுற்றெளிமேவியே. (௩௫)

நேரும்பூவராகன்றனைநென்னல்போல் - வாரும்வாருமென்றேகிவணந்தனைத்
தூரொடேத்திச்சுற்றிச்சுற்றிப்போற்றினர் - தேருவாய்பிருகென்றிடுதெள்ளியோய்.()

முற்றும்.

ஆக படலம் உக - க்கு திருவிருத்தம் ககஉ௫.

———(o)———

ஸ்ரீ

# ௩0-வது. திருவாழியாழ்வான்

## சேவைசாதித்தருளியபடலம்.

வேறு.

கருவாழிவற்றவெழுங்காராழித்திருமேனிக்கடவுட்டாட்பூ
மருவாழிநலசயான்மண்விண்போற்றப்பணியாற்றுமறைவல்லீரே
யுருவாழியவுணரும்பர்தமைச்செகுப்பான்புரிமாயமூலயவந்தத்
திருவாழியாழ்வான்றனிகன்மாட்சியிலைவிதித்துங்தெளிமினீரே. (க)

சேவைசாதித்தருளியபடலம்.

## அசுரமாயையகன்றபரிச்சேதம்.

உன்னுமாவனந்தன்னைச்சூழோரையி - லொன்னலரென்றசுரர்களோச்சறத்
துன்னுமாயையைத்தூண்டியுத்தேவரை - மன்னுமாமரணத்திடவெண்ணினார். (உ)
முன்னைநாளின்முறைப்படிச்சிரேணி - தன்னைநல்வலமாகத்தாழ்ந்தம்பரர்
கன்னிகாத்தியாயம்முனிகானின்கண் - மென்றுமோரையத்தேவர்தமொட்டலர், (௩)
அசுரர்யாவருமண்மியிவ்வேலையில் - நிசதவத்தினிராயுதநீரராய்
வசிவனத்தினராகியவானவர் - சசிவனத்திறேடேசரித்துற்றனர். (ச)
இன்னசெவ்வியிலேகியிலேகரைக் - கன்னற்குள்ளோநாங்காதுதல்செய்துமென்
றுன்னிசாப்பரியொன்றுரைமாயையாங் - தன்னையேவினர்தானவரானவர். (ரு)
வெள்ளைநிலவாருடியவிண்ணுளார் - கள்ளமாற்றிகொசதியாயம்முனி
கொள்ளுங்கோதில்குறும்பொறைதன்னிலே-தள்ளுமாவிதளர்ந்துதள்ளாடினார், (சா)
வேகசாம்பரியென்றிவிஞ்சைசெய் - நாகபாணத்தாலுகருநாதனு
மோகமுற்றமுயக்கினடக்கலா - தாகசோகவவனியில்வீழ்ந்தனர். (எ)
வீழ்ந்தகாலையெம்வேதவராகவென் - றாழ்ந்தசிந்தையொடங்கமறந்துயிர்
போழ்ந்தபோதுபொருந்தவிருத்தல்பூ - வீழ்ந்தநாணெடுவிண்ணவன்கண்டனன். (அ)
ஞானமேனிநல்லாழியாழ்வான்றனைக் - கானமேகெனக்காரமர்மேனிய
னனவானையகற்றுசெழுந்துவீழ் - கானவானின்மேற்காந்திசெய்தோங்கலும், (கூ)
எட்டுத்திக்கினுமெண்ணறுஞ்சூரியர் - விட்டொளித்துவிளங்கினர்போன்மனம்
பட்டசோதிபரப்பியப்பண்ணவர் - கட்டுநாகபரணங்கருகிப்பட. (க௦)
* தீயசாம்பரிதீதுசெய்மாயையும் - மாயமாய்ந்துவலுத்தடர்தானவர்
வீயவீட்டிமுன்வெள்கிவென்காட்டிறு - ராயவாவியொடிங்ஙனின்றோடினார். (கக)
நாகபாசநலிதலையோட்டிவெந் - தாகசோகமார்ந்தாவிதளர்ந்துள
மோகமார்சுரர்தேவர்கோன்மூசுறு - வேகநீங்கிவெளிக்கண்விளித்தனர். (கஉ)
விளித்தபோதுவிளியாவிறேதனு - ளித்தபேரறவாழியடுத்தது
மொளித்தசாம்பரியுக்கியொழிந்ததுங் - களித்ததானவர்கந்து † துண்டம்பட. (க௩)
வீடுபட்டதயித்தியர்வெம்பிணக் - காடுபட்டுளக்காடுகொணுமலே
கோடுபட்டளதாருகுளஞ்செந்நீ - ரோடுபட்டுளவோங்கல்காணுமலே. (கச)
ஆக்குமாழியாழ்வான்சமராடலை - நோக்கமாயிரத்தானுநன்றேக்கினுற்
பாக்கியம்போக்கியம்மெனப்பார்த்தனன் - தாக்குண்டேவர்தளர்வகன்றனபின். (கரு)
சக்கரத்தண்ணலாடியபூசலை - யெக்கருத்தரிசைப்பவரென்றனர்
பொக்கருக்கப்புயங்கள்வங்தெங்கடங் - துக்கறுங்குஞ்சுடர்வளையென்றனர். (கசா)

## சக்கரத்தாழ்வான்றுதிப்பரிச்சேதம்,

போற்றிசக்கரத்தாழ்வானின்பொற்பதம் - போற்றிசக்கரத்தாழ்வானின்பொன்முடி
போற்றிசக்கரத்தாழ்வானின்பொற்கரம் - போற்றிசக்கரத்தாழ்வானின்பொன்னுரு.
போற்றிமுத்திக்குவாயிலாகிற்குயாம் - போற்றிபத்திக்குவாகிலாகிற்குயாம்
போற்றியாரியராற்பொறிகிற்குயாம் - போற்றியேகிசம்ராட்டெனுகிற்குயாம். (கஎ)

* சாம்பரி=ஓர்மாயவித்தை. † கந்து=கழுத்தடி.

காலதத்துவங்கட்கெலாமதிநீ - மூலதத்துவமூர்த்திப்புதத்துநீ
சீலதேவர்சிரத்தொளிர்சின்னநீ - தாலம்யாவுமாள்சக்கரவர்த்திநீ. (௧௯)

தமஞ்சவட்டிடைசக்கரத்தையனீ - சமஞ்சவட்டிடுதும்பைப்பூத்தாரனீ
யிமையவீசன்றுருவாசனேத்திடச் - சிமையமாயின்றுஞ்சேவையீசெல்வனீ. (௨0)

நூறுபத்தரநூங்கிடுசோதிநீ - நூறுபத்ததுகரத்தாம்விநோதனீ
நூறுபத்துகோடிக்கூழைநூறிய - நூறுபத்துக்கோடிவீரவாகுநீ. (௨௧)

வாழியந்தணர்மாமறைவாழ்த்தற - வாழியந்தணனானமகேசனார்
வாழியங்கரமாருதிருந்தவன் - வாழியந்தணர்வாழ்பெறநின்றநீ. (௨௨)

நீயன்றேசுகிராதியமுச்சுடர் - நீயன்றேநிகழ்சக்கரவர்த்திகள்
நீயன்றேநமன்முன்னநின்றுள்பவன் - நீயன்றேமுத்திசேர்தடங்காட்டுவோன். (௨௩)

என்றவ்விந்திரனாதியரேத்தினை - யன்றவ்வாழியகங்கொடுபோயபின்
றன்றுதூங்கல்விட்டாரிணைமூழ்ந்தவர் - அன்றக்காட்டைகடந்துமுன்போலவே. (௨௪)

பாகசாதனன்பண்ணவரும்வல - மாகவேழுதினமுமவ்வண்ணமே
யோகநாதனிசைத்தருளின்படி - யாகவானந்தவத்தத்தைச்சுற்றினார். (௨௫)

முற்றிற்று.

ஆகபடலம் ௩0 - க்கு திருவிருத்தம் ௧௧௫0.

:(o):

ஸ்ரீ

# ௩௧-வது ஸ்ரீபூவராகர்

## சேவைசாதித்தருளியபடலம்.

வேறு.

சாந்தமேசமதமாதியேமுதலாந்தண்ணியநீர்மைசேர்தவத்தீர்
பாந்தமாகியகண்ணுவமுனிமனுவிந்திரன்சுரர்பாண்மலர்க்கமலை
காந்தனாரானைப்படியெழுவைகன்முட்டஞ்சூழ்காட்டினைவலமாச்
சூழ்ந்தபின்னெம்மான்சேவைசாதித்ததிருவருள்சோர்வறத்தெளிவீர். (௧)

வேறு.

எட்டதானதினத்தினிலையமே - கிட்டினித்தியமாகக்கிளக்குறும்
பட்டந்தன்னிற்படிந்துயர்பன்னிரண் - டிட்டநாமமிலகவணிந்தனர். (௨)

வாமமாமறையுச்சிவழங்கிய - நாமமந்திரமெட்டொன்றுவினிற்
காமமோடுகலித்திடுவோர்களாய் - சாமமறைசாற்றிடுநாவராம். (௩)

தக்கதண்டுளவின்மணிதாமரை - யக்கமாமணியாரபவித்திர
மொக்கமார்பிலுலாவிடும்பராப் - புக்குநல்லனுட்டானப்புனிதராய். (௪)

தானைமன்னன்சாதித்திடுநாளினி - லானைமன்னன்முனனுனுகுமென்
றானையன்னநீராதியையோச்சினார் - வானைமண்ணையாண்மன்னனைநோக்கினார். (௫)

## சேவைசாதித்தருளியபடலம்.

வெண்மணூர்த்துவபுண்டரமிட்டனர் - தண்மட்டாமஞ்சத்தாய்நிறந்தாழு
விண்மட்டாவொளிவீசுஞ்செழுஞ்சுட - ரண்மட்டாருமரித்திரையார்த்தனர். (௬)

நோக்கோராயிரத்தானுநொடிக்கொணு - வாக்கமாமினத்தாருமதங்கருங்
காக்குமாமனுவுங்கண்ணுவனெனு - மூக்கமாமுனியும்மற்றுள்ளாருமே. (எ)

முதலிசேனைமொழிந்தநாளாயிற்றே - நுதலிலோங்கெங்கணுழைஞானத்துளோய்
சுதவிமானவெங்கான்மனங்கன்றுதே - நிதலியாளெனநின்றுதுதித்தனர். (அ)

உத்தராயணமோங்குறுகும்பத்திற் - சுத்தசுக்கிலபக்கத்துச்சூரிய
னத்துநாளிலிரேவதியாம்ரத - சத்தமித்திதிதன்னிலேதற்பரன். (௯)

வாரிமாமலர்கற்பகநித்திய - சூரிமார்கள்சொரிதரத்தூயநா
நாரிமார்கணடஞ்செயநன்முத்தித் - தூரியங்கடவைப்பத்துவக்கினர். (௧௦)

காண்டமூன்றுக்கணிமறையாவும்பல் - லாண்டுபாடிடவாகிடவாகிடத்
தூண்டுசோதிச்சுடர்கோடியாகுமார்த் - தூண்டர்தாவித்தழைமொளிதந்திட. (௧௧)

ஒத்தவிற்றழைமாவெயிற்கற்றைவா - னத்திஞன்மறைவேள்விகஞன்கூமே
சுத்தமேனியெடுத்தசுவேதமா - மத்தன்பூவராகப்பிரான்சேணின்வாய். (௧௨)

படிகமொத்தபடிவத்தைக்காட்டினுன் - கடிகைக்குள்ளேயிக்காசினிகாட்டினுன்
சுடிகையிற்சுடர்மோலிதுலக்கினு - னடிகைகண்ணரவிந்தப்பூவாகினுன். (௧௩)

கோடிமாமதியின்குளிர்கொள்ளுரு - நாடியேந்துபற்பூணணிநம்பரன்
கோடிசக்கரந்தண்டுவாள்வில்கொடு - நாடுமாநளினக்கரநாட்டினுன். (௧௪)

முட்டக்கோடியிற்பூமுளைமோகத்தான் - குட்டத்தாமரையாலருள்கொட்டுவா
ளிட்டமார்பிலிலக்குமியேற்றத்தான் - கட்டுசேவக்கங்குல்லைகாணுகத்தான் (௧௫)

புன்னகைப்பூபொலிதிருப்பூவினு - னன்னவையனகத்திருப்பூவினுன்
துன்னுந்தூயருளப்பதத்தூய்மையான் - றன்னைஙான்றடந்தன்னிற்கண்டாரரோ. (௧௬)

கண்டதேவருங்கண்ணுயிரத்தனுங் - கொண்டவானந்தக்குப்பாயராகினுர்
தண்டந்தண்டமெனப்பூமேற்றுவிமண் - ணண்டவீழ்ந்தட்டாங்கம்பஞ்சாங்கஞ்செய்தார்
ஓடுவாருகப்பார்விழுந்தாலிப்பார் - நாடுவாரச்சோநாமென்செய்கேமென்பார்
தேடுவாரையன்சேவடிகாணிக்கை - வாடுவார்காணுமாலினுன்மாழ்குவார். (௧௮)

எந்தாயெந்தாயென்றேங்குவாரெம்பிரான் - வந்தான்வந்தான்வாரும்வாருமென்பரால்
நந்தாநம்முனநண்ணினுனேயனேச் - சந்தார்தற்பரன்றன்னருளென்னென்பார். (௧௯)

### வேறு.

பரஞ்சோதிமயமானபங்கேருகக்கிழத்திபதியேநின்ற
னுரஞ்சோதியுருவனந்தமாங்கோடியருணரெனவுறுதலாலே
சிரஞ்சீவியானோருஞ்சேவைகொளமுற்றுதநின்றன்சீர்த்தி
தரஞ்சேராயெமதுவிழிதளர்ந்துவடிவதுகாணுந்தரமன்றந்தோ. (௨௦)

கூசிவிழிப்பையுளுடனலிகின்றுநின்சோதிகுலவுமேனி
தாசரெனுமெமதுவிழிக்காகுவணங்கொடுசேவைசாதியென்ன
வீசனுமவ்வாறேகாண்பார்தம்விழிக்கியைகாந்தியிடுமாசேவை
யாசரித்துக்காட்டிடலுமப்பிரமேயப்புரனையண்மிப்பார்த்தார். (௨௧)

தயைபொறையாணதமனைவருமுத்தேவிமார்களெனச்சமைந்தவூ
மியைசித்ததமதுவென்னயுயிரமணிவரமென்னமான்றண்டென்ன

வயத்தெருளையிருளைவாண்மறையென்னவாங்காரம்வளையில்லென்ன
நயந்தவிருபூதமலையையிரண்டுமோலைகளென்னகுவாய்போற்றி. (உஉ)

மாசறுநன்மனனையொளிர்சக்கரத்தாழ்வானென்னமறையின்ஞானத்
தேசினைநல்வளையென்னச்சிறந்தகன்மஞானங்கள்செகுவேலென்னத்
தூசறுநற்சுருதியெலாந்தொகுகலுழனையமெனச்சுத்தநீர்மை
வாசமுறும்படுக்கையெனவவ்வியொளிர்மாதேவமலர்த்தாள்போற்றி. (உ௩)

முன்னலுறுமூன்றுவியாகிருதியுமுந்நூலென்னமுனிவரேத்திப்
பன்னுதிருவாய்மொழிகளவிர்கிரணமணிச்சோதிபரப்பாநின்ற
மன்னுதிருமகரகுண்டலமென்னவப்பிராகிருதமாயை
தன்னையொளிர்தமனியமாங்கோடியெனவசைத்ததனிப்பரமேபோற்றி. (உ௪)

நல்லதிருமெய்ஞ்ஞானநாவலர்தம்பத்தியெலாநற்பூணென்ன
வல்லபெருநற்கருணையென்பதைநற்கலவையெனவழங்குந்தன்பா
லில்லைகளைகண்ணருடியென்பாரைப்புரக்குமருளின்பூணென்ன
வல்லையறுத்தடியர்பிழையகற்றுதுமென்றிசைச்சிலம்பாரடிகள்போற்றி. (உ௫)

ஆசரித்தாரிடரகற்றும்வாகுவலையமபுனைந்தவழகுபோற்றி
மூசுறுபல்கோடியண்டமுதற்கோவென்றிசைகிரணமுடிக்குப்போற்றி
கேசமுறுசராசரநின்றுகுளிர்திதிபுரியுநீர்மைகாட்டும்
வாசமுறுவெண்குடைக்குஞ்சாமரைகடமக்குமிகவணக்கம்போற்றி. (உ௬)

எஞ்சாவெம்பிழையுஞற்றியெமக்கொருகாற்கைகுவித்தவெல்வீர்தீமைக்
கஞ்சாதிரெனக்காட்டுமபயவரதப்பூக்கட்கன்பிற்போற்றி
நஞ்சாருமிடற்றுனைநல்கினவக்குழவிதருநற்பூப்போற்றி
துஞ்சாதபிரணவகாயத்திரிமாப்பூவையுருசசோதிபோற்றி. (உ௭)

மூவாதபேருலகையொருகோட்டினுலெடுத்தமுகப்பூப்போற்றி
யோவாவெவ்வுயிர்த்தொகுதிக்குள்ளிருந்துநோக்கியருளொளிப்பூப்போற்றி
மேவாததேவமனிசாதிகளைக்கீழ்க்கிடத்திமிதிபூப்போற்றி
தாவாதவாரணமாகிதைதமிழ்வேதமகிழ்தருபூப்போற்றி. (உ௮)

வீடாக்கும்பெற்றியறியாத்தேவர்தலைமைப்பொருளாவெண்ணுவார்கள்
கூடாக்குவானையதைவீடாக்குவானைவினைகொடுக்கனை
நாடாக்குவானையுண்டநாரணனைப்பரம்பொருளாநாடிக்காக்கப்
பாடாக்குங்கங்கைதருபாதபதுமத்தாட்குப்பல்கால்போற்றி (உ௯)

மதிமௌலிக்குள்ளிருந்துமறைமௌலிக்குள்ளிருந்துமணிப்பொனுவே
விதிமௌலிக்குள்ளிருந்துவினைமூன்றுமிகவாற்றிமோக்கவீட்டுக்
கதிமௌலியணிபரமேயனுலேவிலங்காகவானதீச்சொல்
கொதிமௌலிக்காகாதுகொழியருணின்கட்கோடிக்குரிமையாக்கி. (௩0)

அருள்புரிதியெனுங்ககனத்தரசனையுந்தேவரையுமாண்டானோக்கி
யிருள்பிரியுமாணவத்தாலாப்புண்டவ்விண்டையனையேகேயென்ற
தெருளகன்றீர்கேண்மின்மிகத்தேம்புகடும்பீலைழயினைற்சிறைதந்தீர்நீர்செய்
மருளகன்றமகத்தானதவத்தானுமகிழ்வடைந்தாழ்வரமென்வண்டும். (௩க)

வரந்தருதுங்கேண்மினெனுவாணையிடவெல்லாருமுண்மேல்வீழ்ந்து
புரந்தருளும்பெருமானேபூவீட்டுப்புத்தேளாற்புறவந்தன்னிற்
கரந்துகுரங்கியோனியில்யாம்பிறந்தாலுமப்பிறப்பிற்கடந்தகாலந்
தரந்தரமாயறிந்திடவுநின்றொழும்பினின்றிடவுந்தயைசெய்தாள்வாய். (௩௨)

வேறு.

தரணியுண்பெருமானிசையசைமகதிதடவியப்பரனருள்பொதிந்த
பரணியென்றியம்பும்பாகவதாக்கிரேசராநாரதர்பகர்தல்
வரமணியாழிவணமறையரேவருதிர்கொல்பின்னரம்முனிவர்
சிரமணிசீமான்புங்கவர்முதலோர்தீமைதீர்வகையருடெரிமின். (௩௩)

முற்றிற்று.

ஆக படலம் ௩௧ - க்கு திருவிருத்தம் ௧௧௮௩.

ஸ்ரீ

# ௩௨-வது. இந்திராதியர்க் கெம்பெருமான் நியமித்தருளியபடலம்.

மறைச்சிலம்பருக்கன்மதிவிழியகரமேனிகாயத்திரிவதன
மறக்குணஞ்சாந்தமந்தமிலின்பமரிவைய * ரலர்மனையம்போர்
திறக்குணமகராதிதிபுரிபெருமான்றிருவடிக்கினியவோபிருகே
யிறைக்குணச்சுரருக்கருணியமனத்தைதயிசைக்குதுமசைப்பறக்கேண்மோ. (௧)

வேறு.

ஆண்டவநின்னடிமைகளையாளுதியென்றிடுசுரர்மேலருட்கண்சாத்தி
மாண்டதிருவாய்ப்பவளச்சோதிமலர்த்தேனுகுவமானநோக்கிக்
காண்டலுறுமீராறுதித்தியர்காளெண்கோடிவசுக்காள்காள
நீண்டகண்டம்பதிறொன்றுகோடியுருத்திரகணங்காணிமைக்காநின்ற. (௨)

இருகோடிமருத்துவர்காளிருடிமனுவானவர்காளினுமஞ்சாதிர்
பெரிதுமதுபிஃழபெரியர்மாட்டனந்தவிதத்தாலும்பெயர்க்கலாகா
வருமுமதுமனமுவக்கும்வரமீதுமெனத்தனியேவிளித்துவாக்குத்
தருமதனையறிதிர்பிருகெனுமுனிவேவெனவீணைத்தண்டோனேதும். (௩)

வாட்டமுறுசசிபதிகேணீவாலியெனத்தோன்றிவருமிராம
நாட்டமுளநம்மாலேகலிபடுமுன்னிறுதியிலேநன்றுகாண்பா
யீட்டமுள்விற்சோதியிரவியேநீசுக்கிரீவனுகி
நீட்டமுளகேண்மையனுயின்புறுதிகாலிலிநீயிசையாநின்ற. (௪)

கோடுடைக்கும்வளிகூற்றிலாயவநுமானெனப்பேர்கொண்டென்றொண்டிற்
கேடுடைக்குங்கெழுஞானபத்திவைராகமாங்கிழமைபூண்டு

பிரமன் வேள்.

நாடுடைக்குநிசிசரரைமசகமெனப்பியைந்தவிக்குநற்றிண்மேவி
யீடுடைக்குமெனதுபதநாமமதையகன்றறியாவினியனுதி. (௫)

ஆனதசப்பிரமுதியென்னபிதானவெதிவரனுயனந்தமரன
ஞானமனுக்குழுக்களுக்குநாயகனுயசுராரிராக்கதரேயாதி
யீனமுறுமவர்கிழத்திகளைப்புலம்பச்செய்யுமுருத்திரனுநந்தான்
மானமுறுமறைநாமத்தொண்டுமேறந்தறியாதமதிஞனுதி. (௬)

ஆணையகன்றறியாதசிரஞ்சீவியாயிருந்தேயடுத்துநேருங்
கோணையகன்றறியாததுவாபரமாயுகத்தக்தக்குந்திச்சேயாய்
வாணியுளமாவீமனுகியிருந்தினிமேவுமூழிப்பின்னர்ப்
பாணிமறையவன்பதத்தைப்பெற்றுடலம்படைப்பிரமன்பதம்பெற்றுய்வாய். (௭)

தெளிவகன்றதேவர்களேயெல்லீருங்கவியாகிச்செனித்துமுங்கள்
களியகன்றசுருதிசாத்திரஞானபத்தியினிற்கலக்கமில்லை
பளியகன்றவென்பாதம்பற்றவகன்றிருப்பதில்லைபழயஞான
மிளியகன்றவணமேற்றென்னுடன்பதத்திலுறுதிரெனவிசைத்தானெம்மான். (௮)

கலக்கமுறுகண்ணுவனேநீயறிதிபூருவத்திற்கவின்வீடீயு
மிலக்கணஞ்சேர்பிரயாகைதனிற்றவத்திற்புத்தேறவிருந்தியாரும்
விலக்கரியதவம்புரிந்தாயதையுணராவிக்காலுமேன்பாடுற்ற
நலக்குரியவேள்விபுரிந்திடப்பூவையுமுதுவருஞான்றுமாதோ. (௯)

பூசோதனைப்புரிநாள்புற்றுலேமூடவிருந்துளவுன்சென்னி
யாசாகுநோயாற்றவாற்றுமல்வாயுவினையறிதிவேதத்
தேசானைமாமூலரூபமுடன்பணியாததீயனுதி
யீசானனுக்கடுத்தானுக்கடுத்தானுகியுளவிறையேயென்றாய். (௧௦)

அச்சாவநீயிடலுமவன்கடுகிக்கண்ணுவயானறியாத்தீக்கே
யிச்சாவமிட்டதனுனியிராக்கதனுகியிருத்தியென்று
னச்சாகின்றிடுநீயுமிராவணன்றன்றம்பிவிபீடணனென்றாகிப்
பொச்சாவென்னினியவடித்தொண்டனுயுலகேத்தும்புலவனுவாய். (௧௧)

என்றுலேயெற்றவிடுமிராவணன்றனிலங்கையரசெய்திநாளுந்
துன்றுநின்றிடுபோகந்துய்த்திறவாப்பேறடைந்துசோகந்தீரப்
பன்றுநின்றிடுமிந்தப்பதுமனழிந்திடுஞான்றென்பக்கமேவி
மன்றுநின்றிடுநிரதிசயசுகவானந்தமதில்வாழ்தியென்றான். (௧௨)

மருக்கமுறுசுவாயம்புமனுவேநீமுத்தியினில்வாஞ்சைமேவி
யிருக்குநெறியான்றருவனுனலுநீயிரவிகுலத்தினேகி
யருக்கனெனுந்தசரதனுப்பிறத்திநினக்கினியமகனுகிவந்துன்
பெருக்கமுளமரணத்திற்பிண்டோதகந்தருவல்பீடுற்றேய்நீ. (௧௩)

முத்திநிலைபெறுவிஃதேமுன்னுமுனுழியெனமுகுந்தனேதிச்
சத்தியநன்றுணர்ந்தமதங்கப்பெயர்மாமுனிவரநீசார்ந்துகேட்டி
சுத்தமுறுதுங்கபத்திரைப்பீடுதருமாற்றின்சூழன்மேவிப்
புத்தியுறுஞ்சுக்கிரீவன்வாழும்பொருப்பிருந்துபன்னாள்வாழ்தி. (௧௪)

நஞ்சயனத்தாழ்வாருநம்பாணியாழ்வாருநம்மார்புற்றே
யெஞ்சலறநம்போகத்தாழ்வாருமிணைதலுடனிரும்பூவுற்றே
யஞ்சகிலாக்கொடியவிராவணனுஇவிலங்குகளையடரும்வேட்கைத்
துஞ்சலின்றிப்புரிந்தாடித்துஞ்சலறவருதுமக்காற்றாயனை. (௧௫)

மதங்கமுனிவரனினக்குநஞ்சேவைமகிழ்வளிக்குமதனுநீயும்
பதங்களுக்குப்பதமளிக்கும்பரமபதமடைவையெனப்பகர்ந்துதேவர்க்
கிதங்கொடுக்குமிந்திரனேவாலியெனுநினைச்சவட்டியெழும்யான்கண்ணன்
சிதங்கொடுக்கும்யாதவர்கள்சிங்கமெனுமென்கேண்மைச்செல்வனுகி. (௧௬)

வருவையந்நாடனினிதுமனதுவக்கும்போதியெனமாற்றமோதிக்
கருவையளித்தருள்பெருமான்மற்றவர்க்குமுளகருமத்தொடக்கையோதி
யுருவைமறைந்தகண்டநெறியுற்றனனற்றவர்யாருமுடையான்போன
வுருமையினிநினைந்தேங்கியழுங்கினர்கைப்பொருளிழந்தவறிஞராகி. (௧௭)

சருவரியாந்தரிசருவகதன்சருவேசுரசருவசமசந்தோக
னுருவமுடனவதரிக்குமும்பர்கட்காத்தாயுமுடனுறுசேய்கூப
மருவவிழின்மாதாவும்விழின்மானவவதரிக்கும்வாஞ்சையான
திருவறிந்தவக்காயத்திரியென்னுமாமனுவுந்தெளிவுமேவி. (௧௮)

நாற்கணத்தம்பரரானோர்நற்றவத்தாற்பிறப்படைந்தும்பானுக்கான
கர்ற்கணத்துக்காகுத்தர்காற்றொழும்புக்காளானகனத்தைநோக்கி
மாற்கணத்துக்குணமாட்சிவழங்கியுறுபேறடைதுமென்றன்றேகா
ணேற்கணத்தாமிருபத்துநான்கெனுமாவக்கரமுமினிமையான. (௧௯)

சருவாதிகாரமுளசிராமாயணமாகிச்சகத்தேவந்து
மருவாதியருளாலேபடனமிடுமவர்காமம்வழங்கலான
வுருவாதியந்தமுவொன்றுமிலாப்பரஞ்சோதியுருவைக்காணும்
பிருகாதிமாமுனியேயென்றருவீணைக்குரியான்பேசிப்பேசும். (௨௦)

## முற்றும்.

ஆக படலம் ௩௨ - க்கு திருவிருத்தம் ௧௨0௩.

———:(o):———

ஸ்ரீ

# ௩௩-வது. வனசரன்முத்தியடைந்தபடலம்



## வேறு.

வானேருண்கண்ணார்கண்மான்முரித்தவரிபுரிக்கோற்
பூனேருணரதனர்புகன்றவனசன்சரிதை
யூனேருண்ணுலகுண்டவும்பனடிக்கன்பீரே
வீனேருண்டழிபவத்தைவிட்டுவப்பக்கேளீரே. (௧)

## க்ஷேத்திரமான்மியகாண்டம்.

### வேறு.

இப்பெரியதலத்தறிந்தவிவ்வியப்பையியம்பநும்பாலெய்தினேனு
னப்பெரியவற்புதத்தையறையாதுமறந்துரைத்தேனச்சோகேட்டி
யொப்புரைக்கவரியகொடுந்தொழின்மறவன்மாபாதகனொருத்தீவேட
னெப்பொழுதுங்கொலைபுரிந்தேயுடல்குடும்பந்தனைப்புரக்குமெரிகணீசன். (உ)

காட்டிலுறும்பக்கிகளைவிலங்குகளைக்கண்ணிவலைகழுமுட்டைய
வீட்டிமுதலியவதனாற்பிடித்தலறவதைத்தெற்றியிறைச்சியாக்கி
நாட்டினில்விற்றுடலெடுப்பானொருநாளிற்காவடியினகுமீன்பக்கி
வாட்டியதன்புண்பொதிந்துதோளேந்திமுட்டமதில்வந்தான்மாதோ. (ந)

தாமசமற்றவரேத்துந்தலமணுகிச்சிரமமறத்தாகந்தீர
வாமசமதரிசிகள்சேர்நித்தியபுட்கரணியினிற்குளித்துண்மாந்தி
மாமிசத்தைமூடைமீனைமலமகற்றுங்குளநீரிற்கழுவிமாண்ட
தாமசமாதிப்புணெனுங்காவடியைத்தன்றோண்மேற்றாங்கிப்போவான். (ச)

பூவடியாலுலகளந்தமூர்த்திமுன்றினிவிருகைமுகிழ்த்தானக்கால்
காவடியினுடன்கதிர்கற்றைகள்வீசுந்திருமேனிக்கடவுண்மானத்
தேவடியினருளடைந்துநித்தியமுத்தருக்கிணையாச்செப்பாநின்று
கோவடியின்முத்தியினிற்போவானைக்கண்டிவணிற்குறுகினோறல். (ரு)

ஏசலுறவவன்வதைத்தவிலங்குகளும்பறவைகளுமீரநீர்வாழ்
மூசலுறமீன்குலமுமிளிருநிக்கண்மேனிகொடுகோண்போர்கணைகள்
கூசலுறக்குயின்மேவும்வானமெலாங்கொழிசோதிகொடுத்துமோக்க
வாசலுறவாயினவென்றிடினதன்சீராருரைப்பர்மகிழ்ந்துசொல்லீர். (சா)

ஆனவிந்தவிதிகாசமறிதிரெனப்பிருகுமுனிக்கருளிச்செய்த
ஞானவராகப்பெருமான்கேத்திரத்தின்மாட்சியினைநன்குகண்டேர்
மோனமெனக்கணத்திரெனமொழிந்தான்வியாதகவிக்கினியதன்மைத்
தானபுராணங்களெலாமறிந்தருளுஞ்சூதனெனுமறிஞன்மாதோ. (எ)

முற்றிற்று.

ஆக படலம் ௩௩ - க்கு திருவிருத்தம் கஉகo.

ஆக காண்டம் உ - க்கு படலம் சுச - க்கு

கூடிய திருவிருத்தம் உகஈo.



ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# திருமுட்டபுராணம்

மூன்றாவது

# தீர்த்தமான்மியகாண்டம்.

## ௧-வது. தீர்த்தங்களின்றிருநாம முரைத்தபடலம்.

ஸ்ரீபூப்பிராட்டியார் அநந்தகருடாதியர்க் கருள்புரிபரிச்சேதம்.

மறையேறுமதியேறுமலரோனும்வான்சூழ், பிறையேறுசடையோனும்பேசப்பெறாத, விறையேறுமனமேறுவெழின்மேற்குலத்தீர், துறையேறுதீர்த்தங்கடொகைநாமங்கேண்மின். (௧)

மூவாதவொருகேழன்மூர்த்திவிழிமேனி - யோவாதெழுந்தேயுகாந்தத்துமுற்ற
வாவாவெனும்மாண்மைமுட்டத்தலக்கண் - மாவாழுசுகமீயுமவெட்டமுண்டால் (௨)

அக்குட்டவணியென்னேவருளென்றுசிவனு - மிக்குற்றநாரணம்மேதைமுனியின்
றக்குற்றசரணிற்சரண்செய்துகேட்டற் - கெக்குற்றமற்றானுமினிதோதலறிமின். (௩)

தானேதனக்கொத்ததாமோதரன்றாள் - வானேயென்றேத்தும்மகாமத்தகத்தோய்
மீனேய்கடன்மண்ணைமீவைத்தளித்தோன் - மானேதம்விட்டிந்தமுட்டத்துவதிநாள்.

அகியாகியானும்மவ்வகியுண்ணுவானுஞ் - சகியாதுசீமுட்டமென்றோதுதலமா
மகிவந்துமகிமாதுமாண்பாதமேத்திக் - குகிவந்தகைகால்குணங்கொண்டுநின்று. (௫)

அம்மாவெம்மம்மானக்கடல்வானமற்றே, யிம்மாநிலத்தென்னிருப்புற்றானருடீர், சொம்மாவெந்தமையுற்றசோதியெனயார்க்கும், பெம்மான்றன்பொறையானபூமாதுபேசும். (௬)

காலுண்டுகாலற்றகட்செவிகளுதன் - காலுண்டுகாலற்றகட்செவியுளுதன்
பாலுண்டுநகைசகண்டபார்மாதுகிழ்வான் - பாலுண்டுவளரீசன்படியோதலுற்றாள். (௭)

வேறு.

அறிதிகொல்சேடபக்கிகளுதவம்பாரத்தந்தரமவிர்ந்தா
னிறுதியற்றிவணேசக்ததமிலங்குமிச்சையானிருமலர்ப்பதத்தை
யறுதியிற்படிந்தென்னங்கம்வாழ்சேய்களகநசைமுற்றுறவடியே
னுறுதியிலோவாஞானவானந்தமோங்குறவோத்துரைசுயம்பில் (௮)

சிற்பராபரச்சிதானந்தகனமாஞ்சீபதிவிளங்கெனவலகி
லற்பினன்வேண்டென்சிந்தைநோய்தீர்ப்பானுசியெற்களிவரத்தாப்பா
றற்பரிவகலாவியூகங்கடணந்துதழங்கினனித்தலமதிலே
பற்பலமறைசாத்திரமெலாமறிந்தபண்டிதராகும்பண்ணவரே. (௯)

நறைமலர்ப்பொருட்டுணருமறைப்புத்தேணறசுபகரமனையகத்து
நிறைமலரவநீத்தழிவறுநலமீநீண்மதிமோக்கவியோமத்
துறைமலர்ச்சரணத்தம்பரனுழிச்செலோவறுமர்ச்சைமார்க்கக்கண்
டுறைமலர்ச்சோதிவிரசையின்றீரத்துறைதிருவரங்கமாந்தலத்தும். (கo)

வசித்திடன்மானவித்தலத்தாதிமாவராகப்பெருமானென்
றசித்திணிலாகார்போற்றிடவருடியையவென்றிடுமெனதன்பில்
விசித்தினனதனலிவணவாவோடுவிளங்கிடுமச்சுதனீவிர்
முசித்திடாதிருமினெனவவர்முத்தசித்தியரோடவண்வசித்தார். (கக)

துங்கவத்தலத்துட்டிலங்குறுதீர்த்தங்கேட்டியாற்றேகைபங்காள
விங்கிதசுகவானந்தசித்தியமாங்குளமதிறுப்பணில்விரசை
தங்குறுமூன்றுதரையுறுமூன்றேடரையுறுகோடிதீர்த்தங்கண்
மங்குறுகுறைகண்மாறிடவசிக்குமெனிலதன்மாட்சியார்வகுப்பார். (கஉ)

விடங்கசிந்துமிழும்படங்கெழுநாகமிசைதுயில்விமலனைப்பணிவோய்
மடங்கெழுமாயித்தலத்தினைச்சூழவழங்கிடுதீர்த்தமாயிரத்தெட்
டடங்கெழுநினக்குநவின்றனன்றிதியென்றனர்நாரணமுனிவர்
தடங்கெழுவனத்துச்சௌனகமுனிகாடாழமினெனப்பினுஞ்சாற்றும். (கங)

அருமறைப்புட்டேவதிகுணமரிசிக்கன்புறுபிரமபுராணத்
திருமறையேத்துமித்தலத்தீர்த்தவேந்தலிட்டதையிசைக்குதுமால்
பெருமறையறிந்தமரிசியேயந்தப்பெருந்தலத்தைந்துயோசனைக்குள்
வருமறைவகற்றச்சூழ்ந்துளதீர்த்தவகைகளாயிரத்தொரெட்டாகும். (கச)

மூன்றுயோசனைக்குண்முழங்குநூற்றெட்டாந்தீர்த்தங்கண்முனிவரேயறிதி
ரான்றவீரோசனைக்குளேவிளங்குமாறுபத்தாகிடுதீர்த்த
மேறிடுமிந்தத்தலத்தினைப்புடைசூழ்ந்திருப்பரப்பெரியமாமுனிவர்
சோறிடுஞானத்தோகைமாரோடு * சூழலிட்டனுதினமாதோ. (கரு)

முனிவர்கண்மூன்றுயோசனைசூழப்பள்ளியிட்டனுதினமோதக்
கனிவுடனிருப்பரவையபிதானங்கழறுவல்சிலதுகேணித்த
நனிதருதீர்த்தமைம்படைப்பேரானகுமணிதீர்த்தங்கணன்றுத்
தொனிதருகசமாகுண்டமப்புலகம்புலத்தியந்தோமிலவான. (கசு)

பாபவினாசங்கிருமிநல்லரணம்பதத்திரமிரணமோசனமே
தாபசுகரணப்பிசாசத்துவங்குட்டவரணமாகுஞ்சாபாலி
கோபமின்மனுவத்தேனெடிந்திரமேகூறுகுமாரமேகாலஞ்
சாபமிலனிருத்தங்குசஞ்சங்கருடணமப்பிரத்தியும்மனமே. (கஎ)

சுத்தசுவேதமச்சவச்சிங்கரேணுபாலனசுகவேணு
மொத்துறுமலமோசனமணிமௌத்துகலந்துருவாசமோசமிலா
நத்துறுஞானமாப்பிரகாசமவித்தைநாசனம்பிதிர்நாம
சத்தகன்னிகைகடரவருமவைகள்சாமதக்கினிப்பெயர்த்தீர்த்தம். (கஅ)

சிந்துபேந்திரங்காயத்திரிதேவிமன்மதந்தீபரபூத
மந்தமேடம்மேமாவராகம்மேயசிகரவவப்பிரதம்மே

---

* சூழல்—முனிவர்ஆசிரமம்.

சந்தசசடாயுவாயுகணனுவமேசவிநளவேதநாரணமே
வந்தவவ்வாசியிருடிசங்கம்மேபாரத்துவாசிவண்பக்கி. (கக)

பாண்டவம்பரசுராமமேபஞ்சவரத்துடனேசதுர்வேத
மாண்டிடுமேகத்தியஞ்சத்தமாதரமைகயம்யோகினியேமம்
பூண்டிடுபுண்ணியம்நாரசிங்ககந்தருவத்துடன்பிரமந்
தூண்டிடுதாமோதரம்பிரமாணகோடிமாதீர்த்தமேதுலங்கும். (உ0)

பாசமேபிரசாபத்தியேபயிரவஞ்சனிபீடைமாமரணந்
தூசறுகாமேச்சுரமலாயுதமேதூவகவரவசகாமே
பேசுகின்னரகுபேரகிரக்கபாணமாதித்தியம்பீடார்
மாசறுமதியஞ்சிஞ்சுமாரம்மேமகிழச்சுவத்தசாயையிலாம். (உக)

புண்ணியசீத்தம்பீமருத்திரமாமூர்த்தியேமுத்தியேபோற்றி
யெண்ணிலக்குமிநாரணத்துடனெரியேசுக்கிலங்கிருட்டிணமினிமை
நண்ணும்பார்க்கவமேகாத்தியாயனமேநாட்டிடுவாசுதேவம்மென்
றண்ணிடுவப்பிரச்சரசுடனேதழுவுசஞ்சீவியேமுதலா. (உஉ)

நித்தியசுகவானந்தவிமானநிலேயினுக்கெண்டிசைதனிலே
பத்தியின்விளங்குமறிதியோய்மரிசிபாரினிலித்தலநிகர்ப்ப
தெத்தலமின்றுலெனமறைவடிவாரெழிற்புட்டேவிசைத்ததையிசைத்தா
னத்துறுசௌனகாதிதாபதர்க்குநவையறுவியாதன்மாணுக்கன். (உ௩)

முற்றிற்று.

ஆக படலம் க-க்கு திருவிருத்தம் உ௩.

——(*)——

ஸ்ரீ

# உ-வது. நித்தியபுட்கரணிப்படலம்.

வண்டுழும்பூங்காவளர்வனைக்சான்வாழ்மறைமுறைமதிஞரேவான்கீ
மூண்டுமிழொருவண்கனலிவாழ்தலத்துளவன்றிருமேனியிலுகுத்த
புண்டரீகாதிபொலிதருநித்தியப்புகழ்புட்கரணிக்கா
மண்டிடுமொட்சிவகுத்திடற்கரிதேயாயினுஞ்சிலசொலவறிமின். (க)

அணிவளரேனத்தக்கியினுக்கையவதரித்தருளியவழியான்
மணிவளர்வனத்திலாகிடுபேற்றுன்மலிந்தநித்தியசுகமளித்துப்
பிணிவளர்பிறப்பிற்பெருகிடுபூதர்பேணசைமுத்திபெற்றுய்வான்
குணிவளர்தருஞ்சீமுட்டமேன்மருவுந்தீர்த்தத்துண்முதல்குறிக்கொண்மின். (உ)

கடிமலர்யோனிகாலமோய்காலங்கண்ணனேச்சாதனமாகப்
பிடிமலர்மணத்துப்பெரும்பிரபன்னர்பீடுயர்வாசுதேவனையு
மடிமலரகன்றமானதயோகர்வயமுளசங்கருடனையும்
படிமலர்கருமத்தவரெலாமநிருத்தப்பெயர்ப்பரம்பரன்றனையும். (௩)

தீர்க்கசம்சாரசீவர்கள்யாருந்தியங்கிடுபிரத்தியுமனையு
மார்க்கமாயடைவரென்றறிந்திடுமினிவ்வணமிருந்திடுமெமைய
மார்த்திடுபிரளயத்துறுநாரத்தவிரசித்தெனும்வடத்தடைமேன்
மூர்த்திகணுதன்மூடிருண்முசிக்குமுப்பரஞ்சுடர்குவிபடிவம். (௪)

கொண்டெதம்மூதாவிப்படியாவிக்குழவிகடமைப்புரந்திடற்காக்
கண்டனகாற்றும்மைரப்பெருமவிறலைக்கனிந்திடுதிருப்பவளத்தே
யுண்டுறுதிதியையுளுற்றி † யன்னவசஞ்செய்தொளிர்குவனெனச்சூதன்
வண்டுளர்பூங்காவனமுனிவரருக்கருளினன்பினும்வழங்குவனால். (ரு)

அண்டகோடிகளெங்கரன்முதலோரெங்கறிகிலனென்றமுதிடுமோர்க்
கண்டனையாண்டநான்குவியூகக்கமலன்றன்றுதையின்ருளாற்
பண்டையரானமுத்தர்களிச்சைப்படிப்படிவங்கள்கொண்டிந்த
மண்டலமெல்லாம்லீலையிற்சுழன்றுவருமூழியோர்தினமாதோ. (௬)

பூருவக்கடலின்றலக்கணேவசித்தபுலவராமவர்திருமேனி
வாருமவ்வியர்வைவனத்திஞன்மிளிருமகிமைசேர்சாமநன்னிறத்து
ளாருமப்பிரமசரசெனப்பெயரையடைந்ததாலதனையண்டவர்கள்
யாருமாமுத்திடாகிடும்வரத்தையளித்திரகணியரன்றன்னை. (எ)

அரித்திடுமெரியைவாயுவாக்னேயத்தமர்ந்திடுவரத்தினையடைந்து
விரித்துளவப்பிரச்சரசினுக்குமேற்கினிலொன்றரையாக
வரித்துளயோசனைக்கணும்பூவராக்ஞர்வண்டலமேகித்
தரித்துளபரமானந்தவாகாயச்சாமியையிதயதாமரைமேல். (அ)

கண்டவராகிக்கலுழ்ந்திடுமானந்தப்புனல்கான்றிடவஃதார்
குண்டமேகண்டார்நித்தியமானகுளப்பெயரிட்டனர்கோதாம்
பண்டமேமாற்றுஞ்சிரமபகரிணியெனப்பெயர்பன்னினர்பின்னுந்
தண்டமேயுடையதாமரைக்கண்ணுன்றூனமார்நித்தியர்மாதோ. (௯)

மாகமாமதியிலாதிநாடன்னின்மருவிடுபௌவமாதிரக்கீழ்
வேகமார்கடலிலாடியக்காலேவிளங்குமப்பிரசரசினிலே
யாகமார்ந்திடவேகுளித்தநாள்சாயுமமையமேநித்தியமாகுந்
தாகமார்சயத்திற்றீர்த்தமாடிடுவோராகியக்கயத்தருகமர்ந்த. (௰)

புண்ணியப்பூவராகனைப்போற்றும்புண்ணியகோடியரெம்போ
லெண்ணியவனைத்துமெய்திடுமுத்தநித்தியராகிடக்கடவர்
திண்ணியவரமீதென்றனரதன்சீர்செப்பிடற்கருகர்யார்திறமா
லண்ணியவாழிவனத்தமர்பிரமகுலத்திர்காளெனப்பினுமருளும். (௧௧)

மாகநற்றிங்கடனிலிரதப்பேருச்சவமலர்மகனைப்போ
லாகலேற்றுயர்ந்தோரத்தினமலையாரத்தியிலாடியத்திகளாற்
றேகையார்வேகத்தற்புதக்கணக்கிலுரைகுதிதிரைக்கணத்தோடு
யாகையார்கோதுமதகசத்தினராவாரிசூழேழுதீவினுக்கும். (௧௨)

மன்னவராகிமானிடரந்தமருவியேமறுபிறப்பினினன்
குன்னிடுநிட்காமிகள்பதமுறுவருண்மையித்தலத்தின்மாட்சிமையைப்
பன்னிடுபலர்க்கெலாஞ்சொலலாகாபண்புறுபத்தினிமகற்குந்
தன்னிருபதமேகதியெனுமவர்க்குஞ்சாதுவாமவர்க்குமேதருமால். (௧௩)

முற்றிற்று.

ஆக படலம் ௨ - க்கு திருவிருத்தம் ௬௬.



† அன்னவசம்—அறிதுயில்.

## ௫-வது. மணிக்கிரீவனென்கின்றமகாராசன் குருக்குமாரனைக்கொலைபுரிபடலம்.

திருமகளத்திமாசுணநத்தித்திருநயனந்துயிலினிதா
யொருமகதேவனுகந்துகொளுள்ளத்துயர்மறைக்கிழவரேயொருமன்
பெருமகமோகப்பிச்சினார்கலியின்பிணைவுபட்டினைத்துழன்றேங்கிக்
குருமகனத்திகொணடவன்முத்திகொள்கதைவிள்வதைக்கொண்மின். (௧)

இன்னபுட்கரணிதன்னிலாமிதிகாசங்கள்பன்னூறுளவவற்றி
லுன்னவொன்றிசைப்பல்கேண்மினோமணிக்கிரீவனக்கேகயதேய
மன்னவனாகியரசுசெய்வேலையன்னவன்மாட்டுறைமதியிற்
பன்னிடுமினியபுரோகிதராகப்புகதருகுர்ச்சரமுனிவர். (௨)

சித்திசெய்பௌண்டரீகமாமகத்தைசெய்திடவெண்ணியத்தீக்கை
நத்திநடாத்திவருமுழிமகக்காநற்பொருள்வேண்டியம்முனிவர்
புத்திரன்றன்னைப்புரவலன்பாற்போய்வருகவென்றேயினரவரு
மத்தினமரசனிருப்பினைநேடிப்போந்தனரத்தினமாதோ. (௩)

மாறன்வெஞ்சிலையிலெழுமலர்க்கணையான்மான்முதிர்ந்தடக்கருமோக
மேறினனாகியிதழ்கனிவிழிசேலிணைத்தகச்சறுமுலைகோங்கு
நாறணியகன்றவல்குற்றேரருவண்பெருவாளைநற்கூந்த
லாறணிமுகிலாந்தருணியாமனைவிதனைப்புலுமாசையிலாழ்ந்தி. (௪)

அந்தநற்புரத்தேயைந்தணைமஞ்சத்தமர்ந்தறுபத்துநாற்கரண
முந்திடுமெதனுகமநெறிப்படியேமுற்றுமற்றவரெனவாடைச்
சந்தமேமுதலதணந்துயிருருகத்தாழ்ந்திருந்தாழருங்காமம்
வந்திடப்புல்லிக்கிடக்கும்வைகலினைமதித்திடாவிம்முனிமைந்தன். (௫)

மாகமாரரசனரண்மனைபுகுந்துமலர்தொறுமாய்மதுவண்டின்
வேகமேயியையவேந்துறுமிடங்கண்முற்றுமாய்ந்தடக்கருங்காம
போகமுண்டுறங்குமொருவருஞ்சென்றுபுகப்பெருப்பொன்னிழைசயனத்
தாகமார்கூடம்புகுந்துநோக்குழியத்தரணிமன்மனையுடறழுவி. (௬)

காமவெங்களியுண்டக்கருமினியகட்செவிகண்மிடைந்துருண்டு
வாமவெம்முடல்கண்முருக்குணக்கிடத்தன்மானவேபுல்குறுமமையம்
வேகவம்முனிவன்கவுச்சனென்றிடுவான்வெள்கியங்கொதுங்குறுதந்தோ
போகவெங்களியுண்ணரசருகுற்றான்பொறித்துளவிதியெவர்மறுப்பார். (௭)

முதிர்நிருவாணத்திருவர்தங்கிடக்கைமுனிமகன்காணலைக்கண்ட
வதிர்குரற்சியத்தரசன்கண்டரிக்குமதிகருஞ்சமருமுண்டென்னக்
கதிர்குலையானக்கரிசினருரைத்தல்கண்டநன்மேதையர்கடுப்ப
வெதிர்குலைகுலையவெழுந்துடன்மறந்தேயிலங்கிடுசீற்றவெந்தணலில். (௮)

வெந்தெழுபுகைக்கண்ணனற்பிழம்பூற்றவிலங்குகூர்நுதிவடிவாளை
வந்தெடுத்தோடிமதியருள்குருவின்மகனெனவெண்ணிடாதந்தோ
வந்தநன்முனிவன்சிரத்தினையறுத்தேயகன்றுயர்சினத்தினைத்தவிர்ந்தா
னந்திடுசீற்றத்தினுக்குமேற்றீயகுணமெனுண்டுரைமினோநல்லீர். (௯)

தலையறுப்புணலையவன்பினரெழுந்தாபதரனைவருமுணர்ந்தே
யலையறுப்புனல்செய்யறிவரும்யாகத்தமர்முனிவரனவயினேடி
மலைவறுமன்றனும்மகளுவிமன்றடிந்தனனெனக்கேட்டவ்
வுலைவறுமுறவோனுடலனல்விழுந்தவுவமையிலுயிர்படைத்தோய்ந்தான். (௧௦)

## அதர்வணவேதத்தணியெழுபரிச்சேதம்.

அடக்கருந்துயராமம்பரத்தாழ்ந்திட்டடர்கரையறிகலாதரற்றி
வடக்கருந்தீயும்வசிட்டன்சேய்மகனரிடமெழுசினமெழுதீயுங்
கடக்கரும்வெம்மைக்கனல்படுசினத்தாற்கன்றிடுகவிவரன்கரத்தின்
முடக்கருந்தருப்பைபௌத்திரமுடிச்சைசயவிழ்த்துமுனோங்குமாறறைந்தான். (௧௧)

பார்தனிலறைந்தசெவ்வியவ்வயினேபடுவலியடன்மிகுமிரத
மூர்தனிற்காணுவும்பல்வாம்பரிதியொண்வயத்தடங்கிரிபுயத்திண்
வார்தனின்மாலைவேய்பெருவீரர்வகுப்புகளுன்குமெண்ணகன்ற
பேர்தனிச்சேனைத்தலைவர்களுடனேஞாட்புறலெங்கெனப்பெயர்ந்தால். (௧உ)

அட்டகாசங்களறைந்துகொக்கரித்தேயருண்முனிவரையிவணடர்ந்து
முட்டுமிவ்வகிலமுற்றுமோர்கணத்தேமுருக்குதும்பணித்தியாலென்று
விட்டவம்மறையோன்வீரரைவிளித்துவேந்திடமேவிடப்படைக
ளிட்டவவ்வாணைப்படியரசிருக்கையெய்தியங்கரினைவளைந்தான். (௧௩)

கேகையாதிபன்றன்கெழுபடைவெள்ளக்கொள்ளையையள்ளியேகுடித்து
வாகையுற்றரசைமுடிபிடித்தீர்த்துவரிகயிற்றினிற்படயாத்தே
யோகையுற்றெற்றிமோதிவந்தறிஞனெளிர்மலர்ப்பதத்தினிற்கிடத்தி
சாகையிற்சான்றீரிவன்றனைக்கொல்வான்சாதியென்றவன்சிரமழுத்தி. (௧௪)

பிடித்துவாளோச்சிநிற்புழிமுனிவன்பிழையறுமனைவிபிராட்டி
கடுத்துளவுயிரைக்கடிந்திடாதருடிகண்ணனேயெனவவன்பதத்தைப்
பிடித்துக்கைகுவித்துவேண்டியாண்டிடுமெய்பெற்றியிலருணிறைபெரியீ
ரடுத்தவிவ்வரசையடரின்மினென்றுவஞ்சலித்தின்னணமறைந்தாள். (௧௫)

பத்தினியென்னப்படுமவள்பதியின்பாதபற்பங்களைப்பிடித்து
நத்துநான்மறையுந்தருமநூன்முழுதுநன்குணர்ந்தாற்றுநாவலரே
யெத்துணையேனுமுயிர்வதைகூடாவென்னினுமரசனேவெவர்க்கும்
பெற்றிடுதந்தைதாயவனுவன்பேரருளிழந்தென்னேபிறழ்ந்தீர். (௧௬)

ஆயிரங்கோதைமார்தமைக்கோறலாயினோர்கோவதமாகு
மாயிரங்கோவையடர்த்திடினொன்றுமந்தணன்வதையெனலாகு
மாயிரமந்தணவதையொன்றுமஞ்சுரோத்திரியன்றன்வதமா
மாயிரஞ்சுரோத்திரியனைக்கொன்றலோரரசினைவதைத்திடலாமால். (௧௭)

ஆதலான்மறையீரிவ்வரசனைச்செயத்தியையகற்றுதிர்நமது
காதலான்முதியவூழ்வினைப்படிக்குக்காலமோய்ந்தடங்கினனெவரா
னேதலாமூழையொழிக்கலாமதனாலுலகமாண்மன்னவனுழியார்
போதவாங்கோடிகோடிநான்கணிகள்பொக்குறமடிந்துயிர்வதைத்தீர். (௧அ)

தெள்ளியஞானச்செல்வராயினுமேசெய்திடுபூருவாகத்தைத்
தள்ளிடமுடியாவென்றசாத்திரமுந்தரணியிலாமனுபவமுங்

கொள்ளிடமின்றாவென்றனளழகின்குண்டலியெனுந்திருநாம
வள்ளியர்வணங்குமிலக்குமிக்கிணங்குமாமுனிமனைவிமாரன்றால். (கக)

முத்திரமலமுமூவிருகுணமுமோதமார்பொறிபுலமுற்று
மற்றவராகியகம்பிராற்கண்டவகமறுஞானியரேனும்
புத்திரசோகம்பொறுக்கிலரெனலுண்டாயினும்பொறுத்தருள்கென்றுக்
கற்றிடுமுனிக்குப்புருடகாரத்தைக்காட்டியவ்வரசனையாண்டாள். (உ0)

## அரசன்றவப்பரிச்சேதம்.

கற்பினிலகன்றகாதலியுரைத்தகருணையைக்கேட்டமாதவனு
மற்புடனிகழ்த்துஞ்சூளவம்போகாதரசன்றன்சிகைசிரஞ்சீவி
மற்புயன்றனைமுண்டிதஞக்கிமண்ணுலகாளெனப்போக்கி
நிற்புழிதிருபனுண்முதிர்ந்தாசானோர்மகன்றனைப்புரிகொலையை. (உக)

எண்ணியேயழுங்கித்தன்னகரேகவிழுந்தொருகுருமகன்சிதையப்
பண்ணியபவத்தைத்தொலைத்திடவுன்னிப்படர்தருவிரத்தியின்மன்னிக்
கண்ணிடுகானிற்கேகியிந்தியத்தைக்கட்டிக்கட்டையிற்றவம்புரிந்தான்
புண்ணியமுனிவனிறந்திடுசேயைப்புலம்பியேதோள்வயினேந்தி. (உஉ)

இட்டிமுற்றிடலுக்கெண்ணிலனுகியிறந்தொழிமகன்பிணமெடுத்துப்
பட்டகானுடுநகர்பலகடந்துபகர்தருகந்தமாதனப்பேர்ச்
சிட்டர்வாழடுக்கல்சென்றவண்வதியுந்தேவராமாயுள்வைத்தியர்பா
னட்டமாங்குழ்விநல்குதியென்றுகவின்றவர்க்கிதஞ்சொலிப்பணித்தான். (உங)

எத்தினனவருமிம்முனிப்பீழையேகிடவருள்சுரந்தரிதண்
சத்திசேர்மணிமந்திரமருந்தாலேசாவுறுமகனுயிர்தழைப்ப
வைத்தனர்கவுச்சமாதவனெழுந்தமகன்றனைத்தழுவிமுத்தாடி
ரத்துமுதனதுகேகயநாடுநண்ணினன்யாவரும்வியப்ப. (உச)

வியப்புறுமறையோன்கேகயநாடுவேந்தறவிருத்தலைநாடி
பயப்புறுபவஞ்செய்குரிசிலாமணிக்கிரீவன்முற்பயந்துளமகனை
நயப்புறுசோமசேகரநாமநன்மையன்றனையந்நாட்டினுக்கு
வயப்புறுமோலிசூட்டிச்செங்கோலைவழங்கினனவனரசாண்டான். (உரு)

சொன்மீனுநீதிச்சோமசேகரனுந்தோமில்செங்கோனடத்திருஞான்
றன்னிலம்முனிமன்றணந்துளவேள்வித்தனையியற்றிடநினைந்துழியம்
மன்னவனோர்ந்துவந்துனுற்றறவோன்மகிழ்பெறப்பொருண்முதலீந்து
நன்னயத்துடனன்னவனிடுமேவனன்றுசெய்திருந்தனன்மாதோ. (உசா)

ஆர்த்தியோடறவனெக்கியமதனையாசறவுனுற்றியவாவைப்
பூர்த்திசெய்தேத்தும்பூபதிமருமானனைநோக்கிமெய்ப்புலமை
சீர்த்தியிற்சிறந்தவிருடிகேண்மன்னேசெய்தநம்வேள்வியிற்றினமுங்
கூர்த்திடுசிரத்தையோடுளவாற்றிக்குறைவறமுற்றுவித்தனையால். (உஎ)

மகிழ்ந்தனமனைவிமைந்தனேடியாமுன்மனமெனவாஞ்சையோவதனை
நிகழ்ந்திடநிகழ்த்தியென்னலுங்கேட்டநிருபனவ்வறிஞனைப்போற்றிப்
புகழ்ந்திடுமுதுபுத்திரன்மாளப்போழெனதப்பனுற்றத்தி
யகழ்ந்தழிந்தொழிகவாக்குதியபயமென்றமூதேத்தினரசன். (உஅ)

அரசனுரிளவல்கேட்டவம்மொழியிற்கறமகன்மகிழ்ந்துன் றன்பிதுவை
வரவழையெனலுமன்னணடவனும்வனந்தவத்துளகுரவனைச்சென்
றூரமுனியழைத்தாரெனவரசென்பாலோடிவந்தருந்தவனுபய
சரணமேசேவித்தழுதத்திபோக்கியாளெனத்தாழ்ந்தனன்மன்னே. (௨௯)

அருந்தவமறையோனரசனைவிளித்தோயத்தியாயுனதிழிவகலத்
திருந்துவையாயிற்பெருந்தவநூலிற்செப்பியதியாதெனிற்குரவன்
குருந்தெனுங்குமரனுயிர்செகுசீடன்கோடிமூன்றரைநதிகூடி
யருந்தவம்புரிந்தோர்காலமேயவற்றிற்குளித்திடினத்திமாண்டிடுமோல். (௩௦)

என்றசொற்கேட்டவரசனவ்வாறேயென்னணமியையுமோவென்றுக்
கன்றிடுகொனினருமறையாற்றிற்கருத்தொருப்படவிதிதனைத்தன்
வென்றிடுகரணமனத்தினிற்பதித்துவேண்டியேவிளம்பருந்தவத்தை
நன்றுசெய்துலகோர்வியப்புறவாற்றுஞான்றிலோர்ஞான்றினின்மாதோ. (௩௧)

## அயனெழுபரிச்சேதம்.

அடரொளிபடர்ந்தகடவுளர்கணங்கண்முழுவதுமாகவாறெழுந்து
திடரொளிபடர்ந்தத்தேர்ந்தெரியற்கோசெய்தவச்சாலையிற்செறிந்து
மிடரொளிபடர்ந்தேகிடவிவணடுத்தாமேதுகேளெனுமமையத்தே
படரொளிபடர்ந்தபதுமயோனியுமேபரிவொடும்வான்வழிப்பட்டான். (௩௨)

வாணி * லஞ்சத்தேர்வாணிகாப்புத்தேண்மருவியேகவின்செயுங்காட்சி
கானிலஞ்சறுத்தத்தவமுளகுரிசில்கண்டுமெண்டண்டினில்வீழ்ந்து
நாகிலஞ்சேராத்துதிபலவிளத்துநாயினேன்புரிகுருவத்தி
தானிலஞ்சோரயானலமெய்தத்தயைபுரியெனப்பலசாற்றும். (௩௩)

குச்சராராமென்குருவுமேநிகிலதீர்த்தமுங்குழுமிடோர்கால
நச்சுறுநவைதீர்தரவவற்றுள்ளேநன்குநீயாடினையாயி
னிச்சைசெயென்றன்மகவினைக்கோதற்றேகுமென்றிசைத்தனனதனால்
வைச்சவக்கோடிமூன்றரையாறுமருவிடவேண்டுமோர்போழ்தே. (௩௪)

அவ்வரமளித்திசிருட்டிசெய்வேதத்தமலனேயென்றமன்முகத்தைச்
செவ்விதினுடித்திண்புயவேந்தேநின்கடாவின்படிசெய்தற்
கொவ்விடாதேனுநின்றவமாட்சியோகையாலொன்றருள்புரிவல்
கவ்விடக்கேட்டக்காரியமுடித்தியென்னெனின்முன்னமோர்ஞான்று (௩௫)

ஆதவனுலகிலாநதிநதங்களாகிடுதேவர்கள்குழுமிப்
போதினிலமரென்பொன்மலர்த்தாயின்போகமுண்டகிலமீன்றழிக்குஞ்
சாதமிலெந்தைசச்சிதானந்தத்தற்பரம்பொருளெனுமமலன்
பாதமேகருதிப்பெருந்தவம்பலநாள்பயின்றனர்பண்ணவர்பெருமான். (௩௬)

மூன்றரைக்கோடியாற்றதிதேவத்தொகுதிகண்முயன்றுளதவத்திற்
கான்றநல்லருளாளப்பெருமானுமனுமதிதானமேசெய்வான்
ரூன்றினுகமூன்றரைக்கோடிச்சுரர்களுந்தொழுதுநாச்சோர
வூன்றிடுசுருதிப்பழிச்சலைப்பாடியுவகைமீதூரநின்றுரைப்பார். (௩௭)

---

* அஞ்சத்தேர் - அன்னவாகனம்.

## குறுக்குமாரனைக்கொலைபுரிபடலம்.

விதிசிவமேனிகேசவதீர்த்தவேடநின்னடியர்கடம்மைப்
பதிசிவமகன்றபலர்களுமலகில்பாவமாகோடிக்ளியற்றி
வதிசிவமர்மெம்மேனியைப்பரிசித்தவர்பவம்யாவுமெம்மாட்டுப்
பொதிசிவமில்லாதாக்கிப்பாவனராப்போதலால்யாங்கள்பொக்கினராய். (௩௮)

தவத்தினையகன்றதீயரைக்காணறண்டுதனேக்குதலுரைத்த
லவத்தராமவரைத்தொட்டிடல்கேட்டலவர்நிழல்கால்படவடுத்தல்
சவத்தராமன்னூரொபெயர்சாற்றல்சார்ந்தபேர்கேண்மையர்தமையு
முவத்தலாயினருந்தீயரேயென்னுவுரைபலவுளபன்னூலுரைக்கும். (௩௯)

மாற்றமாருகவந்துளார்தம்மேன்மருவிடுபழிபலமாட்டிச்
சாற்றலாகாவெங்கோடியதிகளுஞ்சார்தலமாயினேமெமது
னூற்றமார்தவத்திற்குகந்தடைதீமையுகவகமகிழ்வரமளித்தி
போற்றலாமறைக்கும்பூதபூவினர்க்குமெட்டிலாப்பூரணப்பொருளே. (௪௦)

பொருளெலாம்பொலியும்புகழெலாம்பூத்தருத்திரியென்றபுண்ணியமாங்
தெருளெலாநிறைந்ததேவர்கள்வினவுமதற்கெந்தைசிறுநகைபுரிந்து
மருளெலாமகலவருளுதுங்கேண்மின்மருவிடுநதியதிட்டான
விருளெலாமகன்றதேவர்காளென்றேயீறிலாவீசனீதுதவும். (௪௧)

அரையினைமூன்றுகோடிதீர்த்தங்களாமதிட்டானவம்பரரே
திரையினைபூமண்டிருடினனுவிசெகுத்தநம்மேனியிற்சிதறி
நிறையினைதூயவெண்புனலமைந்தநித்தியபுட்கரணியினிற்
றரையினையருளாம்பூவையாஞ்சத்திமாரெனுந்தையல்கடமுவ, (௪௨)

களிப்பெழுமாறெவ்வாண்டுகேடோறுங்கதிரவனுடிவர்திங்க
ளொளிப்பெழுவசந்தச்சுக்கிலபக்கமோங்குறுபௌவனற்பகலி
லளிப்பவனழிப்போனுதியரேத்தற்கருகமாமக்கயநாப்ப
ணளிப்புறவிருக்குமோரையப்பட்டநளிர்புனலாடுவநாமே. (௪௩)

அத்தினமச்சீமுட்டநீரவனுற்றருளியகுளத்துநீராடிப்
பத்தியின்மாந்திப்பன்னிருநாமப்படிவராய்ப்பன்றியாமர்ச்சை
வித்தினைவேண்டிவருதிரேலுங்கண்மேன்மிகுபவமெலாமுரிந்து
முத்தியுஞ்சித்திமுழுமையுமேற்றுமுடிவறுசுகநலமுறுதிர். (௪௪)

தயைபொறைமாதர்மேனிநம்மேனிதளிர்விடுசுவேதநீர்பெருக்கா
வியையிலஞ்சிக்குணேரொருக்காலென்னெழிற்சரண்பெரும்புனலான
தயையினைகங்கையாதிகட்குண்டோசாற்றுமின்றடம்பெறுநதிகாள்
வயமியைநீவிர்வம்மினக்காலென்றகண்டமீமறைந்தனன்மாயோன். (௪௫)

தேருதிருபுத்திரன்வதைக்கேங்குஞ்செம்மலேயத்தலந்தன்னைச்
சாருதியக்கோட்டத்தொருபோதுசாய்ந்துமாந்திக்குளிப்பாதம்
பூருவகோடிபிறப்பினிற்பிழைத்தபிழையிலாம்பீழைகண்மாய்ந்து
சாருவர்சாயுச்சியமிதுசரதமென்றெகின்மீதுவிண்சார்ந்தான். (௪௬)

முற்றிற்று.

ஆக படலம் ௩-க்கு திருவிருத்தம் ௮௨.

———(*)———

# ௯-வது. மணிக்கிரீவமகாராசன் அத்தியற்று

## முத்தியுற்றபடலம்.

வேறு.

கணக்கிலீறிலாதசோதிகமலநாதன்கழலிணை
வணக்கிலீறிலாதநசைசயின்வந்தித்தேத்துமந்தணீர்
குணக்கிலீறிலாதகாமக்குரவைவீழ்ந்தக்கொற்றமார்
மணிக்கிரீவன்மாள்கிலாநல்வீடுகூடல்வரிமினோ. (க)

அந்தணர்கோமானருளினன்கேட்டவரசர்கோனவ்வணங்களிப்பின்
மூந்தினனுகிமுன்குருவானகுச்சருக்கிவ்வுரைமொழிந்து
சுந்தரமகனுஞ்சோமசேகரனேயாதியரோடதர்கொண்டு
வந்தனனனந்தக்கடமுட்டமாப்பெருந்தலத்தினின்மாதோ. (உ)

வான்வடமீறுட்கியைந்தகுணடலியுமைந்தனுமாமுனிதானுங்
கோனுபசாரங்கொண்டுபின்னடுப்பக்கூறுமத்தலந்தனிற்குறித்த
பானுமேடத்துப்பௌவநாளுச்சிப்படவருமோரையிற்பகாந்த
தேனுறைதுளவத்தெரியலெம்பெருமான்றேவியராடல்செய்பின்றை. (௩)

கோடிமூன்றனையாக்குறித்தவாறெல்லாங்குழுமியாடுறுமமையத்தே
நாடிமாத்தவஞ்செய்நரபதியெழுவாய்நணியபெயருடன்மூழ்கித்
தேடியகுருபுத்திரன்வதைதீமையாதிமுன்பிறப்பியைதீமை
கூடியவனைத்துங்கொளித்தினனயனுர்கூறியமொழிப்படிமாதோ. (௪)

சலதரமாடியுண்டுகண்டேத்தித்தாபமாறியதராபதியும்
பலதரம்புடமிட்டொளிர்தருபொன்னேபவேலிசாணைசெய்மணியோ
வலதாக்கரும்பாம்படல்பெருஞ்செம்பாம்படாக்கெதிர்விழுங்கியேகான்ற
நலதரக்கதிரின்மதியினிலவிர்ந்தானுகர்கள்வியப்புறவேந்தன். (௫)

அவிர்தருவடிவனுகியவேந்தொடாதியர்வெண்மிருத்திகையாற்
செவிகுளிரடையப்பன் ஸ்ரீருநாமச்செம்பொருட்பாக்களைச்செபபிப்
புவிகுளிரடையப்பொலிந்தமேனேக்குப்புண்டாநுதன்மிசைபொலியச்
சவிகுணத்தோடுசாத்திவண்டுளவத்தார்மணிமார்பினிற்றயங்க. (௬)

குச்சமாமுனியைமுற்கொடுகோவிற்குலவிடுகோமறைக்கொழுந்தா
மர்ச்சையாமமலனுதிபுபிரானையடிமுடிகண்டுகேட்டுவந்து
நச்செனுமத்திராசமிட்டாண்டநாகர்கள்சேகரநாயே
மச்சுதவெண்றேயளித்தசடாரிதீர்த்தமாதிகடமையடைந்து (எ)

மூன்றெழுத்ததனுன்மூனைத்திடுசோதிமூவருளொருவனுமாகி
மூன்றெழுகுணமுண்முதற்குணமூவாமூர்த்தியேமும்மறைமேனி
மூன்றெனுங்கருமமகற்றிடுமுத்திமுகுந்தவைகுந்தமூசிடுவெம்
மூன்றெனுமலத்தைமுருக்குதியென்றுமொழிபலதுதிபலமுடித்தான். (அ)

முடித்திடுதியான்முடிகலாவொருமாமுதலிவாழ்முட்டமேயிட்
மடுத்திடுமடங்காவாஞ்சையாலவணேயமர்ந்தனவரதீராடிப்

படுத்திடுமுத்தக்காசினலாயபதமுறுஞ்சூரணந்தனைப்பூ —௫
வெடுத்திடுமேனக்கடவுளுக்கிட்டானெஞ்சியசேடமேயுண்டான். (௯)

அத்தலவாசத்தடிகளைப்பூ
பத்தர்கண்மிகுமாபத்தனென்றேதப்பட்டென்மரித்திடுஞான்று
வித்தனும்வீக்களரசனார்மேவிவிளம்பிடுமனுவினைப்பெற்று
முத்தனூர்வாழுமழிவிலாவின்பமுத்திவீடெய்தினன்மன்னோ. (௧0)

முற்றிற்று.

ஆக படலம் ௪ - க்கு திருவிருத்தம் ௧௨.

———(0)———

ஸ்ரீ

# ரு-வது. கதராசன்மூவாயிரம்

## பிரமகத்தியினின்று நீங்கியபடலம்.

சாசிமகாராசன்கன்னிகைவிசோபிக்குச்சுயம்வரம்சாற்றியபரிச்சேதம.

தேவாயிரரும்மாமறைதெளிவோடினிதோது, நாவாயிரருந்தணடருநாராயணச மையீர், பாவாயிரசரிதத்தினும்பகர்மூட்டநற்றலத்துண், மூவாயிரங்கொலையானனுமு றைவீடுறல்கேண்மின். (௧)

நாராயணனொருநாமமேநவினாரதற்கடுக்க - லாராவிடவரவாவரணத்தானருடந்த வாராவமுதன்பேரருளினிலாயதீதகன்ற-ீராவலியதனலெழுதீவாண்முடியரசன். ()

அழியாவலியயமீடனென்றுரைசான்றிடுமரசன், பழியாவலிகதனென்பவன்பா ரேந்துறுபகலிற், கழியாவலியுறுகாசிமன்பெற்றானொருகன்னிக், கிழியாவலிமணமாற் றுதற்கிட்டானொருவேலை. (௩)

விழிமின்னிடைமின்மென்முலைவெம்மாமரைமொட்டு, கழிமின்குழனறல்வாய் துவர்கவாபன்முலையூரே, வழிமின்னரம்பைப்பார்ம்பணிவதியல்குறேர்வசனங், கொ ழியின்னமுதள்ளிக்கொளும்வடிவாகியகோதை. (௪)

கொடியென்னவுங்குயிலென்னவுங்கழிமென்மலர்கொமபாம், படியென்னவும் பாவைக்கிணைபூவைக்கிணைபன்னுந், தடியென்னவுந்தகுயாணர்தயங்குங்கிளிமொழிக் குக, கடிமாமணங்கோடித்திடுகவின்மன்னவர்கண்டார். (௫)

விண்ணோரும்வியக்குந்திருவிளக்காம்விசோபிக்க, ணண்ணார்களுநகையேந்தொ ருநாற்பாணொடெரெட்டா, யெணணாரும்வண்டேயத்தலையிறையாயினர்யாரும், புண் ணாரும்வேன்மாசேனைகள்புடைசூழ்தரப்போந்தார். (௬)

அக்காலைமுன்னறையுங்கதனுமன்னவர்பெருமான், புக்கான்சுயவரசாலையிற்பொ ருதிண்வலிதானை, யக்காவிவனரேடியென்றாடுங்கடலடுப்ப, மிக்கானரவாரத்துடன் மேலாசனமுற்றான். (௭)

மேலாமழகானனைவிசோபிப்பெயர்மின்னை, நாலாநகர்நாட்டார்மறைநாவார்தவ ரானார், காலாதிதமாங்காவளங்ககனத்துமண்ணுயிர்கண், மாலாம்பரனகட்டின்கணும் வணிங்காணுறவந்தார். (௮)

# திருமுட்டபுராணம் மூன்றாவது தீர்த்தமான்மியகாண்டம்.

அவ்வேலையிற்சங்குச்சிரரென்றோதிடுமெறிஞன், செவ்வேயுணர்பதிறையிரஞ்சீடக்குழுசூழ, வொவ்வாவழகுளவொண்டொடியுறுமாமணப்பந்தர், செவ்வேலவர்கண்காணவுட்சென்றானவணின்றான். (௯)

நின்றொண்டொடியழகுங்குணநிறையும்வினைவழியு, நன்றென்றுகண்டக்கன்னிகைநற்பாணிபிடிப்பான், றுன்றுந்நசைதுன்னக்கொடுதோன்றும்முனிவரனை, யன்றம்மவணங்குங்குறிப்பாவின்பொடுகண்டால். (௧௦)

பலமன்னவர்நிரைவாங்கிடப்பாராள்பவனோடு, நலமன்னுறப்புணர்ந்தின்புறுமினுந்திருநனுகும், புலமன்னியகல்விப்பொருணிறைவுற்றதொர்புலமை, வலமன்னினனுடன்கூடியுண்பீழைக்கெதிர்மருவா. (௧௧)

வில்லேருழவன்வேட்கையைவிட்டேமழைமறுப்பான், கல்லேருழவன்கான்மலர்கட்குங்கவினோர்ந்த, சொல்லேருழவன்கான்மலர்தொக்குண்சுகமெய்தின், பல்லேருழவன்வாழ்பரம்படலாமெனவுன்னி. (௧௨)

செக்கச்சிவந்துறுசெங்கழுநீர்மாலைசேர்சேடி, பக்கத்துறுமவள்கையினில்வாங்கிப்பலமன்னர், சக்கின்குழூநாணுக்கொளச்சசணிட்டுவந்தறவோன், றக்கப்பிடரிக்கட்டொடுத்தடிபோற்றிமுனின்றாள். (௧௩)

கடிமாமணத்தொடையைக்கழுத்தடிசூட்டியவோரை, படிவான்முழுதுண்டானடிப்படுமென்மனமுனிவன், நடியோகையினகுபொன்மணிவளைநங்கைகைம்மலரைப், பிடியோகையிற்பிடித்தான்முனிபேரம்பலர்கண்டார். (௧௪)

பொன்மண்மணிமுடிமன்னவர்பொன்மேனிசேர்பூவை, நன்மன்னுறுபெண்செய்கையைநாடித்தருமென்றே, முன்மன்னுறுதங்நாட்டினைமுழுவெம்படையோடு, மின்மன்னுறுகாலக்கணேவேட்கைத்தவிர்ந்தற்றார். (௧௫)

இவ்வாறிவைநிகழுஞ்செவியினிலேழுநீவேந்த, ரவ்வாவிஃதென்னேகுலவரசக்குழுமுன்னே, யொவ்வாமனையோர்தம்முறியோடோடிரந்துண்போன், செவ்வாய்மயிலன்னாள்கைபிடித்தேகுதலென்றான். (௧௬)

## மூவாயிரமுனிவர்களைக்கொலைபுரிபரிச்சேதம்.

கடிமாமலர்த்தொடைமாமுனிவன்மார்பிடுகன்னி, யடிமாமலர்சேவித்தவனிடப்பாகமமர்ந்த, வுடனேகதனெனுங்கோவிளவிற்கோவுறுசீற்றம், படனேயெரிபாந்தற்கிணைபடவுள்ளமெரிந்தான். (௧௭)

கண்ணன்குணகணங்கேட்டதீக்கவியும்புறச்சமயர், வண்ணன்முனிவன்பெற்றதைமகிபன்கதமண்டிப், பெண்ணைக்கனன்றம்மாதவன்றன்னைப்பிழைகூறி, யெண்ணத்தகுவதுகொண்முனியிரந்துண்ணியைவரித்தல். (௧௮)

முன்கேதிமன்னறக்கோமகன்முனைவேள்வியின்மாலைப், பன்றீமொழிபலகோடிகன்பகருற்றனகடுப்பக், கன்றாததாபதனன்மனங்கதறக்கொடுநிந்தை, யன்றாகுமவ்வையாருளமறுகப்பலவறைந்தான். (௧௯)

செவிதீந்திடுதீமாற்றநுவன்றாகியதீமன், புவிதீந்திடுவெங்கோவம்வான்புகைமண்டல்மிடவே, நகைதீந்திடவிட்டங்குறுநன்மாதவன்சீடத், தொகைதீந்திடுவணங்தன்படையினைத்தூண்டினன்முனிமுன். (௨௦)

## ௫-வது. கதராசன்மூவாயிரம்பிரமகத்தியினின்று நீங்கியபடலம். ௨௦௭

அம்மாவணிநாற்சேனையுமகங்கன்றியதிர்த்துச், செம்மாமறையோன்சேனையாஞ் சேடக்குழுசெருமுன், வம்மீரெனப்போராற்றியம்முனிவன்வழிபடுவார், தம்மின்மறித் தினின்றிம்மாறுதாபதவுத்தமர்தம்முன். (௨௧)

மூவாயிரமூத்தோருயிர்முனையிற்பதைத்தோய்வான், காவாக்கதனெனன்பான்கதன் கதிர்வாள்கொடுவெட்டி, வோவாதவவ்வேழாயிரமுறுசேடர்தம்முயிருந், தாவாவமர்த னின்மாய்ந்திடத்தாராதிபன்முனிந்தான். (௨௨)

வேறு.

முனிந்துமாதவன்பாற்பயின்மோனிக - ளனிகமாவியற்றந்தகன்பாற்செலத் தொனிகொளும்பலவாளிகன்முற்றவே - பணிகொளெம்பிரான்பத்தர்தம்மையுளால்.

இன்றும்வாளாவிருப்பதேடாவெனுப் - பன்னும்பற்பலமந்திரப்பாழியான் மன்னன்சேனைமேன்மண்டிடுசீற்றஞ்செய்-மின்னும்வாளிவிவிதவிதம்பெற. (௨௪)

ஏவினார்களலகறுமேவுக - டாவுமாகரிவையங்காற்றுனைக ளாவியாவுமற்றங்கவடுக்கலிட் - டோவியம்போலுற்றேங்கிடவாக்கின. (௨௫)

பின்னரப்பெரியானடிபிள்ளைகள் - மன்னன்மீதொருமாநாகபாசத்தைப் பன்னித்தூண்டிடவப்பாசபந்தமுஞ் - சின்னபின்னமாச்செய்தந்தச்செம்மலே. (௨௬)

கைகள்பின்னுறக்கட்டிச்சிகையினை - நையவேபிடித்தீர்த்திந்தான்முனி யையன்காற்றுமலர்க்கணிலாண்டுறும் - பொய்யிற்றண்டெனப்போட்டுக்கிடத்தினார்.

முத்தரேயிவன்முப்பதுநூறுபே - ரத்திமாலையடைந்துளவந்தகன் மத்தனுமிவன்றன்னைநும்மாவருட் - சித்தத்திற்குகப்பாகச்செய்தெள்ளியோய். (௨௮)

என்றுமன்னையிட்டேத்துமாணுக்கனுந் - தன்னைநோக்கியதாபதன்றார்மகா ளின்னனத்திமூவாயிரமேற்றவன் - முன்னாளிற்கொணுதாயினன்மூத்தரீர். (௨௯)

இவனையாவியிழுதுவிடுமென - வவனையாவியினேடேயகற்றியக் குவளையொண்கண்குழன்முகிற்றோகைதன் - வளைவளைந்தகைதன்னைவரித்தரோ. ()

காசிமன்றருகாரிகைதன்மண - மாசரித்தவளோடேயடுத்திடு மாசிலாதமாணுக்கர்மகிழ்ந்துறத் - தேசிலாகுமச்சங்குச்சிரத்தவன். (௩௧)

மனைவியோடுமொணுக்கர்தம்மாடுறப் - புனையுமாச்சிரமத்துட்புகுந்துதன் கனிவிலாவிகழற்றியசீடரை - நினைவிலுன்னியேநெட்டுயிர்ப்பிட்டரோ. (௩௨)

பிழையாழிவிழுந்துபிதற்றியே - மாழைமேனிமாதான்மனந்தேறியே யுழையெண்ணியுயர்முனியுற்றன - னேழையேந்தறனின்னகருற்றனன். (௩௩)

பொன்செய்மாளிகைபுக்கவப்பொன்னரி - பன்செய்கீதம்பயின்றதார்மன்னவன் முன்செய்மூவாயிரம்முனிவோர்கொலை - தன்செய்யுள்ளந்தனிலெணித்துள்ளினன்.()

வைதுசொல்லிடுநிந்தையும்வான்றுயர் - பெய்துபேதுறப்பீதிசெய்பேய்க்கணந் தைதுவெந்துயர்தந்திடுதாபமுங் - கைதுவந்தனைக்காதலர்காந்தலும். (௩௫)

பூதவேதாளப்பேய்க்கணம்போர்த்துத்தி - வோதமாடியுரப்பியுருக்கியே மோதமோதமுழக்கமிட்டாற்றிடு - வாதையாற்றவலியற்றமன்னவன். (௩௬)

அழுவனுடுவனக்கதளாவன - விழுதுபோலுடல்விட்டுக்கொண்டேங்குவன் கழுதுகோடிகளாக்கைக்கனலெரி - பழுதுநோக்கிப்பதறிப்பதுங்குவன். (௩௭)

பேயோடாடியயின்ஞளுகன்போலவே - வாயோடாடிவலியாமையோட்டினை நாயோடென்பினைநாகத்தின்றேலினை - யீயோடும்முடையேறுமீன்பீறலே. (௩௮)

சடலைமாப்பிணச்சாம்பரைச்சூழ்ந்தெரிப் - படலையாதிபலபலவேய்ந்துகொண்
டெலைமென்றுணுமத்திகண்மொத்தலாற் - கடலைமானுங்கழிதுயர்மேவினன். (௩௯)

இருளைக்கண்டிரைந்தோடிப்பதுங்குவான், மருவிறல்வாயில்வந்தவாறேதுவா,
னருளையெண்ணியங்கோவையோவென்றுவான், றெருளடைந்துதெளிமொழிசெப்புவான். (௪0)

இன்னவாறளவில்லாதநாளெலாம் - பன்னற்கொல்லாப்பலபலகேதமே
யுன்னற்கொன்றுதனுபவியோர்பக - றன்னிற்றூர்முடித்தாராதிபனரோ. (௪௧)

காக்கையின்வலிகட்டுண்டபின்னத - ஞக்கையாதியறிந்துளான்போன்றமன்
றுக்குமத்தியிற்றள்ளுண்டதுசற்றே - நீக்குங்காற்சேதனத்தினிலவினன். (௪௨)

பெண்ணைபழித்தபரிச்சேதம்.

சேதனத்திற்செறிந்துளசெவ்வியின் - மோதனத்தத்தைமுன்னியன்றேவறே
யேதனத்தத்தையெய்தினனெண்ணின - றுதனேயெனவுள்ளேலங்கினன். (௪௩)

காதுவெம்முலைகன்னியரில்லெனின் - மோதுகாமக்குரோதமுமோகமும்
வாதுலோபமதமச்சரங்களுஞ் - சாதல்வீதனராகுஞ்சாராதரோ. (௪௪)

காணுங்காரிகைமீதுறுகாதலர் - நாணுஞானமுநல்வயிராகமும்
பேணும்பொன்மணும்பெட்பினர்மற்றதும்-பூணுவார்கொலோபுந்தியராயினும். (௪௫)

காமத்திற்குங்கணின்றுகதிதரு - நேமத்திற்குநிலையின்றுநேர்முறை
வாமத்திற்கும்வரம்பின்றுசாதியார் - தாமத்திற்குந்தடையின்றுதேரினே. (௪௬)

எண்ணில்கோடியிழிபவப்பெட்டியோ - எண்ணில்கோடிநோயேற்றிவெங்கமோ
எண்ணில்கோடிநிரயத்திடங்கரோ - பெண்ணிலாணைப்பிடித்துணவந்தவே. (௪௭)

இடிவிழுந்தும்பிழைக்கலாமேதிக - ளடிவிழுந்தும்பிழைக்கலாமைம்பூதப்
படிவிழுந்துமபிழைக்கலாப்பாம்பலகுற் - கடிவிழுந்துபிழைத்தவர்க்காண்கிலேம். ()

பேதைவிட்டவன்றன்பிறப்பாகிய - வாதைவிட்டவன்மாயதலைவிட்டவன
சூதைவிட்டவன்சூழ்நரகேகிடும் - பாதைவிட்டவன்பாக்கியமுற்றவன். (௪௯)

தீமையாவுந்திரணடுருச்சேர்ந்தரோ - வாமையாம்பரடாகியமாதர்கள்
காமிமாரையுண்கட்செவிகாலனர் - நேமிதூதர்களென்றேநிகழ்த்தலாம். (௫0)

புழுமலிந்துபொலிமுடைபூத்தது - வழுநிறைச்சளிபூளைமலிந்தது
பழுநிறைமலமூத்திரம்பாய்ந்தது - விழுவெந்நோய்க்காழிமெல்லியர்மேனியே (௫௧)

என்றெணுமலன்றேவெற்றெடியினற் - கன்றிமாதவர்காத்திரஞ்செற்றன
னென்றுதன்னகரேந்திடுகாவலை - நன்றகன்றுகானண்ணினனுகியே. (௫௨)

அடல்செய்கோட்டலையாலலந்தேங்கியிக் - கடல்செய்மேதினிகன்மலையாங்கணு
முடல்செய்தான்பிணையோச்சலற்றேவென-விடல்செய்பூங்காவெமுனைக்கணேகினன்

பித்தனென்றுபிறர்செலப்பேயனிற் - கத்திக்காளிந்திக்காமர்சோாற்றின்வாய்ப்
பற்றிநோக்குழிப்பாவனமூர்த்தியா - யுற்றகர்க்கரையோகையிற்கண்டனன். (௫௪)

கர்க்கடகாமுனிவர்கருணைபுரிபரிச்சேதம்.

கற்றவேதியன்காற்றுமரையைநோக் - கொற்றியேயுருமோவாக்கணீரணுய்
முற்றுமூப்பயான்மூவாயிரத்தத்தி - பெற்றபேயனற்பேறுபெற்றுய்ந்திட. (௫௫)

தக்கசாதகஞ்சாதித்தருளுதி - பொக்கனேன்சரணென்றுபுலம்பலுங்
கர்க்கமாமுனிகாவலனுவலை - யொக்கநோக்கியுகந்தருளோங்கியே. (௫௬)

## ரு-வது. கதராசன்மூவாயிரம்பிரமகத்தியினின்று நீங்கியபடலம்.

அஞ்சல்வேந்தேயக்கம்மிலார்க்கக்கமுங் - குஞ்சிஞர்க்குத்துளக்கமாமாக்கமும்
விஞ்சுமாதுலர்வேண்டிடுமாக்கமு - மெஞ்சனீங்கிடவெய்திடலேயவே. (ருஎ)

அத்திகோட்டாகோடிப்புரிந்தாருய்வான் - வைத்தமாநிதியாரும்வராகஞர்
உத்தமாந்தலந்தன்னிடைத்தூயதா - நித்தமாந்தடமொன்றுளநேரதில். (ருஅ)

மேடமாமதிபூரணைமேவியே - கூடுநாளினிற்கோடிமூன்றோடரை
நாடுமாறுகணந்திடுமோசையாற் - பாடுமுட்டமாம்பட்டக்கணெய்திடு. (ருகூ)

அக்கானீவிரைந்தக்கயமாடிஞற் - பொக்காம்யாவும்பொறிகனற்பஞ்சினி
லுக்குமோகையிலோதினனீயவ - ணிற்காதேகுதியென்றிசைத்தானரோ. (சு0)

ஆன்றோஞேதியவண்ணமக்கோமகன் - சான்றுமீசன்சயம்புத்தலம்புகுந்
தீன்றுனின்னருளீந்திடுவண்ணமே - யூன்றுஞானத்துவகையிஞலரோ. (சுக)

துவசமேற்றித்துளக்கமில்சாறுகள் - பவசமாதிகள்பட்டுறவாற்றியே
நவசமாகிடுகாமர்செய்வாவியிற் - சிவசமாதியிற்றேசுற்றொளிர்ந்தனன். (சுஉ)

சிவன்முன்னத்தியிற்றேங்கியச்சீபதி - யவன்றன்றூட்புனலாடியபின்னர்தா
ஞெவனிலாயினஞேவன்னவாசிவன் - புவனமேத்துபுனிதனிற்பூத்தனன். (சுங)

நிகிலதீர்த்தநிமலத்தடங்குடைந் - தகிலபாவங்களற்றரிபத்தனுய்ச்
சகலமுந்தெளிதாபதன்மைந்தர்கள் - புகலருநலமந்தமில்பூப்பெற. (சுச)

அலகையானவவருடல்வீடுறப் - பலவெண்றுமவர்நாமங்கள்பண்ணியே
நலமதாங்கயந்தன்னிற்குளித்தெழுந் - துலவிலாப்புகழுற்றனன்பூபதி. (சுரு)

வேறு.

மூவாயிரம்பேர்க்கோர்முறைறமூவாயிரமத்தி, மூவாயிரந்தரமூழ்கிமுரித்தான்மு னியருளாற், காவாயெனும்பிதிர்தர்ப்பணங்கண்டேகதிதந்து, காவாய்திருமுட்டப்பெ ருங்கருணைக்கடன்மகிழும். (சுசு)

தானத்தொடுதாமத்தொடுதியர்க்குளமகிழ, வேனத்துருவாமீசனையின்போடுப ராவிக், கானத்தெழுமம்மாத்தலங்கவிஞேடுவசித்தே, மோனத்தவர்புகுவீடுபுகுந்தான் முறைமன்னன். (சுஎ)

நன்ஞரதமுனியோருதிநன்றேயெனநக்கன், சொன்ஞனறிந்தினிதேத்துதியென் றேசுழிவளையாற், பன்ஞரணமுனிவர்க்கிதம்பகர்ந்தான்வதரியில்வாழ், பொன்ஞர் சடைமுனிவன்கழல்புரிந்தெய்திடுசூதன். (சுஅ)

முற்றிற்று.

ஆக படலம் ரு - க்கு திருவிருத்தம் கசுo.

—————(o)—————

ஸ்ரீ

## சு-வது. தென்புலத்தாருக்கின்பளித்தபடலம்.

வன்புலத்தான்மதிபுலத்தேமாதேவதேவனையிட்டரிதின்வாழ்த்து
மின்புலத்தாதுறுபிறப்பாலேற்றமுற்றவாத்திகராமினியமேலீர்
தன்புலத்தாமகதிமுனிதனக்கருளிச்செயக்கேட்டமுட்டத்தின்கண்
தென்புலத்தார்க்கின்பளித்ததிறமுரைத்தாமன்புறத்தாங்தெளிந்துதேர்மின். (க)

நான்குவருணத்தாருநன்குமறைகளுமோதுவிக்குமேன்மை
வான்குவிக்கும்பாணிமலர்மறையவர்தங்குலவழியில்வந்தோன்றீமை
தான்குவித்தசந்தாபனெனுமொருவன்குடிகேடன்சழக்கெனுண்டோ
மான்குவித்தவவையொருங்கேவழுவானபுரிகருமன்மத்தமாலன். (௨)

கசடகன்றகல்விநிறைந்தவர்க்கேனுமனமுவந்துகனவிலேனும்
வசமகன்றுமோசவினைவருவித்தேயகல்பொருளைவழங்காலோப
னிசமகன்றபொருட்டொகுதிதனிற்றனதற்கிணையானேனீசநீர்மை
தசமகன்றகம்மாளன்றருமமதிலெஞ்ஞான்றுந்தட்டானவான். (௩)

கருமானுக்கிணைமதத்தன்கடவுள்குளிருறவீசுங்கற்றைத்தோகை
* தருமானுந்தீந்தேனுநாணியுயிர்விடுபிசினன்றருமங்காணு
வருமாணு ‡ முட்டிநிகர்மரமானான்றீமையெனும்வருக்கத்தாற்றன்
பெருமானையடியவரையொருஞான்றுநினைந்தறியாப்பிழைப்பேறாளன். (௪)

அக்கொடியமுற்குலத்தாமவன்கருணையெனும்வீயையவியத்தின்றான்
பொக்கமுளவதமனவன்றனக்கொருநூறெனுந்தொகையிற்பூமூன்றுள்ள
மிக்ககொடுபவங்களெலாந்திரண்டுருவங்கொண்டெய்துமேதையாளர்
சக்கழுங்கிக்கம்பமிடத்தகுதியுளமைந்தருதித்தார்ந்தார்மன்னோ. (௫)

அந்நூறுபிள்ளைகளுமாலநிறைந்தெரியுருக்குமரவக்கூட்ட
மன்னூருண்மலிசீவர்தமக்கெல்லாம்பெருநோயைமானத்தீமை
பன்னாளும்புரிந்தறமில்பாதகராமரசர்கடங்கேண்மைகொண்டு
முன்னாளாந்தீயவரக்கரைப்பொருவவெந்துயரின்மூள்வித்தாரால். (௬)

துட்டர்களாம்வேந்தர்களுக்கமைச்சர்களாயொல்லாததோடநீக்கி
முட்டகன்றமுழுமகராயந்நூறுவேதியருமோதத்தோடுங்
கட்டுடையகற்பினரெக்குலத்தினரேயானாலுங்கடிந்துபற்றிப்
பொட்டெனவன்னவர்நிலையைப்பாழாக்கியருணிலையைப்பூதியாக்கி. (௭)

வெகுளிகொலைகட்காமம்பொய்மயக்கமாதிகளின்மிக்கோராகித்
தகுமினியவனுட்டானமற்றளவின்மறவினைஞர்தரத்தராகி
மிகுமினியமேதினியோருயிருருக்குமந்தகராய்வீறுற்றுய
ளுகுகாலமணித்தாகவுயிர்மாணடுநமனுலகினுற்றார்மன்னோ. (௮)

சதமகருமுயிர்நீங்கிச்சமனுலகிற்றந்தையுடன்றாழ்வில்லாமற்
பதமகன்றவாதனைசெய்பைசாசம்பவனிவருபரந்ததீவாய்
விதமகன்றரௌரவமாந்நரகக்குழியதனின்வீழ்ந்துசோர்ந்து
நிதமகன்றநமன்றூதர்கைப்புடைகொண்டோவென்றுகதறிச்சாம்பி. (௯)

அழுவார்கடயர்கடங்கேண்மையினையணியிடும்பைபயகத்தையெண்ணி
விழுவார்கள்விரும்பியருண்மேதையறுதந்தையினைவிளித்துத்தூய்மை
வழுவானபாதகனேமறைக்குலத்திற்பிறந்துமவெய்யமான்மீக்கொண்டாய்
தொழுவார்களருண்மாற்றந்தொலைக்கவிட்டகுறையாலேசோர்ந்தோமென்றார். (௧௦)

---

* மான் - கவரிமான் - தேனீ. ‡ முட்டி - எட்டிக்கொட்டைமரம்.

## நரகவாசிகள் புலம்புபரிச்சேதம்.

### வேறு.

விரதம்வீசிவிலாசமேசிவிவேகமுற்றியசிலராய்க்
கரகமுங்குசையுங்கொடென்றுநங்கண்ணனைப்பணிமுத்தரே
யுரகமேந்தியவுலகில்வேதியர்குலமுதித்தவராயுமே
நரகவாசிகளானவாறுகிளக்குதுந்நீவிலக்குமின். (௧௧)

### வேறு.

ஆவலோடரியினடியிணை பரவுமருங்கலையுணர்ச்சியினகன்ற
பாவலோர்தம்மைப்பழிவரைநாயைப்பார்த்தளின்விழித்தவர்விழியைத்
தாவியேபிடித்துத்தரித்துவெங்கூர்வாய்த்தழங்கெரிகழுகுகட்கிட்டு
பாவிடுசழலினவர்தமைப்புரட்டிப்பாழ்நரகுருட்டுதல்பட்டார். (௧௨)

### வேறு.

புழுக்கடுளைக்கப்படுவேமோபுலிகள்கடிக்கக்கெடுவேமோ
கழுக்கள்பிடுங்கவிழுவேமோகனலிலொடுங்கியழுவேமோ
வழுக்கிநரகினுளைப்பேமோவனப்பேயடிக்கக்களைப்பேமோ
விழுக்கிலுழைதது வைததபொருளெல்லாமளிப்பேமெடுங்களென்பார். (௧௩)

வில்லேருழவர்பகைகொளினும்வியன்மாவுலகுண்டவற்கினிய
சொல்லேருழவர்பகைகொளினேசகளிக்குங்கூத்தாற்றொலையானுள்
அல்லேருழவராதிரெனவறைந்தவறநூன்மதியாதிம்
மல்லேருழவர்வதைத்திடற்குவல்லேமல்லேமென்பர்சிலர். (௧௪)

படம்பையரவிற்றுயில்பயிலும்பரமன்மகிழும்படிப்பசித்தார்க்
கிடும்பையகலும்படிக்கன்னமிந்நீர்யாவிழிவதனுல்
உடம்பையுரித்தேம்புண்ணீரையுண்டுகுடித்தேம்பசியாற்றேம்
குடம்பைகொளுத்தலாற்றகில்லேம்கோகோவென்றேசிலரழுவார். (௧௫)

ஒப்போதரியபெருமானையோதிப்பிழைமினென்றவர்சொல்
தப்பேயென்றபிழையதனுற்றவிப்போமென்பர்சிலபேர்கள்
இப்போதிந்தவேதைவருமென்பதறியாதீங்குற்றேம்
அப்பாநோயையாற்றகில்லோமருளீரென்பார்சிலபேர்கள். (௧௬)

உடலையறுத்தேயுப்புதிணித்துறுத்தல்பொறுக்கேமென்பர்சிலர்
குடரையிழுத்தேபக்கியிடல்குறித்துநோககேமென்பர்சிலர்
நடலைச்சூலவாளிற்றுண்டாய்நறுக்கலாற்றேமென்பர்சிலர்
சுடச்செய்நீரின்மணலிலியச்சூட்டிற்றுடியேமென்பர்சிலர். (௧௭)

குறியையறுத்தேவாயிலிடக்கொதிகொப்பரைக்குள்ளேகிடத்தி
நெரியவறுத்தல்பொறுக்கிலமேநேயரானபாவியர்காள்
அறிஞரேதுபரமேதிவ்வந்தகப்பேரெமனேது
மறுமையேதென்றுரைத்தீரேவந்துபாரீரென்பர்சிலர் (௧௮)

வேதமுரைத்தவிப்பிரரைவேலையகன்றவீணரென
வாதமுரைத்ததீயர்சொலைமதித்துமாய்ந்தேமென்பர்சிலர்
சாதமேதுபிறப்பேதுசாமியேதென்றோதியெமை
நோதவிடுத்தநேயர்களாலொழிந்தேமென்பர்சிலபேர்கள். (௧௯)

பரமபதத்துக்காளாவீர்பாகவதரைப்பணிந்நீரேற்
சரதமென்ச்சொல்பெரியர்தமைச்சழக்குவார்த்தைசொல்லுநரை
இரதரென்றெண்ணித்திவ்வெறிவாய்கிரையஞ்சகிக்கிலமே
சுரதமளித்தபரத்தையர்காள்சொல்லீரவரோடென்பர்சிலர். (௨௦)

பாகமமர்ந்தபத்திணிக்கும்பரமஞானபத்தருக்குந்
தாகமகன்றகொடுஞ்சூதச்சண்டாளத்திமார்களெனும்
போகமிகுந்தபரத்தையரைப்புல்லியவரோடிந்நரகில்
ஏகமாக்கொள்ளிடும்மைபகரையிவர்வதென்றோவென்பர்சிலர். (௨௧)

அண்டர்பெருமானடியவர்தம்மருண்மெய்ஞ்ஞானவிரத்தியுள
புண்டரத்துக்கிழிவரைந்தேம்புகலுமவர்சொற்கிழிவரைந்தேம்
கொண்டவவர்கள்பத்திமுதலியவற்றெல்லாங்கோதறைந்திக்
குண்டத்தெரிவாய்ப்பேய்க்கிரையாக்குறித்தோமென்பர்சிலபேர்கள். (௨௨)

ஐயற்கூட்டியுண்ணுமலையம்பகர்ந்ததாராமல்
வெய்யற்கூட்டிவேசிக்கிட்டேவெட்கமகன்றோமென்பர்சிலர்
துய்யநமனேதறமேதுதுயரில்சோதிதானேது
பொய்யென்றுரைத்தார்சொற்கேட்டேபுந்தியழிந்தேமென்பர்சிலர். (௨௩)

கண்ணைச்சிலதுகழுகிழுக்கக்காதைச்சிலதுநாயிழுக்கப்
புண்ணைச்சிலதுபுழுவிழுக்கப்புந்திகெடுத்தாரென்பர்சிலர்
பண்ணைப்பகர்ந்தபரத்தையர்பாற்பழக்கமானபாவியர்காள்
மண்ணைவிடுத்திங்கோடிவந்துவார்த்தைசொல்லீரென்பர்சிலர். (௨௪)

ஒப்பிலாதவொருமுதலோடொப்பென்றிருவர்தமையுன்னக்
கற்பித்தழித்தகடையர்களாற்கடையரானோமென்பர்சிலர்
பற்பநாபன்மேற்பரமொன்றுண்டுபெணிமினென்றுரைத்த
அற்பராலேகெட்டழிந்திவ்வனலிற்குளித்தோமென்பர்சிலர். (௨௫)

மனையேமகரேமற்றவரேமாதாவேயென்றுதையரே
வினையேயறியாதங்குழன்றுவிளைந்தபொருளையுமக்களித்துக்
கனையாதடித்தெம்முயிரைவதைதகாலதூதரிடஞ்சிக்கிப்
புனையும்வேதைபொறுக்ககில்லேம்போந்துபாரீரென்பர்சிலர். (௨௬)

உலகத்தவரைக்கொலைபுரிந்தங்கோவாதலைந்துபொருளீட்டித்
திலகத்தறத்தைச்செய்யாமற்செத்தேமென்றுசிலர்சொல்வார்
பலகற்றிருந்தும்பாழ்க்கிரைத்தேம்பதைத்தீங்கிருந்துபடுந்துயரை
விலகும்விதங்காண்காலமதுவிரவலுறுமோவென்பர்சிலர். (௨௭)

பின்னும்பெண்டீர்சுற்றத்தீர்பின்னுணீவீரெமக்குநனி
மன்னுந்துணையாய்வருவிரென்றேமறங்கள்புரிந்தேயறங்கெடுத்துத்
துன்னுங்கடன்பட்டளவகன்றதூசொடாசைப்பொருள்குவித்தே
இன்னுநரகிலிருக்கவந்தேமெடுப்பீராள்வீரென்பர்சிலர். (௨௮)

பெண்காளாண்காளெனைப்பிடுங்கிப்பேயனுக்கிமையலிட்டுக்
கொண்காவாடைமேடையுடைக்கொழிப்பூண்பூமிகொடுமெனவே
கண்கால்பாணிநாவுடல்கள்கறங்கென்றலைத்துப்பொருள்கொண்டீர்
புண்ணாய்ப்பிடுங்கப்பொறுக்ககில்லேம்போந்தாள்வீராவென்பர்சிலர். (௨௯)

இங்குவந்திக்கொடும்பீழையுழைப்பதறிந்தாலீட்டிவைத்த
சங்கநிதியைப்பெரியவரைத்தாழ்ந்துகொடுப்பேமென்பர்சிலர்
அங்குவிடுத்தாலேகியுள்ளவனைத்துமாதுலர்க்களித்தே
இங்கணுறுவோமெடுங்களையாவென்றுதொழுவார்சிலபேர்கள். (௩௦)

கணக்கில்கொடுமைபுரிந்தோமேகாணுவிடத்துப்பழித்தோமே
வணக்கம்பெரியர்க்காற்றேமேவஞ்சமொழிந்துமாண்டோமே
குணக்கராகிக்குலேந்தோமேகோட்சொல்சொல்லிக்குடிகடமை
இணக்கமகலவிடுத்தோமேயதனுலிடும்பையெய்ந்ததென்பார். (௩௧)

பிரியநேயரெனவுரைத்துப்பேணும்பொருள்கடமைப்பறித்தே
உரியநாளுமுண்டுருண்டேயோவாதழித்தபாவியர்காள்
பெரியர்வார்த்தைகேளாமற்பேசிக்கெடுத்தபேயர்களே
அரியவேதையாற்றகிலோமறிமினென்றேசிலரழுவார். (௩௨)

ஒப்பிங்குரைக்கவெல்லாமாற்குரியமறையோனுப்பிறந்தும்
கைப்பாற்சங்கமேந்துமிறைகழற்காஞ்ஞைரநிந்தைசொலிச்
செப்பைநிகர்த்தவேசியரைச்சேர்ந்துண்டுழலுங்கொடும்பாவக்
குப்பையாநின்சொற்கேட்டுக்குளித்தேமனலினெனன்பர்சிலர். (௩௩)

செக்கிற்றிரிக்கப்படுவேமோசெறிவேலெறியக்கெடுவேமோ
கக்குமெரிவாய்ப்பேய்பிடித்துக்கறித்துமுரிக்கக்காண்பேமோ
குக்கலிழுக்கப்படுவேமோகொடுஞ்சூலக்கண்குலேவேமோ
ஒக்கலானீர்பக்கலில்வந்தொருசொல்சொல்லீரென்பர்சிலர். (௩௪)

நல்லோர்ரமக்கொருறுதிமொழிநவிலன்னவருண்ணடுங்கிடவே
ஒல்லாமோசமொழியுரைத்தவொருவெங்கொலேயிலுழல்வேமோ
எல்லோடிரவுமிடையின்றியெல்லாக்கொடுந்தீமைகளுஞற்றி
அல்லார்ந்தவர்கள்பவம்பலித்தேயழுவேமன்றோவென்பர்சிலர். (௩௫)

வேறு.

புலம்பியழுங்கண்ணீரும்புண்ணீருங்கம்பலேயும்பொருமலோடு
மலமபியுறுமாக்கமுடனளவில்லாவாண்டுகளவ்வகன்றதீவாய்
நலம்பெயரக்கடவுளடிநண்ணுதகரிசிலெண்ணிநாணிநொந்து
பலம்பெய்பெருநோயுழந்துகிடந்தார்களறிதியிசைபயிற்றுமேலோய். (௩௬)

மிகைமிகுமிலேச்சரெனவினேகொண்டபாதகராய்வீந்தநூறு
தொகைமிகுமவ்வேதியருமவர்பிதிருங்கொதிநிரயந்தோய்ந்தபின்றீ
வகைமிகுந்தவக்குலத்திலோர்புதல்வனுந்தின்வாயிருளேமாய்க்கும்
பகைமிகுநத்தொளேக்கரியமுத்தெழுந்தவகைமாணப்பட்டானன்றே. (௩௭)

அறத்தாற்றினெழுகுமவன்றிவ்வியதேயங்களமரமலன்றன்னைப்
புறத்தாற்றிற்போகாமற்போற்றிவருசெவ்வியிற்பூப்புரந்தமூர்த்தித்
திறத்தாற்றிற்றிகழ்கின்றவானந்தபவனமெனச்செப்புகின்ற
மறத்தாற்றினுவாரையறத்தாற்றினிறுவவல்வனமேவந்தான். (௩௮)

ஆனந்தபவனமெனுஞ்சீமுட்டத்தலமணுகியவண்மாயாத
மாநந்தலறுகயத்தேநீராட்டன்கண்டவணிலமூங்குமாறு

தானந்தமறுபிதிர்கடர்ப்பணங்கண்டிடுசெவ்விதன்னிற்றேன்வாய்
வீநந்தவெந்துயரிறேயுழந்தவவன்பிதிர்கள்மிகுமின்புற்று. (௩௯)

தென்னவன்றன்றமர்கதத்தாற்சேவதக்குவார்போலச்செய்யாநின்ற
பின்னமுறுவாதனையிற்பேதுறுவாரிவரீந்துவெட்டண்ணீரா
னன்னயவில்லொளிவீசுந்திருமேனியிளம்பருவநற்பூணுடை
பன்னயஞ்செய்திடுமோக்கப்படியினடைசுகவடிவம்பரிந்துண்டாகி. (௪௦)

பரமபதமுறவான்கணெழுவேலையவண்கடிகொள்படர்கள்சீறி
வரமகன்றகொடுந்தீயவழிநின்றநீவிர்நலமருவற்காமோ
தரமகன்றசண்டாளநெறியினின்றீரிவணகன்மினென்றுதாவி
யுரமகன்றநூற்றொருவர்முதலாமக்குலத்தோரையுறுமிநின்றார். (௪௧)

முப்பேரன்முட்டமுறுநித்தியபுட்கரணிதனின்மூழ்கியெண்ணி
யப்பாலாந்தர்ப்பணத்தாற்றென்புலத்தார்பதவிபெறவானசெவ்வி
தப்பாதவியமபடர்தகைந்துநிற்பத்தற்பரமன்சாயைபோன்ற
வொப்போதலரியவரியடியரெனுநித்தியரங்குற்றுமாதோ. (௪௨)

ஆங்காணுநமன்றமர்காளழியாதவச்சுதனாரழகின்மேனி
தாங்காணவிளங்குமிவர்தமைத்தீவாய்சாய்ப்பமெனுநினைப்பிட்டுற்றீர்
போங்காணுமெனவவருமடிவணங்கியெம்மடிகாள்புகலக்கேண்மின்
றூங்காதவிவர்தீயவொழுக்கமெனவவர்பவங்கடொகுத்துச்சொன்னார். (௪௩)

தீயவர்தந்நெறிகடிருச்செவிசாத்தியதேவதேவன்றூத
ராயவரேநீருரைத்ததாமெனினுமிவர்குலத்தேவந்தமேலோன்
மாயவராகன்றலத்தேவந்தன்றுநித்தியமாம்பட்டமாடித்
தூயவராமறையவர்கள்களிதூங்கப்பொன்னீந்துதோமிலாதார். (௪௪)

தென்புலத்தார்மகிழ்பூப்பத்தர்ப்பணஞ்செய்தருங்கடனைச்செவ்விதாக
நன்மனத்தாலாற்றினனன்றாதலினுவிவர்களொளிநரகங்காண
வின்மனத்தராயினராயீறில்சோதியின்மிசைவீடெய்தற்கானார்
நின்மனத்தீரத்தலச்சீருணருதிரென்றம்மாட்சிநிகழ்த்தினாரால். (௪௫)

வெள்ளனத்தெம்பெருமான்வேட்கையுளமாத்தலமான்மியத்தைமுற்றுந்
தள்ளாவெந்நமன்றூதர்தமக்கோதியருநரகர்தம்மைநாளும்
விள்ளாதசுகசலதிவீடுறவாக்கினரறிதிவீணைத்தண்டாற்
பொள்ளாதம்ணிப்பொனிழைப்பூமானுக்காமானைப்போற்றுவோயே. (௪௬)

மாடேறுவெண்மதியன்மதியேறுநாரதற்குவகுத்தசீர்த்திப்
பீடேறுசௌனகராதியரானமறையவர்க்குப்பேசினனல்
நாடேறுகௌரவரிந்நாடேறித்தம்மனைகணண்ணிச்சேர்ந்து
கூடேறநினைந்தமுனிகோகனகத்தாளடைந்தகொற்றச்சூதன். (௪௭)

முற்றிற்று.

படலம் ௬-க்கு திருவிருத்தம் உ௦௭.

———:(0):———

# எ-வது. சுதரிசனமகாராஜன்

## சுத்தமடைந்து முத்தியடைந்தபடலம்.

---

இந்துமுடிக்குமெனையுமறையெடுத்துமுடிக்குமவன்றனையுங்
கந்தமுடிக்குங்கரியனையுங்காலைந்தருப்பூக்ககணரையும்
பந்தமுடிக்குமுனிவரையும்பரிவிலாமென்மைந்தரையுஞ்
சிந்தமுடிக்கும்வேடாதைமுட்டத்தலச்சீர்செப்புதுங்கேள். (௧)

வீணையெடுத்தமாமுனியேவிமலநாராயணமுனிவர்
நாணைவிடுத்தவெனக்கந்தக்கிருட்டித்தலநன்மையைநவின்ற
வாணைப்படிக்கேயருளுதுங்கேளகன்றமகதநாட்டரசன்
றூணையடுத்ததோள்வலியன்சுகுணன்யோகபூடணனும். (௨)

அன்றேற்கினியகோசலநாட்டரசன்மகளாஞ்சுமதியுமீ
மன்னவனார்விதர்ப்பனருள்சுனித்திரைப்பேர்மகடானும்
பின்னவிற்காங்கிழத்திகளாவிருக்குஞான்றுசுமதிவயி
றன்னவினியசுதரிசனநாமனுதித்தானன்னாளில். (௩)

இளையாடனக்குக்கீசகனென்றியம்புஞ்சுதன்வந்துதித்தனன்பின்
களைதீர்பைங்கூழியையவளர்காலத்திளையாள்கரிசாலே
வளையவினியமனமகன்றுவஞ்சநினைவார்புலையர்குல
மளையப்பிறந்தபெண்மகவைத்தோழியகத்தேவளர்த்தனளால். (௪)

தோழிவளர்த்தபுலைச்சியின்முற்றோன்றினோனும்புலையனையும்
பாழிவளர்த்ததிண்புயமாரரசர்குலவான்படிவமென
வாழிவளர்த்தாண்மூத்தாளீமகற்குப்பூமிவாழ்நீப்பா
னாழிவளர்ப்பானடிதொழுவீரழுக்காற்றினுக்கென்னறமுண்டே. (௫)

மூத்தாண்மகற்குமகியாளுமுறைமைத்தகுதியாங்கொலெனச்
சித்தார்புலையரிருவரையுஞ்செங்கோன்மன்னனிளையவில்லாள்
பார்த்தாதரித்துவளர்த்துவருஞான்றுபறப்பெண்பருவமதிற்
பூத்தாள்பூமான்கிழத்தியதைப்புந்திமகிழ்ந்துபோற்றியபின். (௬)

### புலச்சியை மணம்புரிபரிச்சேதம்.

வஞ்சமிகுந்தமனத்தினளாமருவும்யோகபூடணன்காற்
றஞ்சம்புரத்தியெனப்பணிந்தாடார்வேலேந்தலென்னுனக்குக்
கஞ்சநிகர்த்தகண்ணாளேகழறியயற்றித்தருதுமென
வஞ்சநிகர்த்தவடிவிழியளரும்புநகையொடிதுபகர்வாள். (௭)

எக்காலத்துமெனக்கினிதேயியற்றுமறத்திலெஞ்சலிலா
வக்காண்மகனாஞ்சுதரிசனவருமைமகனுக்காம்பருவ
மிக்காலானதனக்கும்வயதோயுங்காலமுற்றதுநீ
தக்காரோடுங்கலந்துகடிசாவிப்புரிதிதகுதியென்றாள். (௮)

வெய்யவேங்கைதகர்க்கனைதல்விரும்பிப்புலம்பறனைமானக்
கையள்கயவணினைந்துரைத்தல்காணுக்கோவுமவளுரைனைய

யையமனைறகிளவியெனவவளபேதவன்பினுக்குச்
செய்யும்பரிசொன்றின்றெனவேசெப்பியவட்கோர்முத்தமிட்டு (௯)

உனக்குமூத்தாண்மகனெனநீயுன்னுதுரைத்தவொண்டொடியே
நினக்குமிகுத்தவன்பானநிரைப்பொற்றொடியைநீநோக்கி
யெனக்குமனைக்குமுரைத்தியெனிலெழிலார்சுதரிசனன்றனக்கு
மனைக்கணுகக்கும்வணமிக்கான்மணத்தைமுடித்துமகிழென்றான். (௧௦)

கோவேந்துரைத்தமொழிகேட்டுக்கொம்பேருடையாள்குடிலமுளான்
பாவேந்தர்கடம்மாசியளாய்பானுகுலத்துப்பார்த்திவர்தந்
தாவேம்வழியிலவதரித்தாட்கொருவைந்தவனும்பெறலரிய
மாவாங்குணமுமழகுநடைமலிவுநிறைந்துமல்கியுளான். (௧௧)

ஓதிமுகிலோவுரைகரும்போவுடல்பொன்னுருவோகண்மலரோ
காதுவளையோகைக்கழையோகமலமுகமோகந்தரந்தான்
மோதுகமுகோமுலைமரைகண்மொட்டோதட்டோமுனைபறடு
மாதுவதனவழகினையென்வசமோவசனித்திடன்முடியா. (௧௨)

அன்னவளெங்ஙனுளளென்னிலடியேன்செய்ததவப்பேற்றான்
முன்னனுடன்யான்வளர்த்தெடுக்குமுறைமைபூண்டேனவடந்தை
தன்றாய்க்குழவிப்பருவத்தேசாய்ந்தாரதனாலென்சேடி
துன்னுமனைவாய்வளர்க்கலுற்றேனென்றுணைவாவென்றுசொல்லினளால். (௧௩)

கஞ்சமலர்வாய்வஞ்சமொழிகாணுவரசன்கரிசோரா
தஞ்சநடையேயுன்வாக்கேயமையுமென்றானனமகிழ்ந்து
நஞ்சநிகர்த்தநாரியும்பின்றனக்குமூத்தாளகமணுகிக்
கொஞ்சியுரைத்தமொழிகேட்டகோமான்றலைவிகுலவிநின்று. (௧௪)

என்றனருமைத்திருமகனுக்கினியமணஞ்செய்வாஞ்சையெழு
முன்றன்றருமநீதிகுணமுரைக்கவலவேனவுத்தமியே
நன்றுன்பேதமில்லாதநலத்திற்கென்றேநவின்றுனது
கன்றலகன்றகருத்திணங்கக்கடியைமுடித்திகடிதென்றான். (௧௫)

என்றவ்விளைவையறியாதவிலங்கேரிழையாளியம்புதலு
நன்றெண்ணியதன்சூழ்ச்சியெனநரகிற்போவாள்களிமேவி
மன்றன்முடிக்கும்வகையுளுற்றிமன்னர்மறையோர்சுற்றமெலாந்
துன்றுவதுவைச்சருண்மேவச்செய்துசுதரிசனன்மகனை. (௧௬)

தானமறையிற்பாராட்டிவளர்த்தகொடியசண்டாள
வீனமகளையிறைமகளென்றியம்பியிறைவன்மகனுகப்புக்
கானமுறையிலுரையேற்றியாகாமணத்தையாற்றிவைத்தாள
கானமுறைபோய்ச்சொல்வேறுகருத்துவேறாங்கடும்பாவி. (௧௭)

ஆகாநிமித்தங்கண்டமகனன்னைபிதாக்களன்பினெடுஞ்
சாகாயெனநஞ்சிடினுமுணத்தகுவதன்றோதலையனென
வேகாநின்றவேட்கையிலவ்வீனமகளைக்கைபிடித்துத்
தாவாநின்றவெங்காலத்தணிலேதாலிமுடித்தனனால். (௧௮)

## எ-வது. சுதரிசனமகாராஜன் சுத்தமடைந்து முத்தியடைந்தபடலம்.

மணமாய்ச்சடங்குபுரிநாப்பண்மணத்தைநோக்கிமகிழ்ந்திமோ
குணமாய்ப்பாவியாமவடன்கூபத்தொருபெண்ணினைத்தூக்கி
நிணவாய்த்தோரையொழுகியுயிர்நீங்கவீழ்த்தியுயிர்மாய்த்துப்
பிணமாய்ப்போக்கிநன்மணந்தான்பொலியுமவைக்கண்பிறங்கவிட்டாள். (௧௯)

இன்போடினிதுயான்வளர்த்தவிளம்பூங்கிள்ளாயென்மார்பில்
வன்போடினிதுவாய்வயிற்றிற்புடைத்துப்புலம்பிவாய்வதறி
யன்போடவண்வந்தவரையெலாமணைத்தேயலறியிழவெடுத்தாள்
முன்பாடறியாயாவருமம்முகுர்த்தம்பிணத்தைமுன்புகண்டார். (௨௦)

மணங்கண்டுவத்தன்மாறியங்குவளர்த்திக்கிடந்தவவள்வஞ்சப்
பிணங்கண்டேங்கியதையெரிவாய்க்காடேயுய்த்துப்பேரிழவான்
மணங்கண்டுண்ணுதியாவருஞ்செல்வதைக்கண்டுவகைமனம்பூத்தாள்
கணங்கண்டுரைக்கப்போகாதகாதநிரயக்கதியடைவாள். (௨௧)

இவ்வாறிறைவன்றலைவிமகனேங்கக்கண்டவெற்றொடியுஞ்
செவ்வாய்ச்சுமதியுடன்பிறந்தசுதர்மனென்னுந்தோன்றறனை
யொவ்வாவிடத்தைவெள்ளிலையிலூட்டிச்சுதரிசனன்கையா
லவ்வாவென்னக்கொடுப்பித்தேயவனைச்சாவவமைத்திட்டாள். (௨௨)

தமர்மனுகுந்தலைவியுடன்றொன்றினனைக்கொலைபுரிந்தா
ளமர்தன்றமக்கைதனைப்புல்லியழுதேயண்ணனுலகாளுந்
தமர்யாரேனுமிலரதனுனின்றன்மகனைத்தாய்வீட்டி
லமரக்கோமான்கோசலநாட்டரசனுகவாக்குதியால். (௨௩)

என்றுமொழிந்தேசுதரிசனையிலகுந்தனதுநகரகற்றித்
துன்றுமுவகைதலைக்கூடிற்றென்றேதூயகணவனுக்கு
நன்றுகூறிநல்வளஞ்சேர்மகதநாடுநயந்தாள
வென்றுதனதுமகன்றனக்கேயிலகுமுடிசூட்டினண்மாதோ. (௨௪)

கீழாங்குணத்துக்கீசகனுக்கினியவரசைக்கிழமையிட்டப்
பாழாமிளையகிழத்திகரவடத்தைப்பாராப்பார்த்திவனுங்
கேழாமணிப்பொனிழைசுமதியென்னுங்கேடில்குணத்தவளுஞ்
சூழாநின்றமகிழ்வோடுஞ்சுகித்துவாழுமெல்லையினில். (௨௫)

கொழிக்கும்வளஞ்சேர்கோசலநாடாளுஞ்சுதரிசனவேந்தல்
பழிக்கும்பிறைசேர்குலமாதைப்பரிவினேடுகலந்தவள்பா
லொழிக்குமொருமைந்தனைப்பயின்றேயுவகையோடுமூன்றாண்டு
செழிக்குமாதுல்ன்குமரன்றனக்கேயுலகாள்செயலீந்தான். (௨௬)

அன்போடம்மான்சுதனுளவரசைக்கொடுத்தவறங்கொண்ட
மன்றானகரம்வருவலென்றவகையையறிந்தவஞ்சகியு
முன்னுமன்னன்றனக்குன்மகன்மோதமோடுமணம்புணர்ந்த
வன்னுணீசர்வழியுதித்தாளெனல்யான்கேட்டேனரசென்றான். (௨௭)

## நரபதியைநகரம்விட்டகற்றியபரிச்சேதம்.

கொந்தார்குழலிசுமதிமகன்கொலைசேர்புலையர்குலமானை
நந்தாமணஞ்செய்தவள்வயிற்றுநல்லமகனைப்பயந்ததனு

னந்தோவரசுக்குரிகைமயிலாளுயினன்கொலன்புறுமெஞ்
சந்தாரரசக்குடிசனித்ததலைவாவென்றுசாற்றினளால். (உஅ)

ஈன்றசுமதியெனுந்தாயுமினியதவஞ்செய்தளித்துமகிழ்
தோன்றலுனுங்கேளீருந்தொகுப்பாங்கேண்மையுடையாருங்
கான்றுதீயகனற்குழுவாய்க்கவிழ்ந்துபதைத்தகதிமானச்
சான்றதாகுமிறைவவெனப்பதைத்துப்புலம்பிச்சாம்பினரால். (உகூ)

அச்சோவச்சோவென்புரிதுமாய்ந்தாய்ந்தொன்மையாற்றாதார்
பொச்சாப்பறச்சாந்துணையுந்துயருழப்பரெனுநூல்போற்றுதெ
னச்சார்விழியாண்மொழிகேட்டுநொந்தாவிடும்மைபுநாமடைந்தா
மெச்சாவமைச்சாள்பண்டிதர்காளினங்காளென்னவேங்கினனால். (௩௦)

நூற்றைக்குறுணிநுக்கியவாபோலத்தூயநூற்குலத்தை
யாற்றக்கெடுத்தாரெனப்பண்ணையமைந்தகுலத்தாளுடன்பிறந்தான்
காற்றைப்போலப்போய்க்கொணர்திரெனவேவலித்துக்கொணர்ந்தனர்பின்
கூற்றைநிகர்த்தான்றனைவிளித்துன்குலத்தைவிளக்குகெனவவனும். (௩க)

பையுண்மேவியரசகுலமென்றேன்பறையன்குலமெய்யே
யையேயறிவின்றவனெனலையறிந்தயோகபூடணனு
மையோவெனப்பேருயிர்ப்போச்சியறநூனவின்றதகலாமற்
செய்வானவன்றன்சென்னிவிழச்சேதித்தவன்றன்சேயாவான். (௩உ)

கூனலயஞ்சூழ்கோசலத்தேகுலவுகுமரன்றனைமனையோ
டனன்மருகவெனுவெருகவென்னச்சுருளையிட்டோட்டிக்
கானலடுக்கறேயமெலாங்கடந்துகடுகவரமகன்றன்
தானம்விடுத்தானவனும்விரைந்தானுவடுத்தான்றந்தையிடம். (௩௩)

வந்ததநயன்றனையீன்றாள்வயிற்றையதுக்கிக்கொடுதந்தை
நொந்தமனத்தினொடுபுல்லிப்புலம்பிச்சேர்ந்துதூங்கிவரு
மைந்தநின்னைமாலனைவைத்தேமென்னேவழங்கலெனக்
கொந்தார்நீசெய்மணமகடான்கொலைசெய்புலையர்குலமென்றார். (௩௪)

நினதுமனையாளிழிஞர்குலக்கவுண்டரீன்றநேரிழையா
மனதுக்கியையவிவரித்தேமுண்மையெனலைமகனறிந்தான்
கனதுக்கமதாயவன்சோர்ந்துகண்டதுயரைவிண்டுரைப்ப
வுனதுகருத்தும்வல்லமையுமுரைமினென்றானுமைகேள்வன். (௩௫)

ஏலாக்கொடியவெந்துயரையுழப்போன்றந்தையெண்ணரிய
நூலாக்கறிவார்வேதியரைக்கோட்டிப்புரிதுநுவலுதிரிம்
மாலாந்தீயவினைபுரிவார்க்கென்னேதண்டம்வழுவாமல்
தோலாதுடைத்திரெனமறையின்றொகுப்பைவகுப்பைவிரிப்பாரால். (௩௬)

கொலைஞர்புலைஞர்மாதங்கர்குணங்கர்கவுண்டர்குஞுங்கரென
விலங்குகளைஞர்சண்டாளரென்னுமவர்தங்குலமகளைப்
புலங்கள்பொருந்தப்புல்லினவன்பொலியுமாவிநீக்கிவிட
வலங்கொண்மிகுதிவருக்கமெலாம்வருக்குமென்றார்மறையவரே. (௩௭)

மனையமகரைவெகுதூரம்வர்ச்சித்திடல்காண்மூறைநை மயெனும்
வினையைவிளம்புமவரானவித்தையறிந்தவிழிநீரி
னனைந்துகலியுந்துயருழந்துகாடுகேகருநரர்சுரருங்
கனைந்தகலக்கபபீழையினாற்கலங்கிப்புலம்பிக்கரைந்தனரால். (௧அ)

அன்புமிகுந்தபேரரசனவனுந்துயரையாற்றுமன்
முன்புபுரிந்தமணத்தலைவியோடுகானமுற்புகுந்தா
ளின்புவிலகாமகன்காதற்சகியாச்சுமதியெனுந்தாயு
மென்புகரையுமியோகுபுரிந்தேனக்கடவுளிணையடியை. (௧௯)

எண்ணியிருந்துதனதாவியிற்றுள்பின்னர்ச்சுதரிசனை
மண்ணையாளவொட்டாதவகையால்யாருநீக்குதலாற்
கண்ணைநிகர்த்தகாதலரையுயிரைமனையைக்கடியாத
வணணமவனுந்தீர்த்ததலமூர்த்தியருளான்வருந்தோடம் (௨0)

போக்கிப்புனிதனுவலெனப்புகன்றுபூவைவலமாக
நோக்குங்கருமமேற்கொண்டுநுவலுமனைவிமைந்தருடன்
றுக்குநதிகடேயமலைதலங்கள்வனங்கடமைச்சூழ்ந்து
காக்குமருள்சேர்சோணுட்டுட்கலந்துநடந்தான்கரிசறுப்பான். (௨௧)

முற்றிற்று.

ஆக படலம் எ - க்கு திருவிருத்தம் உ௪அ.

---(*)---

ஸ்ரீ

# அ-வது. குலமழிபடலம்.

பாகினிற்பழுத்தகன்னற்பாணறைசுவைதேனுதி, வாகினிற்பழுத்தவின்பின்வாக் கரிநாமத்தென்றுஞ். சேகினிற்பழுத்தநாவார்செம்பொருண்முனிகாண்முன்னு, ணுகி னிற்பழுத்தமன்னனற்குலமழிவுகேண்மின். (௧)

## டிட்டிமர்களுண்டானபரிச்சேதம்.

மன்னனுமாலப்பெண்ணுமைந்தருமறையோர்வேட்கை, துன்னுநல்லுருவுதாங்கி ச்சோழநன்னுடுதோன்றி, வன்னியர்வாழ்த்தும்பாடைவசனித்தவ்வதிதிமார்கள், உன் னிடவூர்கடோறுமுண்டுடல்வளர்த்தார்மன்னே. (௨)

வேறு.

ஒத்திலுயர்ந்தவொருபெரியமுந்நூலாளரூர்புகுந்து, சாத்தும்வனவாசத்தரெனத் தரித்தவேட்த்தவரெனவே, யாத்தர்போலவருமறையோரகத்தேகலந்துபரிமாறி, மூத் தர்குலத்துண்முந்தினரைமுழுதுங்கெடுத்தார்முழுமகரே. (௩)

தான்சண்டாளனுயதன்றித்தழலையடுத்ததூலமெனப், போன்சண்டாளக்குலக்கு ழியிற்பொதிந்தபெரியவூரெல்லாங், கான்சண்டாளிகான்முனைகளோடேயெண்பத்தா றுண்டிவ், வான்சண்டாளமன்னிருந்துவாழுனான்றிலொருநான்று. (௪)

மாகமதியிற்கடலாடிவந்தமறையோனொருவனவ, ளுகவவனிம்மன்சரிதையறிந்தபடியாங்குள்ளாருக், கேகேயெனச்சொற்றவனுகியையோவெல்லீருங்கலந்தே, வாகையகன்றபுலையர்குலமானீரென்றுவழங்கினனுல். (ரு)

கொள்ளாயிரகோடிக்கலசங்கொண்டகலசமோர்திவலைக், கள்ளான்மிசிரப்படினகற்றக்கடவவேபோற்கரிசார்ந்தே, யுள்ளானிவனுலூரிலுளாரொருங்கேபுலைஞராயொழிந்தீர், விள்ளாவித்தானீரென்றேவிளம்பிவிடைகொண்டானன்றே. (சு)

அப்போதியாரும்வாய்மார்பிற்புடைகொண்டலறியழுங்கினைவா, லிப்பாவியினுற்சண்டாளவினத்தராஞேமென்றேங்கித், தப்பாரரசன்றனையுமவன்றழுவுமனைமக்களையும்வசை, யொப்போதரியவாய்பேசிப்புடைத்தேயூர்விட்டோட்டினரால். (எ)

ஒட்டியுயர்ந்தமறையவரப்பொன்னிக்கிள்ளியுலகினராய், நீட்டிக்கொடியடிட்டிமர்களெனப்பேர்நிகழ்த்தப்பட்டனர்கா, ளுட்டிலேயக்கரவரெனநவிலற்காயிந்நாள்காறு, மீட்டமோடுவசிக்கின்ருரெழினற்குலத்தாரிழிவேற்று. (அ)

வீணைமுனியேயவ்வேந்தன்விழைந்தபுலைச்சிவயினுதித்தார், காணுமிரண்டுவருக்கமுளகணத்தராஞரியாவரெனின், கோணுமூகக்கத்திரியக்குலத்தாரென்றுங்கோமுடியோர், நாணும்பள்ளர்குலமென்றுநவிலற்காஞரிருசாரார். (கூ)

பெண்ணின்வயிற்றிற்பிறந்தார்மூகக்கத்திரியப்பெயரினரா, யெண்ணுங்கொடியகிராதசமரென்னப்பட்டாரெண்குமரன், பண்ணும்பண்ணைப்பள்ளரெனப்பட்டேயங்குப்பரவியவர், நண்ணுநகரமேற்குலமேதேயகுலமாயினர்சில்லோர். (க0)

புலைஞர்தமதுகேண்மையினுற்பொருந்தலருந்தல்பூண்டதனு
னலஞ்செய்வேதநற்குலத்தைநாசம்புரிந்தநாந்தீயை
வலஞ்செய்துயிரைமாய்த்துமெனுமண்டிக்குழிவாய்வீழ்ந்திறந்தார்
கலஞ்செய்மூடருற்வுகொண்டார்கவினும்பேற்றைக்காண்பாரோ. (கக)

குடும்பத்தோடுமுயிர்மாயக்கோதையிழைத்தகொடியவனை
யடுங்கானகற்றிவிட்டசிற்றுயழுங்கிப்புழுத்தேயருநிரயங்
கடிதுகொண்டேயழுந்தினளக்கரிசார்புலைச்சிமாண்டவுட
னிடங்கொண்டெரிவாயிழிந்துவிட்டாளிறைவன்மகனுஞ்சுதரிசனன். (கஉ)

பற்றியெறியிட்டவிர்தீயப்படுபெஞ்சரத்திலகப்பட்டுச்
சுற்றிக்கதறிச்சோர்ந்தோயுஞ்சுகத்தையுறழச்சவிமன்னன்
சிற்றுயியற்றுஞ்சூழலினுற்சுழன்றெண்ணரியகோதியற்றிப்
பெற்றுர்மகிழுமந்தணரைப்பேதுபடுத்திக்கொலைபுரிந்தாம். (கங)

அந்தோவந்தோவென்புரிதுமளவில்லாதமறையவரை
நொந்தோய்ந்துயிர்நீங்கிடப்புரிந்தாநீசர்குலத்தைதழுவிவிட்டாம்
வெந்தோமெரிவாய்ப்பிறப்பிறப்பைநீங்கோமென்றேவெய்துயிர்த்துப்
பந்தார்வினையையுள்ளியுள்ளிப்பதைத்தேதுடித்துப்பதறிநின்ருர். (கச)

என்னேபுரிதுமுலகமெலாமீன்றேயாண்டோயிறப்பிப்போய்
துன்னுமோக்கந்துலக்குவிக்குந்தோன்ருத்துணையாத்தோன்றுகின்றே
யன்னுமாவேகிளிமாவேயார்ந்தேயூருமவர்தேவே
யுன்னுதாளேயுறவெனக்கிங்கோவாவருளீயொருவாவோ. (கரு)

## தவம்புரிபரிச்சேதம்.

ஓவென்றழுதேபழுதில்லாவொருவான்புத்தேளொண்சரணே
காவென்றகண்டந்தனைநோக்கிக்கணிரத்துகைவான்கடவுளரு
டாவாதிற்பக்கருத்தொன்றைச்சாரப்பொன்னிதீரமந்த
மேவாநின்றைறங்கனல்பரப்பிவிழுமிதானதவமிருந்தான். (கசு)

தண்டாத்தவத்திலிருந்தரியேதழைக்குமண்டகோடிகட்கும்
பண்டாஞ்சுருதிபலவினுக்கும்பகரும்விரிஞ்சிபார்ப்பதிகோ
னண்டாதிபர்களெழுவாயாயமைந்தவருக்கச்சேதனர்க்கு
முண்டாங்கருத்தனென்றறவோருரைக்கும்பரதத்துவமென்றான். (கஎ)

குருவினருளுற்றவர்க்கன்றிக்குலிசன்சலசன்வெண்ணசலன்
மருவுமகல்வானவர்முதலோர்வாக்குமனக்குமெட்டாத
பரமென்றையந்திரிபறவேபடுமோபட்டாலன்றவரே
கருமமகன்றவழிவினலங்கவிழ்வாரென்றேகலக்கற்றான். (கஅ)

எந்தாயெம்மாரியனெனக்குன்னெழிலின்பரத்தையிளம்பருவந்
தந்தானதனுனியையன்றித்தழன்மேனியனைத்தறிதலையை
வந்தார்யோனிவாகினனைவள்ளிமகனைவழிகிடக்குந்
தந்தாமுகனைப்பயிரவனைச்சுரரைப்பொருளாத்தாழ்ந்தறியேன். (ககூ)

பொருளாத்தேவதாந்தரத்தைப்போற்றாதன்றன்பொன்னடிக்கே
தெருளார்சேடமுற்றமுமூட்சுக்கட்கினியதொண்டினன்யா
னருளாகினதுசுதந்தரத்துக்கிலக்காவென்னையாட்படுத்தி
யிருளாம்பவக்கண்வீழ்த்தாதென்னிழவைவிளிந்தியெந்தாயே. (உ௦)

சுகிர்தம்பொருளாக்கொண்டென்னைச்சுகிப்பானினைக்கிற்சோர்பவமே
விகிர்தமாகுங்கற்சோற்றின்மேவும்பதங்காண்விரகுண்டோ
வகியையணையாப்புலையுண்ணுமதனைக்குரங்கைவையமென
வகியென்மாவையுரம்விளங்கவைத்தாளத்தாமறுக்கேனீ. (உக)

ஆணைக்கிலக்கிட்டகற்றாதுன்னருளுக்கிலக்கிட்டாளாயேற்
சாணைக்கிலக்கிட்டவிர்மூவேல்சமனுக்கிலக்காச்சாய்ந்தொழிவேன்
கோணைக்கிலக்காங்கோவேநின்கோகனகத்தாட்குரியனென்றான்
வீணைக்கிலக்காமரிகீதைவிளக்குமுனியேவிள்ளுதுங்கேள். (உஉ)

## அனற்குழிவிழுவானுக்காகாயவாணியருளியபடலம்.

எரிவீழ்கிருமியியைவினையையெண்ணித்துடித்தேனிறிலியே
யரியேயனையேயென்னையேயருளேபொருளேமருளகன்ற
தெருளேதிருவேங்கடக்கோவேதென்பாலரங்கச்சீமானே
திருவேய்செல்வப்பெருமானேதேவாதிபனேயாளென்றான். (க)

இவ்வாறேத்துவான்சாம்பராகக்கனலையெழுப்பியக்கீ
ழெவ்வாக்குழியையோங்கவிடுத்துயிரையொழிப்பானுளத்தெண்ணிச்
செவ்வாய்க்கமலைநாயகனேசேர்ந்தேனின்றாளபயமென
வவ்வானனலைவலஞ்சூழ்ந்தஞ்சலிசெய்தெரிவாய்வீழமயம். (உ)

அருள்சேர்பெருவானருளாதல்அண்டஞ்சலிப்பப்பேரொலியான்
மருள்சேர்மன்னேவீழாதேமார்த்திக்குழிவாய்மருண்மாய்த்தென்

பொருள்சேர்முட்டமாத்தலமுன்பொக்கைமுறுக்கிப்புந்திலத்
தெருள்சேரெனதுமாமோக்கஞ்சேர்க்கும்வருதியேறுதி. (௩)

அஞ்சேலஞ்சேற்றீயீலுயிரவியேயெலமூதியென்பதமே
யெஞ்சாதனனியப்பற்றுவிருந்தாயுனக்கென்குறையுளது
பஞ்சார்தீயினின்பவங்கள்பறக்குமெனதுதித்தியப்பேர்
துஞ்சாக்குளநீர்தொலைக்குமவண்டோன்றித்தோன்றுலென்னெருசொல். (௪)

வசுனிலெழுந்தம்மன்னவனைமாத்தீவீழாவகைமறுத்துப்
போனதுணர்ந்தபூபதியும்பொருவின்ஞானம்பூத்தவர்க
ளேனவடிவத்தெம்பெருமானின்றியாபத்தினிற்காப்போன்
றுனுமொருதேவின்றென்னச்சாற்றறப்பழுதோவெனமகிழ்ந்தான். (௫)

குழியிற்கவிழ்தறனைநீங்கிக்குழுமியவண்வந்துறுமவரான்
மழுவிற்பூணுமாத்தாணுமகிழ்ந்தேத்துறுமாத்தலமேகும்
வழுவிற்றடத்தைவினவிவருமார்க்கங்கொடுமென்னைவனெழுந்தா
னிழிவற்றவரேத்திடற்குரியவேனப்பெருமான்றலந்தனக்கே. (௬)

கேட்டிமகதியாழ்முனிவகீழ்மேவிரண்டுகாவதமு
வாட்டமகன்றவடக்குதெற்குமானமூன்றுகாவதமு
நீட்டமானபிரகிசயானந்தபவனமெனநாப்பண்
காட்டவிளங்குமதுமுட்டமன்றேவதன்கண்கலந்தானல். (௭)

கலந்தவனத்தைவலந்தொழுதுகவினுமழியாக்கயமாடி
யலந்தையகற்றும்பன்னிரண்டாயவிருநாமவணிவிளக்கிக்
குலந்தைபெரியருரைப்படியேகுலவும்பலதீர்த்தங்களெலாம்
வலங்கொண்டாடிப்பருகிவினைமாற்றிமாற்றற்றுநிதிபோல். (௮)

விளங்கும்வேந்தன்விபுலையுடன்மேவும்பூவராகபிரான்
களங்கண்டறியாக்கமலபதங்கண்டுபணிந்துகரிலகன்ற
வளங்கண்டாராதனைபுரியுமாசின்மறையோர்வழங்கவரு
பளங்கணகற்றுதீர்த்தசடகோபமுதலபலவேற்று. (௯)

உய்ந்தேனுய்ந்தேனும்பருக்குமுதவாவோதக்கடலமுதை
நைந்தேநாடுமெனதுளத்தானன்குமாந்திகான்புரிந்தக்
கொந்தார்வினையெங்கதைநினைந்துகூப்பிட்டழுதுகோவென்னுஞ்
சிந்தாகுலமெங்ககன்றனவோதெரியேனென்றேதெளிவானன். (௧௦)

அருமாமுனியேயெமபெருமானமலபதத்தையனனியமாப்
பெருமாவினிமைப்பேறடைந்தார்க்கென்னேபிரதிபந்தமுள
வருமாவினியசுதரிசனமாவேந்தவனேவாசமுற்றுப்
பொருமாக்கூழுத்திநிலைமேவிப்பொன்றுங்காலம்பொன்னுருவாம். (௧௧)

சுருதிப்பறவையரசாலேசொல்லுங்கவினுர்மந்திரத்தைக்
கருதிக்கவினுர்சோதிமயக்காந்திமலிவிமானத்திற்
பொருதிக்குகளெங்கணும்போற்றபொலியும்பதங்கடமையகற்றி
யொருதிக்கினையுமுள்ளாதாருரிமைவீட்டிலுற்றனனல். (௧௨)

காண்டிவீணைக்கவின்மொழிசேவென்றுசயிலைவாழ்சிவனர்
பூண்டவினியவாதரத்தாற்புகன்றதீர்த்தமான்மியத்தை
வேண்டுஞ்சௌனகாதிகட்குவியாதமுனிமாணக்கனெனத்
தூண்டுஞானச்சூதனனிசொன்னனுலகஞ்சுகித்திடவே. (கரு)

முற்றிற்று.

ஆகபடலம் அ - க்கு திருவிருத்தம் உஅரு.

———:(o):———

ஸ்ரீ

# கூ-வது. மரித்தவருயிர்த்தெழுந்தபடலம்.

கருமமாமனைத்துமாற்றிக்கண்ணனுர்பதத்துக்காக்குந், தருமமாராழிக்காட்டுச் சௌனகாதியர்காணீவிர், பிரமமாம்புராணத்துண்முன்பேசிடுமரீசிகேட்பப், பெரு மனுரிவரும்பெற்றிப்புட்பிரான்பேசல்கேண்மின். (க)

மருமலர்கொண்டெம்மான்ருண்மதிதனிற்பொதிமரீசி, தருமகோசன்சேய்மாட் சிகேட் டுளையன்றேவன்ஞன், றிருமலிகரஞ்சிநாடாடினந்தனி லவற்குக்கேண்மை, யொருமலிமறையோனுண்டுசுதர்மனென்றுரைக்கும்பேரான். (உ)

புகழ்மலியேமகேசனுமவன்புலமைவாய்ந்தே, யிகழறுபுரோகிதஞ்செய்திருப்பவ னியற்கைஞர்னி, திகழ்மலிகங்கையாடவெஃகியேசெங்கோன்மன்பா, னிகழ்மனைம கனையாடைநீரனமீந்தாளென்ருன். (ங)

அன்னநீராடையாதியனைத்துமீந்தருடியான்போய், முன்னவன்பாதநீரின்மூழ்கி வந்திடுநாள்காறு, மன்னவவெனதுமைந்தனடைக்கலமென்னுமன்னுஞ், சொன்னவா றுஞற்றிக்காத்துந்தூயநீபோதியென்ருன். (ச)

தூயநீபோதியென்னுச்செப்புழிச்சுதர்மனென்போ, னேயமாமனையாடன்பானே ர்ந்தலர்நிரைமெல்லோதி, தேயமான்மன்னின்னிற்காந்திரவியமதியந்தோறு, ஞாய மாயுதவுநீபெற்றகமதினண்ணிவாழ்தி. (ரு)

சுடர்முடிமன்னியன்னச்சுகிப்பினிற்சுகித்தில்வாசற், படிபடர்கடவாதியானிற்ப டிவருங்காறுநீவாழ், குடிகடவாதுகூடிவருகயான்கூப்பிட்டுண்டா, னடிபடுதீர்த்தமா டியண்ணுவலென்றுபோனன். (சு)

தேய்த்தொளிர்செய்வேன்மன்பாற்சேயினைமனைவியாரை,வாய்த்திடக்காத்தியெ ன்னுவைத்தெழுமறையோனுஞெ, தீர்த்தமாநதிகளாடச்சென்றபின்செம்மலவ்வா, றூ ர்த்தனுயவரிற்கானபொருளினையனுப்பிக்காத்தான். (எ)

மங்கலமறையோன்மைந்தன்மனைவிகட்கிரண்டென்றேது, திங்களுமறவாதிகை செலுத்தினன்செங்கோற்கோமா, னங்கவர்பெற்றுவாழ்ந்தாரவனியான்குரிசிலானுன், றங்குறுமறிவைத்தின்ருன்மறவியாந்தக்கோனம்மா. (அ)

அடைக்கலமெனவிட்டேகியவர்க்குரியந்தண்மைத்தான், புடைக்குலமாதைமிக் கவினமைபுத்திரரைப்பூவாட், படைக்கலப்பதியோர்சற்று நினைவறமறந்துபாழாங், குடைக்குலவுலகையாளுங்காரியக்குழுவிற்சூழ்ந்தான். (கூ)

மறதியாம்பகைவன்மூன்றானினைவினைவாரியுண்ட, பிறகிருதிங்களாயும்பிராமண
ன்பெண்டுபிள்ளைத், திறமதுதோன்றாதற்றான்சுதனுடன்சுதர்மன்றேவி, யறமதுகண
வனுணையன்றுகொலென்றுளெண்ணி. (௧௦)

பசிப்பிணிவறுத்துச்சோகப்படுமுழியினுமேபர்த்தா, வசிப்பினையகன்றவாசன்
மறுவிடலென்றவாக்கை, நசிப்பிடனங்கைமார்க்குநன்றலவென்றுநாத, னிசப்பினைமு
டிமேற்கொண்டேயில்லகன்றறியாளானாள். (௧௧)

அறுவதுநாளுமுள்ளாமனைத்துமுண்டதற்குமேலே, யுறுவதொன்றேனுங்காணா
தோய்ந்துயிர்துடித்துவேறு, பெறுவதொன்றேனுமற்றுப்பிள்ளையுந்தானும்பீழை, யுறு
வதாயுடலென்பாகியுட்பதைத்துதைத்துக்கொண்டு. (௧௨)

[illegible]னீரற்றுநீண்டநயனங்காதடைத்துமெய்யி, லாவிசோர்ந்தடைத்துவைத்தபத
வுடனயல்வீட்டாகு, மேவிடாதகன்றகாதலன்றனைவிழித்தோரொன்றுங், கூவிடாதன்
பினீன்றகுழவியென்றெண்ணிடாது. (௧௩)

கணவனாராணைதன்னைக்கடைப்பிடிகற்பினார்க்குக், குணமதாகிடுமோசிவன்குலை
யினுமென்றுட்கொண்டாட், பணமதாகிடுவெம்பாந்தட் படுக்கையார்பரத்தையெண்
ணிவ், வணமதாகிடுசேயோடுமரித்துயிர்மாண்டாண்மன்னே. (௧௪)

அன்னமிலாதுதூயவன்னமென்னடையார்பூவை, துன்னுதன்கணவனில்லிற்றுப்
பிலையென்றுவீட்டின், மன்னல்விட்டடியைவீதிவைத்திடாதிருந்துமன்னீய், தன்னை
யுண்டவன்பாலேனுஞ்சேரலையென்றுசாற்றி. (௧௫)

போனதோர்கணவன்போந்திடறக்கிரண்டாண்டுகால, மானதாவிருந்துமன்னன
யர்வடைந்திருந்தசெவ்வி, மோனமாதவனுஞானச்சுதர்மனென்றிடுமோமுததன், வான
மார்காவுலாவுங்காஞ்சிமாநகரமாடு. (௧௬)

வந்தொருபூங்காமேவிமன்னிடங்கங்கையாடி, வந்தனன்போனனன்றேவவணி
வணனுகியுற்று, ணெந்தையேயென்றுசொற்றியென்றுருதூதன்றன்னை, முந்திடவி
ட்டான்வேதியர்க்கெலாமூத்தோன்மாதோ. (௧௭)

ஏவியயேவலாளனிருபிறப்பாளன்வீக்க, டாவியகாவிலுற்றசெய்தியைத்தரணி
மன்முன், மேவிவிண்ணப்பஞ்செய்தவேலைவேந்துணர்வுதூண்ட, வோவியமுற்றவண்
ணமுயிர்பதைத்துறக்கங்கொண்டான். (௧௮)

அச்சோகோவிந்தத்தீயவரசெனுமரிட்டங்கொண்டு, நச்சரவுறங்குநாதனடியனை
யவனில்லாளைக், கொச்சையினீர்மைகொண்டுமறந்தயிக்கொடியதீமைக், கச்சுதாவெ
ன்செய்கேனென்றலற்றினனாகிமன்னே. (௧௯)

அன்னபானதியீயவமைத்தவரிரண்டாண்டாக, வென்னமாவிருக்கின்றாரோவெ
ன்றுணர்ந்திடுமாறெண்ணி, நன்னயச்சுதர்மனிற்கனடியேயோடியன்னான், பன்னய
வகத்தைநோக்கிக்காப்பிடுபுதவுபார்த்தான். (௨௦)

காப்பிடுகதவநீக்கிக்காணுழிக்கவளமற்றே, சேப்புறுமலராண்மைந்தன்றிருவடியற்
றோர்தேவை, வாய்ப்புறவணங்கினார்தமனமெனச்சிதலமாகித், தேய்ப்புறுமத்திக்கூடா
ய்ச்சுருங்கியசவத்தைக்கண்டான். (௨௧)

சோறுநீரென்றுதேம்பிப்பொருமலிட்டழுதுச்சோர்ந்த, வாறுளமைந்தன்றன்னை
மார்புனைத்தரியேயென்றக்,கூறுளகொம்மைச்செவ்வாய்க்கோற்றோடிமாண்டுபோன,
வூறுளதீமைநோக்கியுள்விதிர்விதிர்த்தான்மன்னன். (௨௨)

*என்செய்கேன்வேதாரணப்பெருமாளேயென்பா. லன்புசெய்பூவராகவத்தனே டமலத்தாயே, துன்புசெய்மறதியாலேதுயிலைச்சுதனைமாய்த்தேன், வன்புறுமடமையா ளன்மாவத்திக்குள்ளாய்மாண்டேன்.* (௨௩)

*நம்பிவிட்டேகினான்றனங்கையைச்சேயைக்கூழால்; வெம்பிவிட்டாவியேகவிளை த்திடுகொடியபாவி, கும்பியிற்போவேனென்னைக் கொன்றுதீக்கொளித்தியல்லால், வெம்பிடுவிசுவாசப்பாதகற்கொருவிருப்புமுண்டோ.* (௨௪)

*ஆனனக்கண்வாய்கன்னமகடுகையவனிதன்னி, லீனன்யானென்றுவாளாவெற்றி ரேபுடைத்துக்கொண்டான், பானன்போன்மெய்தேரு மற்பதறினான்பகவலையோ, நானிதற்கென்னசெய்கேனாணாயேனென்றான்.* (௨௫)

*மாண்டுடல்வற்றறன்னைவந்துவந்தினிதுநோக்கித், தீண்டுவார்தம்மால்யாளாப்பு றட்டியேபுறட்டித்தீய்வான், காண்டகுகருணைசேரெங்கடவுளேபொச்சப்புலேயே, கோ ண்டகுகொடியன்றீவாய்கொதிப்பனோகோவேயென்பான்.* (௨௬)

*நிசிபகல்கேண்மையாசான்கேளிர்கணீதிகாமம், வசிகுலமானங்கல்விஞானமாதா னங்கோவஞ், சுசியகமோனந்தெய்வந்தவமறந்தோலாவாண்மை, பசிவரிற்பறக்குமெ ன்றுபகர்மொழிகடந்தாளென்பான்.* (௨௭)

*இவ்வணம்பன்னிப்பன்னியேங்கியேயினிதுாகித்துச், செவ்வணமலராடேவன்றி ருமுனம்போற்றிவந்து, கவ்விடுமாவிதன்னைக்கனலிலேநாளைப்போது, வெவ்வினைவி னைத்தநாமேவிடுதுமென்றுள்ளேயுள்ளி.* (௨௮)

*கேளையாமறையோனேநீநவமிநாள்கிட்டிற்றின்று, நாளைநாணன்றாருள்ளோநண்ண லுக்கதனினீயும், பாளையார்பொழிலூடின்றுபகலிராவிருந்தானோனே, நாளைநாணின்னை க்கண்டுநகர்வலஞ்செய்வித்துன்னை.* (௨௯)

*அகமுறப்புரிதுமென்றேயாவணவோலைதீட்டித், தருமெனத்தருவான்கையிற் போக்கினன்றரணிவேந்தன், புகுமறையவனுங்கண்டேபோந்திடுமோகத்தோடு, நகு பெருங்காடற்றானேநண்ணினன்பின்னர்க்கேண்மோ.* (௩0)

*நன்றிய * லபிசின்னென்னுநாழிகைநகரநாளை, வன்றினன்மறைவலோய்நீவருதி யென்றோலைபோக்கிக், கன்றியற்காவன்மன்னக்காத்தியாயனிவாழுற்ற, தென்றியம் புறம்பூக்கீழாகும்பிலத்துவாரத்தாலே.* (௩௧)

*வலையமாதேவிகாத்தியாயனிபிலத்துவார, நிலையிலேகிடுநற்சோதிமணியொளிநெ றியேபூமித், தலையிலேதயங்கும்பூவராகனார்சந்நிவேசச், சிலையிலேயானகோயிற்குள்வ யிற்சென்றானன்றே.* (௩௨)

## மிருதசஞ்சிவி என்கிறதீர்த்தபரிச்சேதம்.

*அண்டமிட்டவனைத்தந்தவாதிவராகவென்று, தெண்டனிட்டெழுந்துகையைச் சேர்த்தவஞ்சலியினோடு, கண்டங்கர்க்கதத்தைக்காட்டக் கண்கணீர்வெள்ளங்காட் டப், பிண்டந்தம்பத்தைக்காட்டப்பீதிசெயுயிர்ப்புவீங்கி.* (௩௩)

*அக்குநெக்குருகியென்றனப்பனேயடியரின்பாஞ், சக்கைவிட்டகல்கில்லாநற்சா ட்சியேசகத்தையுண்டு, பொக்குருதனைப்பினாலும்போற்றிடத்துப்பிக்காக்குஞ், சக் கரக்கையம்மானேதாசனையாண்டுகொள்ளே.* (௩௪)

---

* அபிசின்=மாத்தியானம்.

அப்பனேயொப்பிலாவென்றாமுதனையநாமத், தப்பனேதப்புண்டாக்கித்துப்பிலாச்சரரைநாளுஞ், மெய்ப்பிமெவுணர்தம்மையெற்றியெல்லிடுவான்றேவ, ரொப்பறுமுயிரைமீயுமொருவனேயாண்டுகொள்ளே. (௩௫)

கஞ்சனூற்கொன்றவாறுகாளையருயிரைமீட்டு, மஞ்சனுக்கண்டாய்காணவாக்கையோடளித்ததேவே, துஞ்சிமெறையோன்மைந்தருயிர்பெறத்துரோணன்சீடன், செஞ்சிடவழைத்துத்தந்தகேழலேகருணைசெய்யே. (௩௬)

சிந்துவீழ்ந்திறந்துபோனசிவன்றனக்குவமைசான்ற, வந்தச்சாந்தீபனீன்றவருமகன்றனையீராறு, முந்திடுவருடஞ்சென்றபினுமந்தமுருகன்றன்னைத், தந்திடுமெல்லாம்வல்லசாமியான்முசனுனே. (௩௭)

காட்டுத்தீயதனிற்றீந்துகரிந்திடுகற்முக்கோடி, மாட்டுமாவிடையர்மைந்தர்மங்கையரைந்திலக்க, வீட்டமுமிறக்காதிந்தவிமைநொடிவேலைத்தீயைக், கூட்டிவாய்ப்பெய்துகாத்தகோலவராககாத்தி. (௩௮)

அறுபுரம்பொடியதாக்கியாண்டவவறுகையோடி, மறுபிறப்பகற்றிக்காத்தமாதவமதலைவான, முறுமொருநகரங்காக்கவுய்த்தவபாண்டவையவர், மறுகுறுகுளநஞ்சுண்டுமரித்திடாவணஞ்செய்மாய. (௩௯)

கல்வினைப்பெண்ணதாக்கிப்பெண்ணினையாணதாக்கி, நல்வியலாணைப்பெண்ணுக்கரியினைநகராண்மன்னு, வல்வினைப்பகலாவெல்லையல்லதாமரக்கர்தம்மை, யெல்லியருமன்போலவிலங்கிடவியற்றுவோயே. (௪௦)

அரன்றனையாடதாக்கியாட்டினையரனென்றாக்கிப், புரந்திமொக்கன்றயர்புதல்வர்களாகிப்பூமன், வரந்தருமேமாப்பெல்லாமாய்ந்திடமானக்கூறை, கரந்திடுகெனக்கேட்டாட்குக்கருணைசெயையகாத்தி.. (௪௧)

தீயைநீராக்கிநஞ்சைத்தின்னமுதாக்கிக்கல்லே, வாயும்பூவாக்கிநல்லவங்கமதாக்கித்தாக்க, லாயுபசாரமாக்கியாப்பினையலராரத்தால், வேய்யுபசாரமாக்கிச்சுதனையாண்மேலோய்காத்தி. (௪௨)

பவன்றனைச்சிவனென்றாக்கிப்பத்தனுமவனுன்றேடே, யுவனெனப்பூசலாற்றவுற்றவனுக்கியுந்தி, யவன்செயுமவர்க்குச்சூநாயவதரித்திடுநின்மாயை, யெவன்செயலறியவம்மாநின்னிசையிசைக்கலென்னே. (௪௩)

அறிவொன்றுமறமதொன்றுமருளொன்றுமற்றநீயன், வெறியொன்றுமடியேன்பாணின்மெய்யடியவன்றனின்பப், பொறியொன்றும்பிள்ளைதன்னைப்பொற்முடிக்கற்பின்மாதை, நெறியொன்றுகங்கையாடவென்னிடைநிறுத்திப்போனுன். (௪௪)

போனவனிரண்டாண்டின்றுபோந்தனன்புந்திமாய்ந்த, வீனவனுகும்யான்சென்றிருபிறப்பாளனில்லி, லானவனுகிநோக்கவாவிமாய்ந்துலர்ந்துமாய்ந்தார், தீனதயாளநின்பாற்செப்பியென்சிவன்மாய்ப்பான். (௪௫)

வந்தனனென்றுகண்ணீர்வழிந்திடப்புலம்புவானை, யந்தமிலருளாளப்பேராதிவராகமூர்த்தி, வெந்துயர்கொண்டுநோகேல்வேந்தநீயஞ்சலென்பா, லந்தமிலன்பிட்டார்க்குமாவதோர்பிழையுண்டோ. (௪௬)

பின்னெருபேணணீக்கிப்பிழையறுமென்றுடன்னி, லன்னியநசையற்றிச்சையாகிடுமருமையாமென், பொன்னடியவர்க்கெனின்னலுண்டவர்பேணல்யாவு, மென்னதுகுன்றக்ஙன்றேமுடித்திடவுளன்காணேந்தால். (௪௭)

நன்றுநீயிறந்துபோனபிணங்களொன்றைக்காலே, சென்றிவண்கொடுவந்திப்பூததீர்த்தத்திற்கனற்பாகத்திற், றுன்றுகுரோசதூரத்தினிற்றுலங்குறுந்தீந்தூய. வென்றிமிருதசஞ்சீவனமெனவிருக்குந்தீர்த்தம். (சஅ)

அத்திறத்தீர்த்தந்தன்னிலந்தணன்கூறியாசைப், பத்தினிதனைநீராட்டப்பண்ணுதிபறந்துபோன, வுத்தமிமைந்தனோடுமுயிர்த்தெழுந்திடுவனீயும், பித்தனிற்பேதுறுமேபெயருதியென்றான்பெம்மான். (சகு)

அருணனுருதிக்குங்காலையருண்மொழிப்படியேயாற்றி, மருணைநீயென்றம்மண்ணன்மாயமாயினன்பின்மன்னுந், தருணமென்றண்ணலின்பத்தாடொழுதானைப்போற்றி, வருணமங்கலகீதஞ்செய்வழிப்பிலவொழுக்கேவந்தான். (ருo)

வந்தவனலகிலாதமகிழருணினைந்துவாழ்த்தி, யெந்தையின்சௌசிலாதிசீர்மையையிரவெலாமுண், டந்தமிலவனுமத்தையலற்றிடுமெமையம்வெய்யோ, னுந்திறந்தவர்மெய்கொண்டேவருதலைநோக்கவந்தான். (ருக)

வெய்யவனெழுமுன்மன்னன்றுயிலுணர்ந்தரிவைமாரோ, டெய்யவந்திடுநாளெண்ணியொளிர்மணியிழைப்பொன்சோதி, செய்யுமாத்தடவின்பானசிவிகைமேற்சீவனில்லாத், தையலைத்தனயன்றன்னையேற்றியேதளங்கள்சூழ. (ருஉ)

திருமுட்டச்சீர்சான்மாட்சிக்கேத்திரஞ்சென்றுசீமான், வருமுட்டமகற்றவல்லவாவழங்கிடுதீர்த்தக்கண், கருமுட்டமகற்றவல்லகடவுளைநினைந்துமாய்ந்த, வொருமுட்டமில்லாச்சீவனெழிந்தவப்பிணங்கடம்மை. (ருஙு)

ஆட்டினனுடனேநீர்வீழாவியரடக்கைமானச், சேட்டையிட்டௌவிணைம்பயிர்ப்பச்சச்செயலினோடு, வாட்டமின்மேனியோடுமைந்தனைவவ்விக்கொண்டிட், டிட்டமாமிலங்கைத்தீவாயெழுஞ்சனகியினேர்வந்தாள். (ருச)

வரநறும்புனன்மேற்பட்டவளத்தினிலெழுந்தநங்கை, யரசனையங்குளாரைக்கண்டதிவியப்பினோடும், பரசிமேவரைநோக்கிப்பயின்றிடுபரிவுகேட்டு, முரசுரவரசனோடுமுன்னையூர்புக்காண்மன்னோ. (ருரு)

புக்கவப்புரவலோனும்புகன்றிடுதேசமிநாளில், தக்கிடுமுச்சிப்போதுதண்டலையமந்துளானை, முக்கியநான்குசேனைவாச்சியமுறைமைமலீங்க, வக்கிராரத்தேவாழப்புலவன்வீடமைத்திட்டானல். (ருசு)

## தீர்த்தவரலாறுரைத்தபரிச்சேதம்.

இசைவலர்தமக்கெலாமேலீசனுமாங்கிரீச, வசைவலர்வணங்கலாவெம்மாதவன்வருத்ததீர்த்த, நிசைமறையவன்றனுக்கின்றுதித்ததுவாயென்னுற், புசவலியமுதுகொண்டுபேரிகையிலதன்கணின்றும். (ருஎ)

உகுந்துளதிவலைசேர்ந்தேயுள்ளதுஞ்சித்தர்கூடித், தகும்படியவிழ்தங்கூட்டி வைத்ததுமிர்தநீத்த, மிகும்படிமூழ்கினோர்க்குமிருத்திலைகலிகாலத்தே, நகும்படியிருக்கலாகாதென்றந்தவிவைகாடி. (ருஅ)

விக்குவசேனைநாதர்வீய்பவர்சனித்தனீங்கத், தக்கதாய்மற்றயாவுந்தருவதாயதற்குமாட்சி, வைத்துளாதனினீண்டுவருபவர்வரங்கள்யாவும், பொக்குறுதளித்தேயோங்கும்புகன்றவத்தீர்த்தமம்மா. (ருகூ)

மதிநலமுற்றஞானமரிசியேயறிதியென்னக், கதிநலமுற்றவீறில்கடவுள்ளையந்தான்கூறல், விதிநலமுற்றநேமிவனமுனிவரர்க்குவேட்கைத், துதிநலமுற்றசூதனுரைத்தனன்றொகுத்துமாதோ. (கூo)

முற்றிற்று.

ஆக படலம் கூ - க்கு திருவிருத்தம் ௩சரு.

—(o)—

## கO-வது. முசுண்டாசுரன் வரலாறுரைத்தபடலம்.

அடுமெவன்றனையோர்புரங்கிடத்திவாக்கானையோர்புரந்தனிற்கிடத்தி
நடுவணின்றுலகோம்புமஞ்சைக்களநன்னிறப்புத்தேடன்
அடிமலர்க்குளத்தந்தணீரயகாதீர்த்தமொன்றுண்டுமற்றதன்சீர்
செடியகன்றிடச்செப்புவலஃமினுஞ்செவிகொடுத்தினிதோர்வீர். (க)

வேறு.

நவநாட்டுறுசித்தருநாகருமா - தவநாட்டுறுவாருமேதாமரைமேற்
றுவநாட்டுறுவாருந்தொழற்கரியான் - சிவனுட்டுருவைச்சிதைதீரறிவீர். (உ)

செம்மாமலராண்மகிழ்திருமுட்டத் - திம்மான்மியமேய்ந்திடுகொந்தமதி
லெம்மானுமிசையேழாம்பிறிவிற் - கம்மார்புவிகைதொழநின்றுளதால். (ங)

கன்றுமறைநாவலர்காள்கருணை - நன்றாகவிளங்கிடுநாரணனூர்
பொன்றாவருள்கொண்டவர்பூவுலகி - னின்றாகிடுபீழையைநீங்கினர்காண். (ச)

ஈதிப்படிநிற்பவோர்காலமதி - லேதிப்படியென்றுணராவொருவன்
காதிப்படிகைமுகமெய்ச்சிர்மென் - றோதிப்படியாவுடன்மாவசுரன். (ரு)

அண்டத்தையோராக்கையிலாக்குறுமு - சுண்டப்பெயர்சொல்லிடுசூரதிபன்
முண்டத்தைவிழித்திடின்மோட்டுமலைப்-பண்டத்தைவருத்துளதாப்பகர்வான். (சு)

மலைமூக்குவகுத்துளவம்முழஞ்சிற் - கலைமாத்தொளைகொண்டுளன்காதிடுநா
வலைமாக்கடல்வாயகடேழ்குரவை - தலைவானடிபாதளத்தானமுளான். (எ)

அத்திக்கியைப்பனையையலவென் - புத்திக்கியைதாமதம்போலுருவான்
பத்திக்கியையாவெறும்பாதகர்தம் - வித்தைக்கியைவக்கிரவெள்ளெயிற்றான். (அ)

சுருதிச்சிரஞ்சிபதியல்லவெனக் - கருதிச்சொலுவார்கவிழும்நிரயக்
குருதிக்குழிகொட்டெரிநோக்குடையா - னொருதிக்குமிலார்களினேயுலைவான். (கூ)

அகரப்பொருளாம்பரந்தாமனெனப் - பகரப்படுநூலுள்பலப்பகர்வார்
தகரப்படுசன்மதரந்தரமாய் - நகரத்தினுநாட்டினுமேநிலையான் (கO)

அந்தாமரையாளழகன்பதமே - சிந்தாகுலந்தீரவெணுதவர்க
ணந்தாவினைபோலடனுகமதைப் - பந்தாகவெறிந்துபரித்திடுவான். (கக)

குறுமாதவர்கோடியர்குக்கியுளான் - தறிபோலுளதாகியதாளுடையான்
பறியும்மலையுங்காடும்பாரும் - முறியுங்கீழ்மேற்குழிவாய்முடிவான். (க௨)

அரிமாகுழிவாமுகமாவமரு - மெரிவீழசுருமிவனேருறினே
குரிவிக்கணமோகொதுகோவீயோ - தெரிதற்கரிதாத்தினுமாவலியான். (கங)

மாக்கோடிகளைமாவாத்தினுவான் - ஆக்கோடிகள்பற்கடியாவார்வான்
வீக்கோடிகளும்விரிமரனிடுரு - மாக்காக்கறினேரமையக்கொளுவான். (கச)

எரியுண்டத்தேவாயின்மடுப்பா - னூரையெரிக்கேயூட்டிநகைப்பான்
பாரையிடித்தேபாணிமுரிப்பா - னுரையிடித்தேயாறுவமென்பான். (கரு)

அந்தரந்தரமேயொளியானுர் - சந்திரசூரியர்சாடையிலானு
ருந்துறுமாதவருற்றவுழித்தேர்ந் - தெந்திரமன்றலிசைத்திடமாதோ. (கசு)

எண்ணுயிரமாயிரணியனிவனே - தண்ணுநிற்பலதசமுகனிவனே
கண்ணுநிற்பலகண்டையனிவனே - திண்ணார்தீயனென்றியாவருந்தீய்வார். (கஎ)

இப்பாதகனுளவெல்லவையிலயாரும் - தப்பாருண்டெனிற்றுவியொளிப்பார்
கைப்பாலுற்றிடுகோலுயிர்யாவு - மொப்பாயன்னவன்குக்கியிலொழியும். (கஅ)

அண்டமெலாமிவனண்டியுலாவிக் - கொண்டுகுலாவிக்கொக்கரியவனைப்
பண்டரிநாதன்பதமுரைமுனிவன் - கண்டனுரைதனுகிடுகவிஞன். (கக)

அந்நாரதர்தமையண்டினர்யாரு - முன்னுமுறைமையின்முனிவகலுற்றே
யென்னுமையரேயென்றுவினவு - நன்னுவோடுரைநவிலுவரதனல். (உ௦)

இம்மாவசுரனுமிம்முனிதன்னைச் - சும்மாவாருஞ்சுளியேனும்மை
யெம்மாவிஞ்சையுமோராரறிவு - மும்மோடொப்பிலரென்றுணர்வுற்றேன். (உக)

அதனாலும்வயினண்டியெனிட்ட - விதஞ்சொற்றும்மொழிவிதம்யாணியலற்
.கிதமாயினனவ்விச்சையெனென்னிற் - கதமற்றோதுவலென்றுமுன்கழறும். (உஉ)

## ஸ்ரீமந்நாரதபகவான்சிவஞானசித்தியால்

### சீக்கிரபலப்பிரதமென்றபரிச்சேதம்.

#### வேறு.

சீதரனடியையன்றிச்சேதனர்பதத்தைவெஃகி, யாதரவில்லாமூன்றுகரணமுமமைந்தமேலீர், மோதுறுமுசுண்டனென்றமூர்க்கனுரைதனைநோக்கிப், போதரகணடாயிங்குப்போதரவென்றுசொன்னான். (உங)

முப்பதுமூன்றுகோடியென்றிசைப்புத்தேட்குள்ளே, கொப்பெனக்காலநீளாதக்கணங்கடிதுகூடித், தப்பறத்தம்மையுள்ளித்தவநிலைசார்ந்துளாருக், கெய்ப்பறவரமீதேவரெவரவருண்மைதேர்ந்தே. (உச)

உரைத்தருள்புரிதியென்னுமுவன்றனக்குவமைசாலா, நரைத்துளவெண்மண்பாலநல்லதோரையங்காருங், குரைத்துளவீரவாட்கை கொண்டுளகுவவுத்திண்டோள், விரைத்துளவாகைத்தும்பைமிலைந்துளவீரகேட்டி. (உ௫)

கரிபுலியதனைக்கண்டையிட்டுங்கட்செவிகடம்மை, யெரிபுலியொளித்தோடாகவிட்டுமென்பெல்லாங்கோவை, வரிபுலிமரித்தார்தம்மைவைத்துமார்பாரம்பூண்டுக், கிரிபுலியுள்ளநீண்டகுடுமியைத்தீண்டிக்கொண்டும். •(உசு)

சூரங்கியைக்கறங்குகின்றகுசத்தியைக்கடுக்கைச்சூட்டைச், யரங்கியைபற்பபூச்சையறுகினைக்கொக்கின்கூழை, யிரங்கல்செய்திலங்குநாற்றத்தெயிற்றினிற்சீறிக்காணுஞ், சிரங்கியைத்தலைகள்சேர்த்தசெந்தொடைக்கொள்ளைக்கிரை. (உஎ)

அந்திவானவிருமேனியாக்கத்தையைம்மூன்றுய, செந்தழலேக்கமானைச்சேர்மழுவெரியையோசை, வந்தெழுமுடுக்கைக்கையைவாளெரியிலங்கக்காட்டித், தொந்தமிட்டாடிச்சூழுந்தொழுங்கழகணிகச்சூழ்வை. (உஅ)

நாளுங்கொண்டணிந்துமூன்றுலோகமுநடிக்காநின்ற, வாளுங்கொண்டமைந்தநீலகண்டமாதவனைமங்கை, யாளும்பங்காளன்றன்னையானைக்கும்மாளன்றன்னைத், தாளுங்கணீராறும்மாந்தப்பிலிதயன்றன்னை. (உகு)

சந்ததஞ்சார்ந்துவெள்ளித்தடத்தினையிடமாக்கொண்ட, நந்தலினமசிவாயனென்றிடுசிவனைநாடிச், சிந்தைசெய்தவமுற்றுயேற்சீர்பெறவிரைவிற்றோன்றி, வந்துன்றன்னுள்ளவரமெலாமினிதிற்பெற்று. (௩௦)

அறிவானயபரீடனெனுமறக்கோற்குரிசிலகங்களிகொண்
டெறிவான்சோதியேமமணியிலகுங்குலமார்புரமெங்கும்
பறிவான்புவத்தைப்பத்தாநாளென்னுமத்தமாமுரசம்
குறிவானுழவர்கொட்டவிடைகொடுத்தானவருங்கொட்டினரால. (௪)

விருத்தபாலகுமாரனெனுவிளம்பும்பவத்தீக்கதைமயலில்
கருத்தவவித்தைகொடுநிரயங்கவிழ்ந்தேறாக்கீழ்ப்புலையனினே
இருத்தலகன்றீரின்றுதிதிதசமிவந்ததெல்லீரும்
வருத்தமகன்றவிரதமதைவரிமின்னரசின்வாக்கென்றார். (௫)

இமையாமுக்கணெயின்முருக்கியிண்டைப்பூவாழிற்றருக்கி
அமையானூற்றுப்பத்தடுக்கியக்கியீராறக்கிகரஞ்
சமைமாமுகப்புத்தேண்முனிவர்கடவுட்சாதிதணந்தறியா
கமைசேர்தசமிநோன்பின்றுகாண்மின்னெனவண்பறையறைந்தார். (௬)

பாலகுமாரவிருத்தமரணத்தைப்பலவாகிடுநரகை
ஏலவளிக்குமிழிநாய்தின்கடையன்வித்துக்கிழிபிறவி
மாலச்சூளைமகன்புலையன்வாயிற்புழுக்கள்மல்கலெனச்
சாலப்பிறவியெடுத்தழுங்கீர்தசமித்தினமின்றென்றதிர்த்தார். (௭)

நாராயணற்கோநான்முகனுமவன்சேயவன்சேய்நாமெவரும்
தீராவடிமையெனப்பிரணவத்தாலறிந்ததெளிமிக்கீர்
ஆராவமுதாழ்வானருளையாராதந்தோவடியறிந்தே
யோராவசித்திலுழலாதீரொருபத்தெனுநாளுணர்மினரோ. (௮)

ஈரைந்தீராறுந்திதியிலிருந்தோர்பொழுதுண்டிடல்வேண்டும்
ஈரைந்தொன்றாநாடனிலேயிரவும்பகலும்புனலேனும்
நீருண்டிடலாகாவெனிலென்புசித்தற்கொல்லுநிகிலநலம்
நீர்கொணடிடநன்றுணரவல்லீர்நிருபன்னிருபந்தெரிமினரோ. (௯)

இப்பன்னொன்றாந்திதிவிரதமிருந்தபலமன்றேவிமையோர்
அப்பன்னருளோடவிர்பொன்பூவகமாரன்னையருளடைந்து
தப்பின்றேனுமறத்தமதுதாண்மீவீழுஞ்சிறுத்தொண்டர்
எப்போதேனுங்குறைவில்சுகமிருப்பதாகவிறுமாப்பார். (௰)

அன்னம்பானம்பலம்பக்கணங்கண்முதலவருந்தாது
முன்னும்புட்பகந்தமுதன்மொழியும்போகபோக்கியங்கள்
என்னுமெவையுங்கூடாநல்லிழையார்வாசவியைபாகா
மன்னன்றேன்பின்மரபுளிநீர்வரிமின்றடையற்றெனவறைந்தார். (௧௧)

சேட்டையற்றிண்ணுக்கையராய்த்தீபம்போலப்பொறிபுலன்கள்
ஆட்டையடர்வெந்திறலினராயவிசமருந்தாத்தவசினராய்
ஒட்டைமாடம்புரனுமெனவுன்னுந்திடராயொண்புரத்தைக்
கூட்டுஞானக்கொள்கையராய்க்குறிநற்சமாதிகூடுமென்றார். (௧௨)

ஆண்பெண்வருணவிபாகமறவருளெம்பெருமாற்காந்தினத்தில்
சேண்மண்டொழுமாதிருவாய்மாமொழியேயன்றித்திருமறையும்
வீண்டன்றளாகாதுபுராணங்கண்மநுமந்திரவிரதம்
காண்டன்னூலாகிதிகாசங்கருதிக்கழிமின்காலமரோ. (௧௩)

கேசித்தேனுகன்சகடன்முதலோர்மடியக்கிளர்பரனை
வாசித்தேனுங்கேட்டெழுதிவணங்கியேனுமுருவெண்ணிப்
பூசித்தேனுமடியரடிபோற்றியேனும்புதர்தமருள்
நேசித்தேனுமருச்சனையினின்றுற்றேனுநின்மினரோ. (௧௪)

வாக்கைமனனையாக்கையினைவரைவின்மகளைமருவிடவே
னாக்குந்தேவராதிகளுக்காக்கியாறுத்தீவிறகாய்ப்
போக்காதும்மைப்புருடோத்தமன்பாலிட்டேவருவிரெனில்
நீக்காச்சுகவீடுறுதிரெனநிகிலங்கேட்கப்பறையறைந்தார். (௧௫)

கோமான்கூறிவிடுத்தவணமாற்றாதுற்றதவறுளரை
வீமாறகப்பற்றிவதைத்திடற்கோரினலுமேவாவென்
றமாவாசியத்திரிவென்னமர்ந்தகுன்றிற்கியைபறையால்
சீமானூருந்திசைமுற்றுஞ்செவிடிட்டிடவண்பறையதிர்த்தார். (௧௬)

அறைந்தவண்ணமந்நகர்நாடடங்கப்பதுபன்னொன்றிரண்டுஞ்
சிறந்தசீமந்நாரணனூர்தேவியநந்தகொத்தாமுத்தர்
துறந்தபெரியரற்புதமென்றினிதின்வியந்துமகிழ்ந்தருளை
நிறந்துபுரிந்துவரவம்பரீடன்முத்திநிறைப்பித்தான். (௧௭)

இன்னவாறச்சோணநகரினிதிற்புரக்குமிசைவேந்தன்
பொன்னவாமெம்பரஞ்சோதிபுரிமுத்தொழிலினாதியத்தை
மன்னவாக்கித்தென்புலக்கோன்வழியையடைத்துமதிசூடி
தன்னதானதொழிலும்விதிதனதுதொழிலுந்தகைந்திட்டான். (௧௮)

அந்தோவிவ்வாறிக்குரிசிலறக்கோலோச்சியினுஞ்சின்னாள்
வந்தானென்னில்வைணவாறச்சமயத்தெவரும்மன்னிமகி
முந்தாஞ்சிருட்டிமுற்றுமெனமுனிவோர்சொல்லிமுழக்கிட்டார்
சந்தார்மறையுஞ்சதலீலையென்னற்குன்னித்தளர்ந்தனவால். (௧௯)

கேட்டீர்பிருகென்றிடுநாமக்கேதமகன்றமுனிவநடு
நாட்டின்மன்னன்மநுமுறையினந்தாமாட்சியென்றவருட்
பாட்டின்வண்ணஞ்சூதபுராணிகனுங்கேட்கும்பார்ப்பார்தம்
நாட்டங்களிப்பவீற்றிருந்துநவின்றான்பினராநற்சரிதை. (௨௦)

முற்றிற்று.

ஆக படலம் - எ - க்கு திருவிருத்தம் - உ௧௯.

———(o)———

ஸ்ரீமதேவரவராயபரமதயாகுரவேநமஃ.

# அ-வது. விரதமாற்றுப்படலம்.

பொருவிலருவெஞ்சருகுநீருங்காலுமுண்டுபோதெலாம், பெருகுண்பெருமன்றனைநினைந்துபோற்றிவாழும்பீடுசேர், பிருகுமுநிவவம்பரீடனென்றமன்னன்பெட்புடன், பருகுபாகியம்மும்பற்றற்றாற்றுவிரதம்பகர்வல்கேள். (௧)

தசமியேகாதசியிற்சொன்னவண்ணமாணைசாற்றியே, அசைவிலாவத்திவசம்புலரியாமூன்றுயில்விட்டரிகரி, நிசநிலாவிஞேதவேதநீதநாதநிமலவென், பசையிலாதுன்பசைவளித்தாள்பரமவென்றுபன்னினன். (௨)

போற்றியவணிலாணிகங்கண்மாற்றமின்றிப்புரிந்தபின், சாற்றுமின்பநூயவாயசக்கரத்தீர்த்தக்கணே, ஏற்றுளானுமேத்துமாறுகூடியாடியுடையுடஇ, ஆற்றுமீராரு குடவெண்மண்கேசவாதியாவரோ. (௩)

புண்டரங்கள்பன்னிரண்டும்பொலிவுறப்பொன்மலரிடம், கொண்டவன்னைசெவ்வரித்திரைத்தீபத்திற்குலவுறத், தண்டுழாயின்ருழ்வடஞ்செந்தாமரைப்பூமணிவடம், கண்டமாந்தர்கரிசறுக்கக்காமர்மார்பிலங்கிட. (௪)

தேவநாதனார்தமேனிதீண்டிடும்பவித்திரம், பாவநாமமற்றிடப்பதிந்தகைப்பவித்திரம், மேவிடும்பரன்றன்பாதபாணியாதிமேலவர், தாவிலாத்தியாவுமாமபுற்கூடைவாகிற்றங்குற. (௫)

அமலபரமயோகியானவம்பரீடமுநிவான், விமலமாகுசக்கரத்தீர்த்தக்கணேவிளங்கிய, கமலனுதிமுதியர்கூறுகடன்களாற்றிக்கரிசெனும், மும்மலமற்றமுதுவர்சூழமுத்தவிற்கண்புக்கனன். (௬)

முத்தவிற்கட்புக்கிருந்துமுத்துமாணிக்கத்தினல், பத்திவைத்தியற்றியுள்ளகோயிலாழ்வார்பாங்கர்வீழ்ந், தத்தவருடியென்றுசேவித்தத்திருக்காப்பைத்திறந், துத்தமக்கைதட்டியாங்குளுற்றுமாறுளுற்றியே. (௭)

தூங்கிலாதபரமனார்க்குத்துயிலுணர்த்துந்தூயவாம், பாங்கிலாயவேதகீதப்பாவையோதிப்பண்ணுடன், ஆங்கருதவிச்சுவஞ்சுபங்கலந்தவாடியோ, டோங்கவாயவாலவட்டமுள்ளயாவுமுதவினன். (௮)

நென்னலினின்மாலியங்களைந்ததற்குநேர்ந்துள, முன்னுமாதவத்தனுகுமுத்தனுஞ்சதாசிவன், றன்னதானசென்னிதாழ்த்தவன்களிப்பக்கொட்டினன், மனனுமாணிக்கச்சிம்மாசனத்துமாதவத்தனை. (௯)

வீற்றிருப்பவைத்துறுமவேதாந்தவிக்கிரகமதைச், சாற்றுமந்திரப்படிக்குட்புண்டரீகத்தலிசினே, ஆற்றுமாராதனையியற்றியங்கமாதியடைவுடன், நீற்றுஞானவனலினுலங்கிழலினுணர்த்தினன். (௧௦)

தூயஞானவாரியானற்றுப்பெலாந்துப்பாக்கினன், ஆயபூமிபாத்திரம்வத்தியாவுமாட்டிலமைகொடு, நேயமாகமனமகங்காரம்புலங்கணேருமு, பாயபேயமேதையிந்தியங்களும்பயன்பெற. (௧௧)

நிருவிகற்பமாகிநெஞ்சமாதியோகநிருபனும், சருவிகற்பயங்கடாக்கலாததூயதாரியாம், மருவிகற்பமற்றமாமேனிப்பிரான்வழங்கிடும், கருவிகற்பமற்றிடுங்கசேந்திரத்தெதமவாதனை. (௧௨)

அருச்சைதன்னையபபெருந்தேவித்தாயாமெனன்னையைக், கருத்தமனமில்லாதபேரொணகாலுணகாலிலாதியை, திருத்தவேதரூபிசூத்திரக்குமாரிதேவினை, விருத்தநூயவிசயகனுதிவிமலவித்தவீரரை. (௧௩)

மற்றுமானந்த்தர்முத்தர்பரிசனங்கண்மல்குறக், கற்றவேதகம்மியக்கணங்கள்பஞ்சராத்திரச், சுத்தவாகமச்சிரஞ்சுரந்தவாறுபூசனை, வைததவாசனத்திருப்பவைத்துபசரித்தரோ. (௧௪)

வேறு.

பாணிதாமரைபாததாமரைதிருப்பவளத்தாமரைகழுநீர்
தோணிநீரொழுசோதிநாயகிமகிழ்சுவாமிக்கீந்தாதனம்வான்
காணிநாயகர்க்கிட்டுமுன்றுபன்க்கமழ்குளிர்தூமணிநீர்
வேணிநாயகனிதயநாயகன்றிருமேனிமஞ்சனம்புரிவான் (௧௫)

அமைத்தபொன்மணிமந்திரக்கலசமார்சியமூன்றரைக்கோடி
சமைத்தபுண்ணியத்தலைகமைசேர்பரிமளத்துயனவெண்புனன்மூன்று
இமைத்தவாசமாரெட்டயிலங்களுமிலகுமாணிடத்தைதந்தும்
குமைத்ததீங்கரும்புடைத்திடுசோறும்வண்கோதின்முக்கனியாதி. (௧௬)

திருவொத்தாடைபூம்புகைபுரைபொன்னுடைதிகழ்வெயில்விடும்யாணா
பொருவறுங்கதிரசோதிச்செங்கேழ்நவமணியிழைப்பூண்கூட்டம்
மருவுறுந்திருத்தணடுழாய்ப்பச்சிதழ்மலர்கொடுநூனூலும்
பெருமணர்களிப்புறமலர்த்தொடையல்கண்முதலியபுனைவித்தான். (௧௭)

ஆயதீவகனிபலபலபிழிந்திடுசாறுமைந்தமுதோடு
தூயவின்மணக்குங்குமபடீரமாதியகெழீஇச்சுகாநந்த
மீயவல்லவாஞ்சந்தனமுறைறமுறையிறைவனுக்கினிதாட்டி
நேயமாமகிற்றூபதீபங்களுநிகழ்த்திடும்படியாற்றி. (௧௮)

வேறு.

அன்புடைமைதூய்மையறிவாராய்ந்தகல்வியமையறிஞரேறே
இன்புடையவரசமூகியிலகுகசேந்திரவரதனெனுமெம்மானுகு
வன்புடையநறுநெய்முழுங்கைவாரவோகரைகளுறவாக
நன்புடையவறுசுவையைந்துண்டிபலகனித்தொகுதிநாளுமிட்டு. (௧௯)

மூவகைநீரளித்தாடையொற்றிநறுஞ்சுருளமுதுமுதலவான
தேவகியீந்தருள்பரனுக்களித்தகன்றபரிமளப்பூந்தெரியல்சாத்தித
தாவமகல்சயித்தியங்கடந்தருச்சித்தாயிரம்பேர்தழைப்பவோதி
மாவிறையைவலம்வந்துகைத்தாளநட்டபிரணமமாற்றி. (௨௦)

சங்கீததோத்திரவார்ச்சியபுராணம்பாடிச்சாமமாதி
மங்காதவிருமறைகண்மல்கிடநன்றியல்சேவைவழங்கிவாழ்த்தி
எங்கோதவுங்காணுமியல்கசேந்திரவரதனெனுமெம்மானை
யங்காதரம்பொலியவாராதித்தினிதிருப்பானம்பரீடன். (௨௧)

என்றருள்செய்நாரதமாமுனிவர்பிரான்முகநோக்கியெந்தாயந்தக்
குன்றநிகர்குவவுத்தோட்கோமானெம்பரனுருவமநந்தகோடி
நின்றுளவன்றுரவவைகணிற்புகசேந்திரவரதனுமெம்மானை
என்றுமுபாசனைபுரிதற்கென்னுடலமெனும்பிருகுக்கிசைக்குமன்றே. (௨௨)

நன்முனிவவிஃதரியமந்தணமேனும்கவில்வல்கேண்மினுதன்
முன்முளைத்தபரத்துவமோபாட்டினைக்கேட்டிருக்குமிடமண்டமூந்நீர்
பின்முளைத்தபாற்கடலோகூப்பிடுகேட்டிடுங்கோயில்பிறங்குவானீர்
பன்முளைத்தபரவுருவோடுதித்தவிடம்பெருச்காரும்பகர்வான்முற்றும்.

நிலைறந்தவுருப்பூகதநீர்வளைத்தவிடங்கொடுந்தாபநிறைறசிவர்க்கு
மறைறந்தவிடமாயினவென்றவைகளைவிட்டைடந்தாவதானகோலஞ்
சிறந்தவருளூட்டுமிடந்தேங்குநீர்மடுவாகுந்திருவோடென்றும்
அலைறந்தறிவும்வலியுகனிமாறுடியகந்தோறுமமர்ந்துகாக்கும். (௨௪)

அருச்சைசயினுமோர்விலங்[illegible]மழகாலமரணயனுதியர்யாமாரும்
உருச்செய்தளித்தழித்[illegible]யுதவுபர[illegible]னைமுக்காலுமோதி
இருக்கைவிட்வெர்தோ[illegible]பாளு[illegible]சீவாதனென்னும்
ஒரு[illegible]னையேபெரு[illegible]தேவி[illegible]யோ[illegible]செய்[illegible]தான்மன்றே. (௨௫)

பிருகுமுனிவரவருதியெனவீணைமாதவனும்பிழைகடிர
உருகுமுனத்தொடுதுயன்றவொண்மாட்சியிர்சேற்றமுற்றவரர்றைத்
திருகுமனமற்றதிருவாழிவனமறையவர்க்குச்சிறப்பச்சொன்னான்
வெருகுவிழியன்னவிகடாரூரனருதமுனியெனுமேலோனே. (௨௯)

முற்றிற்று.

ஆகபடலம் - ௮ - க்கு திருவிருத்தம் - ௨௪௫.

——:O.——

ஸ்ரீமதேவரவராயபரமதயாகுரவேநம:

# ௯-வது. தூருவாசர்வந்தபடலம்

பாழிவ்வாயரவிற்பள்ளிபயில்பரம்பரனைச்சாா்ந்த, பூழிவாய்ப்பூந்தணசேகசைப பொற்குயிலினாளேத்தும், ஊழிவாய்மறைவலவீரேயொண்டுருவாதன்மன்பால், சூழிவாய்முனிகளேத்தசசெனறசிசொல்லககேண்மின். (௧)

பிணழயறுபிருகென்றேதும்பெருந்தவவம்பரீடன், விழைவுறுதிங்கடோறுமிடை திதியிரட்டியார்றில், தழைவறுமறைக்கிழாருந்தாமூநோன்பாற்றிப்பின்னண, மழைய, ருவடிவெம்மானைமகிழ்விசதுண்டொளிருங்காலே. (௨)

இயன்மறைமிருதியாதியிசைத்திடுவிரதந்தன்னைப, பயன்றருநேநாடாளுமபாாத திவனுணைகொண்டு, சயன்றருமனிதர்மாக்கள்பக்கிகடாமுமாற்றிப, புயனிறததமலன வீடுபுகுந்திறபபற்றுவாழ்ந்தால். (௩)

அலகறுநிரயங்கோடியாவனபாழாய்ப்புற்பூண், டிலகுறப்பூத்துப்போனவிணட யனிடுதன்மாய்ந்த, பலமுறுநீக்கனுளன்காலனார்தூதர்மற்றும், கொலையினரினமுமாற றும்வினைக்கெலாங்கொலைகணேர்ந்த. (௪)

நிலவலயத்துணேர்ந்தார்பிறவிகணீத்துப்பின்னர், சலமிலாச்சுகவானந்தந்தருகுந டன்னிறகுலம், வல்முளான்கூற்றிற்றேன்றுமத்திரிமுனிவன்மைந்தன், புலமுளான றூருவாதபபொருண்முனிவரன்சூழ்வெய்தி. (௫)

பிறப்பிறப்பினின்மீளாமற்பேணிடுகோன்மன்னூட்சி, சிறப்புறுசோணமெனனு நகர்வயிற்செல்வானுன்னி, மறப்பறுகலைகளோர்ந்துமன்னுமாணுக்கர்சூழத், துறபபவ ாதுறககிலலாத்திதிபனிரண்டிற்றேன்றி. (௬)

படங்கெழுபகுவ்வாய்நஞ்சுபடுபெரும்பாந்தண்மத்தத், தடங்கலுஞ்சாமபராக்கியம பரமேழுண்டோங்கும், மடங்கலோர்வடிவங்கொண்டுவந்தெனச்சீற்றததோற்றம், புட ம்பலவாற்றுங்கண்ணுரத்திரிபுதல்வன்போந்தான். (௭)

செங்கனன்மேனிவீசச்சிவசிவவென்றவாக்கான், சங்கெனவுடலம்பூத்தசாம்ப ரான்சம்புநாதன், கும்பிடுகும்பிகாத்தான்கோகணகத்தாண்முன்னு, வம்பிகள்பிறப்பை ணானமலிந்திழிசடைகண்மூத்தான். (௮)

அண்டருமஞ்சும்வாக்கானக்கனலுமல்கிக்கோத்த, கண்டிகைகவினக்கொண் டான் காந்துசெங்கோடிபூண்டான், குண்டிகைகொண்டபாணி கோத்திடுபாணிவே ணி, மண்டலமலைவீழ்ந்துவளர்ந்திலெத்ததாசிரன். (௯)

அசனியுமுட்கிச்சாம்புமதிர்ச்சியின்வாணும்யாவும், மசகனின்மறைந்துநோக்கும்வகையுளான்மலர்மாதாவின், சுசிமலர்ப்பதந்தீண்டாரமிகழ்சுரேசனும்வானோரும, வசிசராசரமும்பீழைவறுமையின்மார்ழ்கச்செய்தான். (க0)

அரவகேதனன்றனேசனுகினுயர்நேசத், தருமனைப்பிட்சைவேட்டுச்சாச்செயத்துணிந்தான்வந்தான், பொருந்துபல்லண்டகோடிபொருந்தியோடப்பறிப்ப, இருந்துளோகாப்பான்பூத்தாயிலகுவானிறையெண்வித்தான். (கக)

இம்முனிமாட்சியன்னோபலவுளவிசைத்தற்கேலா, அமமுனிமுனிவசோணமாககராண்மன்முன்னர், சம்முனிக்குழாங்கணமொய்ப்பத்தராபதிபனிரண்டாதான், நம்முனிதமொருதிருழநாமுணவந்தாமென்றான். (கஉ)

துலங்கிடுவிரதமாந்துவாதசிதினத்தினிற்கண், கலங்கிடுபசிநோய்மாய்பபானேனின்கருத்தேதென்னத், துலங்கிடுதோன்றலீசன்கூறுளமுனிவதோலா, வலங்கெழுபிரசாதங்கொள்கன்னல்வந்துளதான்மன்னோ. (கங)

இப்பொழுதேநாந்தோற்றமீறுறவடியோமெல்லாம், கொப்பெனவழிவிலின்பங்கூடிடமுநிவாகோவே, முப்பழச்சுவையாறேடே முனியுணிபோற்றிவாழ்ந்தேன், அபபமுக்கணனுரையவமுதுசெய்தருடியென்றான். (கச)

அநுக்கிரகிக்கவேண்டுமானகாத்தவன்றன்சேடம், கனக்கிரகித்துக்குக்கிக்கனலவித்தருளல்வேண்டும், சினத்திடேலமலவெவ்னுவருக்கியமாதிதீட்டிப், பனிப்பலமுகமனேதிப்பாணியாத்தெதிரினின்றான். (கரு)

நின்றவனீலகண்டனிமலநின்றோற்றத்தாலே, நன்றுளதீர்த்தகோடிநன்னவகோடிமாயோன, றுன்றிடுநிலங்கணமுற்றுமிட்டிகடோமினேன்பா, மென்றிடுமெல்லாமீயும்பலங்களுற்றுயர்ந்தேனென்றான். (கசு)

சொன்னவக்குரிசிலின்பாஞ்சொற்குஞ்செய்முகமன்பூத்த, நன்னயவிநயத்தொண்டினசைக்குமுண்மகிழ்ந்தமேலோன், பன்னகப்பணத்துண்மேயபரமன்றன்பத்தயான்போய், மன்னயநீராட்டங்கொண்டொடிதுடிவருவல்காண்மின். (கஎ)

என்றவணிசைத்தலோடுமிறைமுனியெந்தாயின்று, நன்றுளநாண்முந்நான்கினணிசிறிதுளதாலஃது, பொன்றுமுன்போதராயேயென்னமுன்போற்றிநின்றான், சென்றிதோவருதுமென்றச்சக்கரதீர்த்தஞ்சென்றான். (கஅ)

மந்திரமரபுநீங்காவகையலவழங்கிநீரில், சுந்தரச்சுகுணருக்கமுருத்திரருக்கஞ்சொல்லிச், சந்திரமௌவியார்க்குஞ்சகமருந்தமலனார்க்கும், இந்திரையழகியார்க்குமிசைமறையெல்லாஞ்சொல்லி. (கக)

காட்டிடுமறையின்சென்னியாவதுங்கழறிநன்னீர், ஆட்டங்கண்டிருந்தானந்தவத்திரித்துருவாசன், நாட்டமாட்டாமலம்மாதவன்வருவழியைநாடிக், கூட்டமோடினிதுகாத்தான்கோவல்சூழ்பெண்ணைநாடன் (உ0)

கோவல்சூழ்பெண்ணைநாடன்குறிகுணமறிந்தாய்கொல்லோ, ஆவல்சூழபிருகென்றோதுமருந்தவவெனச்சொல்காதை, மூவல்சூழெழுத்தாலேத்துமுன்னவன்முந்நூலாளிர, நாவலோடினுமாங்காருநற்கதையுரைத்துங்கேண்மின். (உக)

முற்றிற்று.

ஆக படலம் [illegible]க்கு திருவிருத்தம் - உகக.

——:0:——

# ௪௰ - வது. கடாவிடைப்படலம்.

கற்றைறவாணிலவுதூற்றுங்கலையினன்கவிகம்மாளன், ஒற்றைநல்லெழுத்தாலேத்துமோதிமற்றந்தந்தை, நற்றடிக்குகப்பார்தொண்டர்சரபதியுழிக்கூழ்வேட்டே, உற்றிடுமுனிக்குங்கோக்குமுறுகடாவிடையைக்கேண்மின். (௧)

விழுங்கிச்சுன்முதிர்ந்தசிதவின்மணிவிமலைமேதை, தொழும்புயன்மேனிப்புத்தேட்டேவிலைவணங்குதோன்றல், எழுந்துவாதசியிற்பாரணம்புரியெல்லையொல்லே, கழிந்திடும்போலாகின்றதேயெனேகடவனென்றான். (௨)

மந்திரக்கிழவர்காளம்மறைமுனிபுழுக்கல்வெஃகி, வந்தவன்வாரானின்றேபாரணைவரிக்குங்காலம், முந்தினதென்செய்கோவென்றவருடன்முறையிட்டேங்கி, அந்தணன்வருகைநோக்கியனன்மிதியடிமேனின்றான். (௩)

வேறு.

பிருகுகேண்மின்பிராமணன்பாரணைக், கருகனென்றனலோடுரைத்தாழியாம்
திருவினீர்குளித்தாமச்செய்திமையிற், கருமமாற்றுக்கடனிற்போதோட்டினன். (௪)

சாந்திமிந்திரந்தக்கைவல்லியம், ஏந்துமந்திரமாதியென்னென்னவோ
போந்தயாவும்புகன்றுமன்சொல்லிய, தாய்ந்திலான்குளித்தாடலிலாயினன். (௫)

ஆரணச்செனியாவனமுற்றுமே, பாரணத்துடன்பண்ணிச்செய்யானிகம்
சீரணச்செய்சவத்திற்றிகம்பரன், பேரணச்செய்தவத்திற்பிறங்கினன். (௬)

அடியர்சொல்லாரணச் சொலென்றெண்ணிலான், அடியரந்தணர்க்கக் கிரரென்றெனன், அடியருக்கரியாவியென்றெண்ணிலான், அடியனீயுமன்னத்தரமாய்ந்திலான்.( )

மன்னிவன்மிகுநம்மின்மாலாவனோ, மன்னிவன்சொற்படிப்போதன்மாட்டுமோ
மன்னிவன்றனனம்வினைமாறுமோ, மன்னிவன்கோண்மதித்திடற்பாலதோ. (௮)

என்றுகூறியிவனிங்ஙனிற்புழி, நன்றுபூபதிகாண்மதிநாடியே
சென்றமாதவன்சேரலைநோக்கினன், கன்றினன்கழிகன்னலைப்பன்னினன். (௯)

பொன்மயப்பூங்கோவற்றாய்க்குண்பித்தான், நன்மயத்துநந்தாய்க்கெலாமுண்பித்தான்
தன்மயத்தனந்தாதிகட்குண்பித்தான், சின்மயச்சிவமுத்தருக்குண்பித்தான். (௰)

ஆற்றுமென்முகமன்னெலாமாற்றினன், சீற்றமாமுனிசேர்கிலாதெண்ணினன்
ஏற்றமாமுனிகுக்கித்தீயெண்ணினன், கோற்றகோன்பெணிநோக்கொடுதேம்பினன்.

முனிவனைத்தரமூப்பரனந்தரை, யுனிவிடுத்தளவற்றவுற்றருடன்
கனிவிற்காத்திருந்தும்முனிகாணிலான், இனியென்செய்குதுமென்றுளம்வெம்பினன்.

அருகிலாருமருமறையாளரைக், குருகுலாதியரைப்புலவோர்தமை
மருவுமந்திரிமாரையுசாவியம், முருகுலாந்துழாய்கீருணமுன்னினன். (௧௩)

ஆணைகொண்டரியம்போருகப்பதப், பூணையர்ச்சனைப்பூந்தண்டுழாயுடன்
தாணுதன்னைத்தனித்தாண்டவஞ்செயக், காணுங்காற்றுமரைத்தாணீர்கவ்வினன். ( )

வாயுந்திமைப்பஞ்சாகுசையங்கட்கோர், நீயுந்நீராகலந்தருதீர்த்தமோ
[illegible]யினுங்கடையேற்குநனுகலென், றேயுமன்மனத்தோடேயுட்கொண்டனன். (௧௫)

[illegible]யெஞ்சாதுதீர்த்தந்துளவந்திகழ், [illegible]யெஞ்சாதுகொண்மன்னனமாதிகள்
[illegible]யெஞ்சாதுகொள்ளாதுவிருப்புடன், அதியெஞ்சாதுறுமாற்றைநோக்குற்றனன்.( )

உற்றவேலையுருத்திரனுரெனும், வற்றலாக்கைமகாமுனிமூழ்கியே
முற்றுமாம்விதிமுற்றுமுற்றுக்கிமன், பற்றுமாளிகைப்பாரணைக்குற்றனன். (௧௭)

பாரணைக்குப்பறைதெழுவான்முனம், தாரணைக்குத்தாரதிபன்முன்செல்லீஇ
ஆரணைத்தருந்தேசிகவாசிலா, வாரணைக்குந்துவாதசியுன்னுதி. (௧௮)

வருதியென்றுமுன்னினின்றுவணங்கினன், கருதிவாடிக்கலங்கிப்புகழ்ந்தருள்
தருதிசாருதிசாந்திசெய்தாளுதி, சுருதியாதிசுரோத்திரவென்றனன். (௧௯)

ஏந்தலின்முகநோக்கியமாமுனி, காந்துதீப்பசிக்குக்கிக்கடுப்பரம்
போந்திடாமுன்புரிந்ததியாதெனச், சாந்தியோடுமென்சாற்றிடன்மேயினன். (௨௦)

வேறு,

முற்றுணர்மூந்நூலாளீர்முண்டகத்தடத்துண்மூழ்கிச், சற்றுபோதிற்குண்மேவு தும்மெனுச்சாற்றிச்சென்றீர், துற்றிடுதுவாதசிப்பாரணைபுரிகாலநேர்ந்தே, அற்றதென் செய்வலென்னுவாரியர்தமையுசாவி. (௨௧)

அரிதிருவடியிற்றூவியருச்சித்தபசுந்துழாய்சீர், பருகினன்விரதந்திராவணமனமா தியாவும், கருதிலன்கருணைசெய்துகமலநாபன்றன்சேடம், திருவிலாதுண்டுகோத்திகிகழ் பரசிவமேயென்றான். (௨௨)

குரிசிறன்மாற்றங்காதிற்குத்தியகழுமுண்மான, எரிசிகையிட்டிபெய்தவாச்சியத் தெழுந்ததியின், கரிசிகைத்தணலின்கட்டிகண்கள்கக்கிடமெய்வெந்து, தெரியனற்சி வந்தமேகச்செம்மையிற்றிருகிநின்றான். (௨௩)

கண்கள்காட்டெரிபோற்றீயக்களேபரமயிர்க்காறேறும், புண்கள்கொட்டிடுதூ மங்கள்பொங்குறப்புருவமேறத், துண்டத்தின்புழையில்வெய்யவடவனறேன்றித்தோ னறிவ், வண்டத்தைச்சாம்பராக்குமழற்சிகையடர்ந்துகாட்ட. (௨௪)

திக்கெலாஞ்சீற்றத்தியிற்பொரிந்திடுதியின்மேற்கொண்டு, துக்கமிட்டலறிச்சாம் பிச்சுழன்றுசுலாவியேங்க, நக்கபிராற்குமிவ்வாறெழுசினக்கொள்ளோங்கள், புக்கிட க்கணடோமில்லையெனவிண்மண்புலம்பியோட. (௨௫)

நாட்டத்தையோட்டப்பல்லேகனிகெறித்ததிர்த்துத்தின்று, கேட்டத்தைக்கேட்டுப் பின்னுங்கிஞ்சுகத்தியின்குப்பை, வாட்டத்துப்பூவாழாவிவதைபடக்கொட்டிமன்னைக், கூட்டத்தோடிரப்பிநோக்கிக்குலைவுறுமாற்றங்கூறும். (௨௬)

கேட்டியாலரசேநீயோர்கீழ்மையுமில்லோனுறும், வாட்டினேன்பொறிகண்மா யத்தோன்மறைமுடிமாயோன்பத்தன், கூட்டநூலகந்தங்கற்றேன் கொதியழுக்காறு மாய்த்தோன், வேட்டுளோன்விரதசீலனென்றுயான்விழைந்துன்வீட்டில். (௨௭)

பசித்துவந்தையமேற்றுப்பனிரண்டாந்திதியிலன்னம், புசித்துறும்பேற்றைப்பூ ண்டுபோதுமென்றெண்ணென்முன்றீ, ஒசித்திடுதளவுந்தூயவுதகமுமுட்கொண்டொ ன்றும், நசித்திலவமுதண்டில்லேனுண்ணெனநவின்றாய்நன்று. (௨௮)

பொய்யிலியுண்மையாளன்புலவன்புண்ணியனற்சாந்தன், உய்யுஞ்சத்தியன்றயா ளுநீதிமானென்னல்பொய்யே, செய்யுமுன்சீர்த்திகேட்டுவந்தநம்மாட்சிதோரா, தைய மேற்றுண்ணுமாண்டியாவெனேனிணைந்தாய்போலும். (௨௯)

மூவடியிரந்துண்மண்ணுண்ணியிலைமுன்னியுண்ணாய், சேவடிப்புடைசேர் றின்புசெய்திருமாலேபோலும், தேவடிமறவாச்சிதவசிட்டனைப்போலுஞ்சோற்றுக் காவடிக்காவிகோடிக்கணத்தெனைவிணைந்தாய்போலும். (௩0)

ஆமடாபுரிந்தநின்றனதமதைய்டக்கவல்ல, காமட்டாவுறந்தேறுதநாத்திகான்கோவித்தால், வேமடாவுலகமென்றன்விழிமுனம்பட்டார்செல்வம, பேரமடாபுரங்கணமாய்த்தான்கூறிட்டாபுலமிலானே. (ஙக)

அதிதியாண்புாார்ப்பானீயோவரசனுவிருந்தாயேனும், திதிசெயுந்திருமாலன்பர்வாவராயினுமன்னூர்தம், மதிசெயுமன்னமான்மவாழ்வெனும்வசனமெணணிச், சதிசெயுநின்பாலுற்றேன்சகிக்கிலேன்சலங்காணென்றுன. (ஙஉ)

சலம்படவங்கிபொங்குந்தழன்மயமுனிமையைத்தாழ்ந்து, நிலம்படநீத்தாசிற்றநிகிலமாற்றுதேசான்றேய், நலம்படாவடியேனுறறுநவைபொறுத்தருள்கநாயேன், புலம்படாநூனேன்காத்திபுகலுனதருள்காணென்றுன. (ஙங)

தவமுளாய்சாந்தியுள்ளாய்தயையுளாய்சமதமாதி, சிவமுளாய்சிவனிலாயசீருளாய்சிறியேன்செய்த, பவமுளாயாதுண்டாறிப்பரிந்தருள்புரிதியான்றேய், துவமுளாய்பொறுத்தியென்றுதுதிபலதொடுத்துநின்றுன. (ஙச)

தோத்திரிதநெதிரினிற்குந்தோமுளதோன்றுலாசு, பார்த்திருந்தாற்றிக்காதநிபரசிவவென்றுபோற்றும், ஊற்றனேயுணர்விலானேசயவனேயுன்பாலுற்ற, நீற்றனைமானித்தாய்கிருபநீநின்றுகேட்டி. (ஙரு)

பிழைபுரிந்ததுமல்லாமற்பொறுத்தெனைப்பேணியென்னுக், குழைமனத்தினனுயுற்றதனறியுங்கூறுநின்றாய், உழைகரத்தவனீயென்று முபசரித்தொதுஙகக்கற்றாய், முழையிடத்துழுவைநாமமுகம்புடைத்தொலகன்மான. (ஙசு)

சமந்தமமுற்றுயென்றுயெங்குயான்சகிப்பக்கணடாய், தமமிலாதெல்லாந்தேர்ந்தசங்கரன்வடிவென்றெனனை, அமைவுறவறிந்ததுணமையாகினியரனைப்போற்று, திமையவர்க்கிறைவனுனவரதனையிறைஞ்சுவானேன். (ஙஎ)

உலகெலாஞ்சாம்பராக்குமுரகமென்றெனைநீதோதி, அலகிலாவருளையீயுமரும்பரசிவத்தைப்போற்றுக், குலமெலாங்குலமோநீயுங்குணமுளானுயிற்கூறும, நலமெலாநன்கிலோதிரைசைபெருகென்றுநககான். (ஙஅ)

சம்புசதாசிவாநந்தத்தழன்மேனிபூதி, பம்பியென்னகாபரணன்றனைப்பணிதியென்று, விம்பிதொருவாதன்விளம்பியதுணர்ந்தகோமான், கம்பிதத்துள்ளத்தோடுகணகணீாகாலக்கூறும். (ஙகூ)

இருக்கெசுச்சாமமாதியிருங்கலைத்தொகுதிப்பூமா, திருக்குமீறறறமூவாவொருபரஞ்சோதியீசன், விருக்கமாவிருப்பாவென்றும்விதிசிவன்வினவேனோமனனோ, பெருகிளையிலைபபூவாதியாம்பலபெருககாமென்றும, (சo)

சொல்லியபடியேமேலோர்வலைச்சூழ்ந்துகாத்த, வல்லவன்றனைப்பூசிதநேன்மதியணிவிதியேனேரும், நல்லமுதுண்டுவாழ்வுபெறுவரெனனவையின்றுன, மல்லலான்மகிழ்ந்தன்னேர்க்குமவைத்தனன்பலிதாவென்றுன். (சக)

சருவச்சீரிரோரயணன்சிவனயன்சாமிப்பூ, தருபதிமுப்பான்மூன்றுதாரவர்பகைவர்தாழா, இருபதினெட்டுக்கூட்டமனிதர்மாவினுமற்றுள்ள், பெருபுவனங்களெம்மாற்குடலெனலபேணிவீரோ. (சஉ)

தேகியாமரியைப்பூசித்திடிற்பிதிர்தேவராளேர், வாகிலாந்தேகமேற்றமகிழுமெய்யிட்டேரீரோ, ஆக்கவேவிருக்கமூலஞ்சொரிபுனலருந்திச்சாகை, பாகமாரிலைப்பூக்காய்பலமெலாம்பயனுமென்றேன். (சங)

நிற்பனகடப்பவுண்மேனிலவியிந்நிலைந்தன்னைக், கற்பனைபுரிந்துகாத்துக்கழித் துழிவில்லாமோக்கப், பொற்பினையீந்துமூலப்பகுதியிற்புகுந்துபூத்த, அற்பினையுளதயா ளத்தமலனையறியீர்போலும். (௪௪)

ஆரணத்திறுமூலநமெழுத்தோசையாவுங், காரணமூன்றும்பொற்பூக்கமலையார் காந்தனும், பூரணன்முகுந்தன்விண்டுபொலிபரவாசுதேவன், காரணனச்சுதாநந்தப் பிராணுடீர்போலும். (௪௫)

அயன்றனுலுலகமாக்கியவன்சிவரன்றனாலே, பயன்பெறுதழித்துக்காக்குமபா மனைப்பணிக்கும்வேதஞ், சுயமெனலறிந்துமென்னீர்சூழ்பிமானச்சூழன், மயமகப்பட் டேன்சித்தமருணடிரென்றரசன்சொன்னுன. (௪௬)

கச்சளங்கருக்குஞ்செங்கேழ்க்கதிரொளிமௌலிகோமான், அச்சுதன்விருக்கமெ ன்றுமரனயன்கிளைகளென்றும், நிச்சயநிகழ்த்தக்கேட்டோணிருமலன்மோகத்தாப்புண், டூச்சுதன்விருக்கமோவென்றனல்படச்சீறிக்கூறும். (௪௭)

வேறு.

விருக்கமுஞ்சிவன்மேவிமூலமா, இருப்பதுஞ்சிவனக்கிளையோடிலைப்
பெருக்கமுஞ்சிவன்பேணும்பூக்காய்கனி, வருக்கமுஞ்சிவன்மன்னநீயோருதி. (௪அ)

அச்சுதன்சிவனக்கமலன்சிவன், வச்சிரன்சிவன்வானவருஞ்சிவன்
எச்சமுஞ்சிவனிச்சையுமச்சிவன், சச்சிதாநந்தசம்புவுமச்சிவன். (௪௯)

அகரமுஞ்சிவனாரணமுஞ்சிவன், பகரும்வேதபாராயணருஞ்சிவன்
சகமெலாஞ்சிவன்றனணீருமச்சிவன, புகலுந்தீவளிப்பூண்வெளியுஞ்சிவன். (௫0)

நீயுமச்சிவனுனுமேயச்சிவன், ஞாயுமச்சிவன்றனயனுமச்சிவன்
காயமச்சிவன்காண்பவுமச்சிவன், வீய்வுமச்சிவன்வீடுமேயச்சிவன். (௫௧)

என்றுவேதவேதாந்தமிசைப்பதை, நன்றுதேர்கிலைபோலுநராதிப
இன்றுதொட்டிரண்டொன்றெனுதச்சிவன், துன்றுபாதந்துணையெனநம்புதி. (௫௨)

போற்றியப்புருடோத்தமன்றுண்டனென், றூற்றமும்மிறுமாப்பும்விட்டோங் கல்வாழ், நீற்றுளானைநினைந்துபூசிப்பையேல்,மாற்றிலாப்பதம்வாழுதிமன்னென்றுன்.

முனிமொழிந்தமுரண்மொழிக்கம்மனும், கனிவிருந்தகருத்துடனையரே
நனியிருந்தகலைக்குழுநன்றுணர், இனியரோதியதீகுதுமேற்றியால். (௫௪)

பெண்மையற்றபெரியநீபேசிய, தண்மையுண்மையஃதென்னனிலோதக்கேள்
எண்மையற்றவிருக்காதியோதிய,வண்மையோதினைமாற்றமின்றென்னெனில். (௫௫)

நீருரைத்திடுகோர்பொருண்முற்றுமே, நீர்தரித்தசிவனெனனிண்ணயம்
யாருரைக்குமனைத்துளுமச்சுதன், யாருரைக்கும்படிக்கமர்ந்தாருமால். (௫௬)

வானினுளளும்வளியுளுந்தீப்புனற், றூனினுள்ளுந்தரையுளுந்தாக்குறும்
கானினுள்ளுமலருளுமம்மலர்த், தேனினுள்ளுந்திருமாலிலங்குமால். (௫௭)

விதியினுள்ளுஞ்சிவனுளும்விண்ணிற்குப், பதியினுள்ளுமப்புண்ணவர்மாதவர்
சதியினுள்ளுஞ்சவிதாவினுள்ளும்வெண், மதியினுள்ளுந்திருமால்வசிக்குமால். (௫அ)

அகரவக்கரத்துள்ளுமடுத்திடும், உகரவக்கரத்துள்ளுமுடனுறும்
மகரவக்கரத்துள்ளுமகிழ்ந்தொவிர், சிகரவக்கரச்சீமானிலங்குமால். (௫௯)

பூரினுள்ளும்புவர்சுவருள்ளும்வான், காரினுள்ளுங்காயுத்திரிகாட்டிய
சூரியுள்ளுஞ்சுதாகரனுள்ளுமற, றூரினுள்ளுமரியவிர்ந்தாருமால். (௬0)

வேதத்துள்ளுமவ்வேள்விகளுள்ளுந், பேர்தத்துள்ளும்பொருந்துஞ்சராசர
பேதத்துள்ளும்பேதாபேதமின்றியே, நாதத்துள்ளுநாராயணன்வாழுமால். (௬௧)

தொழுமிறைதுருவாதவெனச்சொனான், வழுவிலாதமன்மீச்சினமண்டுதீ,
விழுதவிட்டெரிவிண்மண்கிழிபடப், பழுதெனுப்பதியோடுபெல்லாடுவான். (௬௨)

தடுத்திடும்புட்பதந்திரன்போலொன்றைப், பிடித்ததைப்பிடித்துக்காதும்பேதைமை
படித்திடும்பார்ப்பானுயும்பரசிவன், அடித்தொழும்பனுயும்விடானுயினன். (௬௩)

வாதிகடங்கட்கல்லான்மதங்களுக், கோதார்காண்வலியின்மையென்றுள்ளினன்
சூதும்வாதுமவ்வேதனைசூழ்விக்கும், போதமென்றுவிடாதுபோராடினன். (௬௪)

வேறு.

பீடுசான்மகிபன்சொற்றதறிதியோய்பிருகுஞான, வீடுசான்முனிவவென்னுவிளம்பிய
சரிதைதன்னைக், காடுசான்முத்தீவேட்குஞ்சௌனகாதிகட்குச்சொன்னான், நாடுசான்
மதிஞரேத்துநவைநலிநாமச்சூதன். (௬௫)

முற்றிற்று.

ஆக படலம் - ௧௦ - க்கு திருவிருத்தம் - ௩௩௧.

———:0:———

ஸ்ரீமதேவரவராயபரமதயாகுரவேநம꞉.

## ௧௧-வது. வாதுபடலம்.

மாசறவிமைக்குங்கூரொள்ளாழிமாமுதலைவாழ்த்தி, நேசமிட்டேத்தாநின்றதிரு
மலமுனிவபின்போ, தாசமிட்டக்கியுற்றுமக்கிமாமுனியுமன்னும், பாசமிட்டடர்ந்து
வாதுபுரிதருபடலங்கேட்டி. (௧)

வீறுசான்மிளிர்வேன்மீளிவின்மலைத்தோண்மீமன்னே, நீறுசான்மேனிப்புத்தே
ணமுதனிற்பகடப்பகீண்ட, ஆறுசான்மகிகண்முற்றுமாம்பொருட்காலத்துள்ளும், பா
றுசான்மொய்க்குமாழிப்பண்ணவனிலவலென்றாய். (௨)

விட்டுணுவாகுமீசன்றான்பரப்பிரமம்வேதம், கட்டுணுங்கடவுட்டேவனென்றுநீக
ழுறுமாலே, இட்டவனவனுக்கும்மேலிலகுவான்சோமன்சென்னி, கட்டவன்றனெம்
மீசன்கண்ணுதல்வாண்மினென்றான். (௩)

அரிக்குமேலாறுணெங்களம்பலத்தாடியார்க்கும், ஒருத்தனேரொப்பிலாதானொ
ளிர்முக்கணும்பர்மேலான், விரிக்குமூவுலகமேத்தும்விரியெரிமழுமான்வேலன், தெ
ரித்தனன்றிங்கண்மோலிச்சேவடிபுணிமின்றோமின். (௪)

அவமுறுதேவர்தம்மை யடைகலாதழிவில்லாத, சிவமுறுசிவனைச்சேவர்சிறந்திடு
பொருளிலெண்ணிப், பவமறுஞ்சிவத்துவேடம்பண்ணன்மின்பகவன்றனே, சிவனெ
னநினைமின்அன்றுன்சிறந்தொண்டினின்மினென்றான். (௫)

வேறு.

இத்தகையகடுமொழிகளிசைத்திடுமெத்திரிமகவென்றிசைக்காநின்ற
அத்தகையமுனிவன்மொழியோர்பாத்தைதகற்புள்மாதகம்புண்ணுக
உத்தமாற்கொழுநனைவிட்டோர்மகனைப்புணர்ந்திலமுறுவாயென்று
கத்திடுதன்மிகவுகொர்றிடவிருந்ததன்றியொன்றுரைத்திலானே. (௬)

பூசுரர்களினிது பணிபுண்ணியமாமுனிவரரேசீர்மூன்றுப்
பாசமறுபரமபதம்பெறுவிர்சிவனரியெனவேபகுதிபண்ணின்
நாசமுறுமெனவருளிப்பினுஞ்சிவனேயெடுப்பரிதைகடாதெங்கள்
ஈசன்கைலாயபதிபூதபதிபணிமினெனவிசைத்தலென்னே. (எ)

கள்ளருந்துங்கடுங்கேதனறிவுபறிகொடுத்தங்கண்ணில்லாது
தள்ளருந்திமத்தமதாற்றலைகாலொன்றுங்காணுத்தமொற்றம்போல்
கொள்ளுறும்வேற்றுமைகூடாதெனவுரைத்தசீரிக்குக்குறைபத்துத்திமை
விள்ளருஞ்சம்பினைப்பணிமினெனல்சந்தாகக்குரவர்விளம்பல்போலும். (அ)

அரிக்குமரன்றனக்குமொருபேதமிலையவருளென்றீரதிலோர்பேதம்
விரிக்குமவர்விரிஞ்சியம்வீழ்வரென்றீர்விளம்பியசீர்வாய்மூடாமுன்
அரிக்குமறிவரியபிரான்சிவனென்றீரரும்பவத்திவழுந்தறும்போல்
விரிப்பதிலைநங்குரவரரிபரனென்றேநலத்தின்விள்ளுவாரால். (௯)

விரிகதிர்ச்செம்பொலன்குடுமிவிண்டொடுவண்குவடியைந்தவிழுத்தோண்மன்
அரிகதிர்ச்செம்பொலனுழியமலபரதத்துவத்தையருளக்கேட்டு [னன்
வருமுனிவனெழுமானமுதிர்ச்சியிறலகங்கருகிமண்டாநின்ற
எரிமுனிவினிடியுதிரக்கறித்துதடுதின்றுயிர்களேங்கக்கூறும். (௧0)

வடிநெடுங்கோன்மலைமுனியான்மறன்மாந்திவருகுரிசின்மாலாமீசன்
அடிகுடியாமெனுமிறுமாப்பதின்மாண்டதுயுபதனுலுனக்குமேலாம்
குடிகுடியாமெனவுமரன்கூறெனவுமுனிவர்பிரானென்னவுமெட்டாப
படியெனுஞ்சித்திகண்மிகுந்தபரனெனவுங்கதனெனவும்பயந்தாயில்லை. (௧௧)

அன்றோனன்றென்றரசன்விதிர்விதிர்ப்பப்பறகணெரித்தரசேநீசொல்
முன்றேனைவிரிஞ்சிதனைமுருக்குபிரான்முக்கணுளமுருகன்றாதை
மன்றுயிவ்வனைத்திறுக்குங்காரணனைந்தக்கரத்துமலைமாதீசன்
என்றுநன்றுரைத்தனனீயவற்பணிந்தென்றனைப்பூசித்தனையேனன்றும். (௧௨)

மறுத்துநுவன்றிடினீயுமுன்னூறுமொருகன்னல்வருமுனின்னோ
சிறுத்தல்புரிசெந்தீயிற்பற்பமிடென்றிறனுணர்கிதெளிவின்மன்னே
வறுத்தலடைந்திடுதிகொலோவெனத்துருவாதன்புகன்றமாற்றங்கேட்ட
உறுத்தறனக்கேந்தன்மனமகிழ்ந்துவணக்கம்மியற்றியுவந்துகூறும். (௧௩)

வாதமிடத்துணிந்தெதிர்த்துமறுக்கும்வலிதெரியாதகல்விமல்கு
சூதரெனும்படிவாதஞரராய்மந்திரித்துத்தோல்வியாக்கும்
நீதமறுமவர்போலுநிகழ்த்துபரிகொடுக்கும்வலிநீங்கிக்காணின்
போதநரிகொடுக்குமவர்போலுமெனைப்பொடித்திடுவெலென்றீர்போலும். (௧௪)

முழுதுலககாரணனுமயன்றனைத்தந்திடுபரனுர்மூலமாவைய
பொழுதுமுதன்மலிந்திடுதத்துவங்கண்முளைவித்தவனுர்பூந்தண்சேக்கை
விழுவிரிஞ்சன்றன்னுழியவ்விடகண்டன்றனைப்படைத்தவிமலன்றன்யார்
பழுதகன்றபலகோடிப்பரப்பனைத்துந்தந்தளிக்கும்பரமன்றனேர். (௧௫)

கலிச்சுருதிதனையிழந்துகைதழாயழுமயனைக்காத்தனான்யார்
வலிச்சுருதிகவர்ந்தமதுகைபிடவரைச்சோமுகனைவதைபுத்தேன்யார்
ஒலிச்சுருதியுதவிசிட்டியுறுதற்றவருனொருபரன்யாருவகிக்குள்ளோ
மலிச்சுருதிகமடமதர்வரையழுதமெடுத்தருள்செய்வாதன்றன்யார். (௧௬)

வெள்ளிவியாழக்குதரமாக்கியவையுழிச்செக்திவெங்காங்கேயங்
கொள்ளும்வடிவினர்தமக்குக்கருமைவெண்மைமீர்மைகுலமழகுகூடும்
வள்ளிகளாம்வனிதையரைக்கடிமணஞ்செய்வித்துமக்கண்மருவிவாழ
உள்ளியருளோடுகுடியுறுவித்தபரம்பொருள்யாருரைமினீரே. (௧௭

இரண்டுபனிரண்டுபதினொன்றுபதினெட்டெட்டாவிசையாநிற்கும்
திரண்டகடவுளரெழுவாயானவருக்கமுதூட்டுந்திருமாறன்யார்
புரண்டுமெடிசீவர்புலமபாதுபுணரியிலெடுத்துப்புரந்துளான்யார்
தெருண்டமறைக்குரியவராப்பிறப்படைந்தும்புறச்சமயத்தியக்கம்பூண்டீர். ()

அக்கமலன்றனக்காரணங்கொடுத்துண்டாக்கும்வினையருளினான்யார்
முக்குடுமியருள்புரிந்துமூதாவியுடன்முருக்கும்வினையைச்செந்தீச்
செக்கருடன்மதிமிலைவானவன்றனக்கின்னருள்சுரந்ததிருமாறன்யார்
பொக்கமுளவதிரேகமாயையில்யாப்புண்டாரிற்புந்திமாண்டீர். (௧௯)

உமதுகடவுளரடியாவுளவானோர்வாலாட்டுமொடுக்கிமூகத்
தமைதிபெறவடக்கியலகறுகாலந்தாம்பரமாயனைத்துமானான்
குமதியுளமக்களெங்ஙனவர்கபேவர்களெங்ஙன்கோதுமாண்ட
சுமதிசுருதிக்குலத்துத்தூமுனிவுவருண்மினகந்தொலைத்துமாதேர. (௨௰)

சொன்னவிழியான்றுரும்புமேருமுதனிகிலமெலாஞ்சூழ்ந்துபூத்து
மன்னியொளிரகிலமுழுமுதலியவனெனவினுவந்தவேலைப்
பன்னுபலசமயபரம்பொருள்களெலாம்வெளியாகிநிதிக்கணூனைப்
பின்னமிடிலென்குறைநீர்பேசுமினோதுருவாதனெனப்பேர்பெற்றீர். (௨௧)

அளித்தழிக்குமந்தமிலியமரர்முனிவரர்கள்குலவருந்தேமுத்தி
களித்தளிக்குங்கருணைநிதிககனமண்மற்றெங்குநிறைநகவினார்மேனி
ஒளித்திருக்குமொற்றைநறையெழுத்தானபராபரம்வருகவென்றவ்வும்பல்
விளித்துழிநும்மரியபரமேவியருளிடிற்பிழையென்விளம்பீர்மன்னோ. (௨௨)

இவ்வெலாநிற்ககண்டாகனனுக்கேனருள்புரியவில்லைவான்மண்
கவ்வெலாமாண்டிடுமொபலியையடர்த்தமரரையேன்காத்தானில்லை
பௌவமெலாம்பதங்களெலாம்பருப்பதங்களெல்லாம்பவஞ்சமெல்லாம்
செவ்வனெடுத்துண்டுமிழ்ந்தேயடிமிதியிட்டளந்துழிநின்றேவெங்கோதிர். (௨௩)

அரியபெருந்தவனுமத்திரிமுனிக்குமகவுயைதனக்குஞ்சேயென்
னுரியவனுயினுமழக்காறுடற்றுவினைக்குடனுனீருண்மையோதும்,
பெரியரெவரெனினுமெனேயுயர்குலமென்னிழிகுலமென்பீதவாடை
தரிபரமனடியவரேதகுதியுளபெருங்குலராந்தவத்தின்மிக்கீர். (௨௪)

ஆக்குமவன்றொழிலையுமவ்வரிதான்காத்திடல்வேண்டுமெயன்கீழ்முற்றும்
போக்குமரன்றொழிலையுமவ்வரிதான்காத்திடல்வேண்டும்பூவான்மீதாத்
தாக்குமவையனைத்துந்தழலாழியகிராதனரிதடிந்தமூலம்
சேர்க்குமினுமாக்குமிவ்வாறருளுமுறைமறையினைநீர்தெளியீர்போலும். (௨௫)

சத்துவத்தின்கீழிருக்கும்ராசதம்ராசதமதன்கீழ்சத்திலாநற்
புத்தியழிதமமிருக்குமிக்கீர்மையின்னிலரையேபுகலுஞ்சிட்டி
அத்தனுமவ்வரனுமெனவறிமினிவருள்ளரிதானமர்ந்தன்னார்செய்
[illegible]ற்றவினைதனையுளுற்றுந்திதிபுரியுஞ்சாத்துவிகமுளார்தேவே. (௨௬)

அந்தகனுக்கொளியிலகாவழிவதிசர்க்கிலைசயிலகாவடற்றுஞ்சன்னி
மந்தனுக்குச்சுவையிலகாவதைபிறப்பிலிறப்பிலுழன்மாலத்தியர்க்
கெந்தைபாத்தினிலிலகாஞானமநுட்டானமிதெம்பெருமான்கைவாழ்
முந்தையுளவசித்தின்விளைவெனவுணர்தீர்சித்தினிலைமுற்றுமூத்தீர். (௨௭)

தேவதேவனுஞ்சருவவியாபகனுங்கேசவனுஞ்சிவராசி
மேவுபரமானவனுமேல்கீழ்சுற்றிருப்பவனுமேதாவான
சீதசீமங்காரணனுஞ்சிற்பரனுந்தற்பரனுஞ்சீர்மைவாய்ந்த
காதசிதாநந்தபரமானவனும்பூரணனுநந்தேவோர்தீர். (௨௮)

ஒப்புயர்வில்லாதபரவாசுதேவன்முகுந்தனுலகசாக்ஷி
கப்புறுவேதாந்தபரஞ்சோதிபரப்பிரமமருங்கடவுளுதன்
செப்புறுசெந்திருமார்பன்சென்னிவிழிகால்பாணிகோடிகோடி
தப்பறுசதாநந்திசம்புசிவசிரதீர்த்தசரணமூர்த்தி (௨௯)

சகலசராசரவதிட்டாநன்சமட்டிவியட்டிவிச்சுவனஞ்சாமி
நிகிலநிரஞ்சநனித்தியன்சூக்குமன்றூலனதுலன்சுத்தன்
அகிலதரவாதாரசச்சிதாநந்தனகிலேசனேசன்
புகலவரிதானபுவநாதியநாதிப்புலவன்புநிதனீதன். (௩௦)

நரைதிரைபல்பிறப்பிறப்புப்பசிசோகதாகமொருநாளுநண்ணான்
பரைமகிழும்பலகோடிபகிரண்டமண்டுதிருமேனிமாயன்
நிரைசுருதிமிருதியிதிகாசபுராணுதியெலாநிகழ்த்தாநின்றுன்
கரையறுகல்யாணகுணகருடகேதநன்கண்கள்கதிர்களாயோன். (௩௧)

வேறு.

முற்புகழார்சிற்சத்திபொறையாஞ்சத்திமோதமருளருட்சத்திநிவர்த்திசத்தி
தற்சமதயாசத்திநீளாசத்திதழுவுபிரவிருத்திசத்திசரணென்றுரை
அற்புடனுளநுக்கிரகசத்தியோடேயருட்சத்திஞானவிஞ்சைகிரியாசத்தி
கற்பனைசெய்சத்தியெழுகோடிசத்திகட்குமறிவரியனெங்கள்கடவுளோர்தீர். (௩௨)

அகமில்லான்மோகமில்லான்காமமில்லாணவகாமியமாயையனைத்துமில்லான் [ன்
சுகமில்லான்றுக்கமில்லான்களித்தலில்லான் சூழ்சுத்தவசுத்தமில்லான்றுவந்தமில்லா
புகையில்லானுறவில்லான்பாசமில்லான்பத்தினிபுத்திரர்கள்பௌத்திரர்களில்லான்
ககநமில்லான்மண்ணில்லானெல்லாமில்லான்காண்பவைகாணுவெவையுங்கற்பித்தாள்
வான். (௩௩)

அரியமறைகளுக்குமெட்டானயற்கு மெட்டானரவணிந்தவனுக்கு மெட்டானரு நூலாய்ந்த, பெரியமுநிவருக்குமெட்டான் சுரர்க்குமெட்டான்பெரியபிராட்டியர்க்கு மெட்டான்முத்திவீட்டிற், குரியசித்தர்தமக்குமெட்டான் வாக்குக்கெட்டானுட்கெட் டான்வெளிக்கெட்டானுனக்கோவெட்டித், தெரியவருவான்சோணநகர்க்கண்வாழு ஞ்சுவாமிகசேந்திரவரதன்சொன்மினீரே. (௩௪)

சுருதியரிதனைச்சொல்லுமுடியுஞ்சொல்லுஞ்சூக்குமவியாகிருதியரியைச்சொல்லும்
கருதிடுகாயத்திரியுமரியைச்சொல்லுங்கரமுடன்சகரமுடன்டகரஞ்சேர்ந்து
வருபகரபஞ்சகமுமகரத்தோடேவரியிருபத்தைந்துமரிமாட்சிசொல்லும்
கரிமீகரங்காண்மின்மறுத்தொருதேவிற்குங்காரணத்தைச்சொன்னுதிலைகலைகள்யாவீர்.

எங்குமுளனாதலினால்வீட்டினுட்பேரெழுந்திருப்பதுண்மேலாவிலங்கிக்காக்கும்
அங்கமுளனாதலினாண்ணானாமனையுள்வசித்திடலாலேவாசதேவன்
தங்குமுத்தியருளுதலான்முகுந்தன்வேதன்றானுனையிட்டளித்தலினாற்கேசவன்றான்.
சிங்கபரிபூரணனென்றனைத்துமோர்ந்ததிர்க்கதரிசிகளுரைத்தார்தெளிமினீரே. (௩௬)

பஞ்சதத்துவப்பிரளயத்தில்யாவும்பஞ்சசம்மாரஞ்செய்துபாலனாகி
விஞ்சிடுமவ்வசித்தைவடமாக்கிமாண்டவிரிஞ்சிசிவனிலைமொலாங்குக்கிக்காக்கி
மஞ்சுதிசழ்குழவியெனத்தனிரின்மேவிமார்க்கண்டற்கருள்புரிந்தவைகலன்றான்
கஞ்சனையுங்கறைமிடற்றன்றனையுமுள்ளாங்காசினியுங்கண்டுரைத்தல்காணீர்போலும்

காசினியையளவிடக்காற்கடையிலானார்கவளமெனவுண்டுமிழ்நாளெச்சிலானார்
வீசுகடல்வீழ்ந்திடுநாளெயிற்றினின்றார்விரிந்தவுலகிறந்திடுநாள்வயிற்றிலானார்
மூசுலகைமுத்தொழிலுக்கிட்டனான்றுமுழுமேனிதனினின்றார்முனிவர்சித்தர்
தாசர்களாஞ்சிவர்பிரமர்மனிதரேனோர்தற்பரனுமெம்பெருமாற்கென்னேசான்று. ()

அன்னமதாய்க்குர்மமதாய்மீனதாய்யானைமயதாயரிவையுதாய்க்கோலமென்று
உன்னுமதாயாளரியாயுலகமூன்றுமோங்கியுளவுருவமதாயுற்றசெவ்வி
மன்னுமனைபிதுரெங்ஙனுளருமெங்கண்மாசிலாதேவனிச்சைவண்ணமேனி
மின்னவெடுத்தும்பர்குடியேறவாண்டவிரியருளேன்மறந்தென்மயன்மேவினீரால். ()

முற்றுமுணர்சிவபெருமான்கூற்றினுற்றமுனிவர்களின்மாட்சியுற்றமுனிவனாயும்
துற்றும்வினைவழியறிவுதூண்டுமென்னுந்தூமொழிக்கேயிலக்கானீர்திதிசெய்தோம்பும்
பற்றறுமெம்பெருமானைப்பழிச்சிடாதுபழிகூறிவினையுண்ணும்படிநின்றீரைத்
தற்றிடுமெத்திரிமுனிக்குமகனாயைக்குமவதரித்துமழுக்காற்றையவித்திலீரே. (௪௰)

அறிவகன்றகீழ்மகனேயானனான்றுமருளோடுபுரப்பவனையகற்றிக்கொன்று
முறியவனையருளாளனென்பான்கொல்லோமுனியேநீமுகுந்தனொருபரமனென்று
மறுண்மிகுந்தமாற்றமதுபற்களுக்குமடியோட்டமுளமுதியள்வாய்தின்றாற்போல்
உறுசினம்விட்டமலனருளியநீரன்னமுண்டுபசிநோய்தணித்தேயுறுமினென்றான். ()

வேறு.

செஞ்சுடராழிக்கோடுகொடுலகைத்திதிபுரிந்தருடிருமாலின்
செஞ்சரணேத்துசௌநகரெழுவாய்முனிவர்காளத்திரிமுனிவன்
மஞ்சனுமரசமுனிவனும்வழிபட்டேத்திடுசமயவாதாடித்
தஞ்சமென்றவர்தங்கடவுளர்க்காகச்சாற்றியசத்தியங்கேண்மின். (௪௨)

முற்றிற்று.

ஆக படலம் - ௧௧ - க்கு திருவிருத்தம். ௩௭௩.

———(o)———

ஸ்ரீமதேவரவராயபரமதயாகுரவேநம:

## ௧௨-வது. சூளாடியபடலம்.

கோளாடியசேனும்புலிதானும்கொடிகொண்டான், தாளாடியதவமேயினிர்முனியுமமகிபதியும், நீளாடினவாதாற்றலையாட்டவரைசினைந்தே, சூளாடியதனையோதுதுதெளிமின்னுளங்களியின். (௧)

புண்வரியிடுதியிற்புரவலரோதல்பொறுக்கான், கண்வாயுதிரக்கசுறுக்கனலுங்க திருளனும், மண்வாயுறுமன்னேயெனமதியாதுபெனுமைசேர், விண்வாய்மதிபுனையும் விமலனையும்விழையாது, (உ)

முற்றத்துறந்தவனென்றுமுவாறுலெலாமொருங்கே, கற்றுற்றவனென்றும்மெ ழிற்கமலாசனன்காளாய், பெற்றத்தவனென்றும்பெருமறையோர்குலமென்றும், சற்றுற் றநம்பிடோர்கிலையென்றாணிமன்னே. (ரு)

வேறு.

சதுர்த்தசவிஞ்சைமுற்றுஞ்சக்கிரிதனைத்தான்சொல்லும், பதித்திடுபுவனமெல் லாம்பரனரியெனத்தான்பன்னும், விதித்திடலாக்கனிக்கலளித்திடல்வீட்டைடியீதல், துதித்தல்செய்யரிதானன்றுற்கேற்றநஞ்சிவனென்றேர்தீர். (ச)

ஞானமுஞாதாஞேயமாவருஞானவாக்கும், மோனமும்பொருளுங்கேட்பான்கே ட்பவுங்கீழுமேலும், வானமும்வழங்குங்கர்த்தாகர்மமுங்கிரிசைதானும், ஊனமிலரி யேயன்றுற்கேற்றாஞ்சிவனென்றேர்தீர். (ரு)

மனத்திற்குங்கீர்க்குமெட்டமாட்டவில்லாதமாலே, அனைத்திற்குமதிகன்றேவர் மாதவர்மனிதரேஞேர், இனத்திற்குமீசன்பல்கோடிப்புவனங்கள்காக்கும், கனத்திற் குங்கடவுளன்றுற்கேற்றாங்கடவுள்காணே. (சு)

கோசங்களற்றான்காணுங்குறிகுணமற்றான்கூடும், நேசமாமவத்தையற்றானிகழ்வ த்துதேயகாலம், பூசிடப்பூத்தான்யோகபுங்கவர்தமக்கும்பூணன், ஆசிலானரியேம்ற நின்றவர்க்குமேல்சிவனுமோர்தீர். (எ)

நிறைமொழிநிகமாந்தங்கணிகழ்த்திடுயேனுமேலாம், கறைமிடற்றவனைச்சிவக ணத்திலோர்பொருளதாக்கி, அறைவதடாதுமாலுக் கடிமையாந்தருக்கே கண்டேன், பொறையெனலறியேனின்னைப்பொடிப்பணிக்கணங்காணென்றான். (அ)

யானெனதென்னும்யாப்பிலாப்புண்டாய்மாரனென்னும், கோன்விடுகோலினு லேகுத்துண்டாயற்பமான, மான்விழிமங்கைகொங்கை மலையுண்டாய்வாழ்நாட்சின் னுள், தானுளமனிதனென்னைத்தாழ்ந்துரைதந்தாயில்லை. (கூ)

கணத்தினிற்கழியுமாவிகாவலநிகமாந்தங்கள், இணக்கமுற்றுணர்ந்தாய்போலவிரு டிகேசனைப்பீறற்ற, பிணக்கறுபிரமஞ்சத்தியம்மெனப்பிரமவிஞ்சை, வணக்கமுற்றவரி ஞேதிமகிழ்ந்துமாலாகிநின்றாய். (கO)

படிபடுபரனைமேலாப்பணிநினதகந்தைதோர்தும், பிடிபிடிசாபமென்னுப்பிடித் தகுண்டிகையினீரை, அடிகுடியரியின்பத்தியன்பனைச்சாம்பராக்க, மடிதுடிசீற்றத்தி யான்மன்னனைமாய்ப்பானின்றான். (கக)

பிரளயகாளமேகம்பிறங்கிடுவடவைத்தீயை, வரளவான்பெய்தன்மானமாதிரம்பு கைக்துவாரி, கரளத்தீக்கட்டியூற்றக்காலருத்திரன்போற்சீறி, உருளவெங்கதலுங்கார முலகுட்கவுஞற்றலானன். (கஉ)

குண்டிகைநீரைக்கையாலள்ளிவெங்கொடியவான, சண்டிகைசவிசாமுண்டிசா ம்பவிவலிவராகி, தண்டிதாடாளிகாளிவாலையாதிகளாஞ்சத்தி, பிண்டகண்மயங்கும் திரத்தினைப்பிதற்றிப்பேசம். (கரு)

சங்கரசம்புசோமசேகரசதிசமேத, பொங்கரவணிந்தசூலபாணிபூதேசநீயே, அக் கவேதாகமங்களருள்பாரப்பிரமமாயின், இங்குளவரசனீறுகிடவெனவிரைந்துகூற்றும்

அரிபரனென்னவுண்டாயவகந்தையையடக்கவேண்டும், புரகரவுழையைக்கோடிபுனையிடைப்புனிதபுல்வாய்க், கரவசகரமாதேவகடவுளர்பரனீயாயில், பரமரியெனுமிம்மன்னன்பற்பமாகிடவென்றோதும். (௧௫)

பொன்புனையிதழிவன்னிதுரோணம்வெண்பூளைபூண்டு, கன்மலையெடுத்துமும்மைவினைபுரிகடவுளுதன், சென்மலைமங்கைகொண்க னெனச்சொனதுண்மைசெய்யின், மன்மனைமகவுசுற்றமாநகர்மாய்தல்வேண்டும். (௧௬)

சிவபரசிவமேசுத்தசிவசதாசிவமேசாம்ப, சிவநமசிவமேவாமகோரவீசானமேயோ, பவசத்தியோசாதம்மேதற்புருடம்மேபாச, பவனனைப்பழித்தான்சாம்பிப்பற்பமாகிடக்கண்பாரே. (௧௭)

காலனைக்கடிந்தநீலகண்டனேகாமநாச, பாலனேமுநிகளேவுபாம்பிபமுழுவைநவ்வி, கோலமாருடக்கையக்கன்சிரமுதல்கொண்டுலாவு, சீலனேயிவ்வூர்ச்செம்மறனைச்சிரஞ்சீவியாக்கே. (௧௮)

வினைப்பரமெனயான்சொற்றநிகமனமெழுவாயான, தனிப்பிரமாணமெல்லாஞ்சத்தியமென்னின்மன்னின், இனத்துடன்மாண்டுதீயிற்கிரைபடவேண்டும்வைய, அனத்தனுமமரரும்பூவலர்சொரிந்தேத்தல்வேண்டும். (௧௯)

எனச்சொலிப்புருவங்கோட்டியெரிமுனிநெருப்பின்கொள்ளை, கனப்பெருமீரேழ்தட்டெங்கரிந்துகுமெனவிண்வாணர், இனப்பெருமுனிவர்சித்தருரகர்வானியக்கர்மற்றோர், வினைப்பெருங்கதிர்கண்மூன்றுநிலைதடுமாறிற்றம்மா. (௨௦)

இத்தகைமைத்தாஞ்சீற்றத்தோடுவெஞ்சாபமீவான், கத்திடுமுனியைக்கண்டகாவலன்சுற்றத்தாரும், மற்றுளமுனிக்குழாமுமந்திரிக்கிழவர்தாமும், வெற்றிசெய்படையுநாடுநகரமும்வெதும்பிச்சோர்ந்த. (௨௧)

மந்திரித்தேந்துநீரைமாதிரம்பிளப்பக்கூவி, வெந்திறல்வேந்தன்வேவவிடவருவேலைவேலைச், சுந்தரநயநங்கூம்பத்துயின்முதன்முகிலினூர, விந்தமென்மலரில்வீழும்வீயெனவிளம்புமன்னே. (௨௨)

## வேறு.

அத்திமுனெழுந்தவதுலனாயகிலமளித்தழியமலனாயவித்தை
பற்றிடவரியபரமனாயடியர்பாலெழுபகையெலாம்பாழாய்ச்
செற்றிடவருள்செய்தேவனாயவர்க்கேசேவகம்புரிகதையாழி
வெற்றிசெய்வளைவில்வாளணிந்தருளும்விமலனாமவன்றனக்கபயம். (௨௩)

அநந்தனாயமிதாநந்தனாயாதிமூலனாயடிமுடியிலனாய்
இனந்தருபிரணவத்திருமேனியீசனாயிருமறைச்சிரத்திற்
கனந்தருமத்தாணிக்குமேற்கவினவீற்றிருந்தருள்புரிகரியாய்
மனந்தருவாக்குக்கெட்டருமாட்சிவரதனாமவன்றனக்கபயம். (௨௪)

முத்தியீமுதலாய்முன்னடுப்பின்னுமில்லதாய்மூலமாமாயை
வைத்துமாணிடனைவாணிநாவினனைவள்ளிகால்விழுந்தபண்டிதனை
அத்திமாமுகனையானைவாகனனையாட்டினையெருமையைப்பேயை
[illegible]த்திமீன்மானுளிவரிவர்தமையாப்பிட்டசைப்போன்றனக்கபயம். (௨௫)

[illegible]ரணநான்குமங்கமோராறுமற்றமலறுமீரொன்பானொன்றுஞ்
சீரண்சிறந்தவெண்ணுமிதிகாசமீரண்டுமீரொன்பதாத்திகமும்

நாரணச்சிறந்தபுராணமுமிவைக்கெலாமுபயமகனாகவிலும்
பாரணக்குரியதாலெல்லாம்பகரும்பத்துமாபன்றனக்கபயம். (உசு)

அகரவாச்சியனயருட்டிருஞர்கவாகந்தவடிவனுற்றிஞர்
சிகரசின்மயனைச்சித்தவண்கமலஞ்சிறப்பவீற்றிருந்தருள்பவனைப்
பகர்பராபரனைப்பங்கயச்செல்விபர்விவாழ்தருபரஞ்சோதி
சுகரமாய்ச்சுத்தசித்தமாயிலகுஞ்சுவாமியாமவன்றனக்கபயம். (உஎ)

ஆணுமாய்ப்பெணணுயலியதாய்க்காயவாசிகீர்பூவெரியனைத்தாய்ச்
சேணுளார்சித்தர்முத்தர்சேவிவர்ந்தார்பூவிலார்செம்பொருண்முனிவர்
காணிலாரின்னுமெனுமுதிர்பீடார்கண்ணனைய்விளங்கிடுகருணைப்
பூணிலாவெரிக்கும்பூரணஞானபூதனேசினக்குயானபயம். (உஅ)

முதுமறைமூலப்பழம்பொருள்வருகவெனவிளிவேழவெம்முறைகேள்
விதுவணிபவனும்விதியடியவரும்விழுமியபரங்கள்யாமென்று
கதுமெனவிரவல்விதியலவேயின்கனன்றுவந்தாழியெம்பெருமான்
பதுவிருபதுபாத்தெனப்பிளவிடுமென்றிருந்தஞான்றெழுசினக்கபயம். (உகூ)

அரவிந்தசரணகரமுகவதநயனவிலஞ்சியவமலே
உரகவத்துவபீதாம்பரதாமோதரவுரகாசனவிரத
பரபரமேச்சுவரபஞ்சாயுதபராட்டுசம்ராட்டுவிராட்டு
தரபுரமாபூதரவரபூசிதரவரதாசினக்கபயம். (௩0)

பாரணபவநிவாரணவீசபாபவிநாசபரேச
காரணகனகரத்தினமகரகுண்டலமண்டிதகழல்சேர்
ஆரணவமலவாரணசீதவங்ககம்பீரவாபரண
நாரணவாதிகேசவநரகேசரிவரதாசினக்கபயம். (௩௧)

ஈடெடுப்பில்லான்கேசவனெனநூலிசைப்பதுசத்தியமாயின்
வீடெடுத்தாவிகட்கருள்புரிவான்விட்டுணுசத்தியமாயின்
ஆடெடுத்தானையயனையிட்டழிப்பானரியெனல்சத்தியமாயின்
சூடெடுத்தாடிம்முனிமொழிசூரியன்முனுமிருளெனத்தொலைக. (௩௨)

சீறிடுவினையாற்கறைமிடற்றிறைவன்சீபதிபதப்புனல்சிரத்தால்
பேறிடுசுபமங்களமதாற்சிவப்பேர்பெற்றதுசத்தியமாயின்
ஆறிடுமதன்கணடினர்மோக்கமடைவதுசத்தியமாயின்
மாறிடக்கடவதிம்முனிசாபமாலடியவர்முனுமறம்போல். (௩௩)

அழகியமணவாளம்முனிவசிட்டாதிப்பெருமாசியரருள்செய்
தொழுகியவாறேயிவர்க்குரைதந்ததன்றியாதொன்றுமோகவமா
வழங்கிலேனென்வாக்குண்மையேயாயினிவரிடுசாபம்வாணதிர
முழங்கிடுகுரவைமுழக்கெனப்பாழாமுற்றுகவெனச்சொலிமுடித்தான். (௩௪)

வேறு.

மேற்கடற்றுனைவேந்தன்விளக்கியருளும்வெந்நீக், காற்கடலாலமுண்டகண்டனு முனிவன்கூறு, நூற்கடன்மாந்திமாலினுங்கருணுங்குமேலீர், பாற்கடற்பரமன்பின்னர்பரிந்தருள்புரிதல்கேண்மின். (௩௫)

முற்றிற்று.

ஆக படலம் - கஉ - க்கு திருவிருத்தம். ௪0அ.

——(o)——

# கரு-வது. ஸ்ரீசுதரிசநாழ்வான்றோன்றி யருளியபடலம்.

சக்கரஞ்சங்கமோக்கஞ்சவிகொளுஞானமீயத், தக்கவையென்றுமேலோர்தானவர் பகைவர்வேத, அக்கிரமருள்செய்வண்ணமாசரிபிருகுபின்னர், உக்கிரதுருவாசர்க்குங குரிசிற்குமுற்றவாகேள். (க)

தூவுதண்டுவலைத்தண்டேன்றெரியல்வேய்முடிமன்சோதிப், பூவையுங்குவளைப்பூ வும்பொலிமரகதமுங்காரும், பாவனையாகக்கூறும்படிவமார்மேனிப்புத்தேள், தேவ னேதேவநாதனுயினிம்முனிவன்செப்பும். (உ)

சூளனைத்தொடராதாகச்சூக்குமதூலகாயம், ஆளவத்தையினுங்காப்பானுமிக் குண்மையாய, நாளும்யாந்தொழும்பராயினக்கனார்படிவத்தாய, நீளுமாதவன்றன்சா யநீறுறக்கடவதென்றான். (ங)

விரிகடல்வயிறுகீண்டுவெய்துயிர்த்திடும்பொன்மின்னார், திருமகளழகனாநந்திரு நெடுமாலின்றேனார், சரண்மலர்க்கபயமென்னுச்சாற்றியமுறைசாரங்கம், தருமுறை கடுப்பவாகத்தனிமுதலுணர்ந்தானன்றே. (ச)

எஞ்சலில்பத்திஞானவடியர்களிகலினார்பால், அஞ்சியேயபயமெப்போதறைகு வரெனவன்போடு, துஞ்சிடுகருணைக்குன்றின்றுளைச்செவிப்பட்டகாலே, நஞ்சுகுது ளைப்பன்னகநறும்பள்ளியிருந்துமாதோ. (ரு)

நாயன்றேநாயன்றேயென்றலகறுதொண்டுநாடித், தாயன்றேநாடிநோக்குந்தனி நித்தர்முத்தர்சூழக், கூயின்றேயாழிப்புத்தேணம்மடிக்குடிற்கண்வாழுஞ், சேயொன் றுச்சீற்றத்துருவாதன்செய்புணர்ப்பிற்சிக்கி. (சு)

பையுளுற்றுவிசோரும்புடிக்குளன்பார்ப்பானுற்றும், மையல்செய்மாயாசாபவா ரிநீர்வறளக்காய்ந்த, பொய்யன்பொக்குடற்றிகந்தாட்புண்ணியற்புரந்துபூவாள், மெய் யன்வாக்குண்மையாக்கிவிதிவிலக்காதிபோதி. (எ)

என்றுபேரருளாள்ப்பேரெம்பெருமானுமேவக், கன்றிடுமடியற்கின்னல்காட்டுவார் க்கடியுங்காலந், துன்றுநாளென்றெனவைச்சுவைத்துநோக்காழித்தோன்றல், நன்று நன்றென்றுபோற்றிநவில்விடைகொடுசென்றானல். (அ)

குருமணிச்சுடிகைவாசங்குழுமுகுண்டலிக்கட்டுஞ்சும், கருமணியன்னமேனிக் கண்ணனார்மனமதாகும், அருமணியாழிவாணெண்டிசாமுகத்தாவிதியத், திருமணியம் பரீடன்றிருமுனஞ்செவ்வானுற்றால். (கூ)

சித்திரபாநுகோடிதிரண்டொருவடிவமாய், அத்திரமமைந்தசோதியாயிரவரங் களோடு, முத்திறச்சுடருங்காணவரிதெனமுகிழ்த்தகண்ணே, டொத்துநாமுழைஞ்சிற் புக்கங்கொளித்துயிரோம்பினரே. (கo)

அவனவன்றுவென்றேதுமவைக்குறுற்றுவிகாக்கும், புவனபூரணனார்தொண்ட ர்க்கின்னல்செய்புந்திமாண்டான், எவனெனவுள்ளுந்தோறுமெழுசினக்கனலின்வெப் பால், தவர்களுங்கடலுந்தேவதளங்களுங்கலங்கிச்சாய்ந்தால். (கச)

முனிமுனிவளவில்கோடிமுதிர்ந்தொன்றுமுனைத்தவாபோல், கனிமுனிவுளவா ழித்தோன்மனோவேகத்தோடும், பனிமுகிறீயச்சேந்துபடரனற்குப்பைவீயத், தொ ணிவிடுத்தகற்றவாஞ்சலவுறத்தோன்றிற்றம்மா. (கஉ)

## கங-வது. ஸ்ரீசுதரிசநாழ்வான்றோன்றியருளிய படலம்.

செவ்வெரிமண்டிலம்பூமண்டிலஞ்செறிவதேய்ப்பச், செவ்வெரிப்பூவின்மாலைச் செங்கனலாடைச்செம்பூண், செவ்வெரிமேனிச்சேந்தகலவைச்செங்கமலக்கண்கள், செவ்வெரிச்சிகைச்செந்தீயைத்திசையெலாம்பெய்துதீய்க்க. (கங)

சகமெலாந்தழைப்பவானபேருருத்தரித்தவாழி, நகநதநிமாவாரிதாரங்கள்கரிந்துநந்தக், ககமுறுகோள்கண்மன்னுமுடுக்களுங்கரப்பானோடச், சுகமுறுசுவர்க்கத்தாருஞ்சுடுதணற்புழுவிலார. (கச)

நமசுவாலௌளசட்டும்பட்டெனுமறைநாவினோரும், தமதமநிலைமைமாறித்தணவினிற்றுடித்தார்பாரேந், இமைமணிச்சூட்டுப்பாந்தளெட்டும்வானோறும்பியெட்டும், அமைகிரியெட்டும்பூரியடுக்கலுமவிந்தாடிற்றால். (கரு)

சரபங்கள்சாம்பராகித்தணிந்தனசலித்தல்வாரி, கரந்தனகட்டயான்கம்முறுசலமீதுமேனி, எரிந்தனவானப்புட்களேகியசுருண்டுவெந்து, கரிந்தனயானைக்கூட்டங்கரியெனலானமாதோ. (கசா)

ஆழியம்புத்தேள்வானத்தாறுசென்றனலுங்காய்வால், ஊழித்தீயாற்றகில்லாதுவரிபுக்கொளிப்பவோசை, ஏழையுஞ்செவிடதாக்கியிடிகளைநூறிட்டுதிப், பீழைதீர்ந்தடியருய்வான்பிரசந்நமாயிற்றன்றே. (கஎ)

வேறு.

பால்கெழுபரவைநடுப்பகுமுழைஞ்சில்வாய்வழிநஞ்சுகுபாந்தண்
மேல்கெழுமேகமாமணிநிறத்துமேலவனெறிந்திடுதிகிரி
நீல்கெழுநிறநதுவானதரேகிநீணலசசோணமாநகரின்
கோல்கெழுசக்கிரப்புனல்பரந்தகுளக்கரைகுறுகியதன்றே. (கஅ)

குளக்கரைப்பாங்கர்க்கொதித்தெரிதிகிரிகோமகன்சுவணப்பொன்மணியில
அளக்கறுஞ்செல்வத்தமையரண்மனைமுன்னவிர்தருசோதிவாண்முடிமன்
உளக்கனிவோடுநிற்பதுமுனிவனூரப்பியுங்காரமேபுரிந்து
துளக்கமுற்றேங்கப்பாணியான்றூக்கித்துடித்தெதிர்நிற்பதுங்கண்டான். (க௯)

காணுறுஞ்செவ்வியபரீடப்பேர்க்காவலன்விரதமுற்றிளைத்துய
பூணுறுமென்புமஞ்சலிகரமும்புகழ்துதிநாவுங்கண்ணீரும்
நாணுறுமனமும்மைபயுளுமுசிந்துநசையிறுமுகமுமெய்ச்சோர்வும்
பேணுறும்பெருமானருட்கெதிர்வானைநோககுறுபெட்புமுற்றிருந்தான். (உ0)

எழுவகைத்தோற்றமும்முணவுறக்கமின்றியேக்குற்றொருவினையும்
விழவிடவுணர்ச்சிவீய்ந்துபையுளினேவிழவெழுதருமொளியாழி
வழுவறுகோமான்றனையுந்தீய்த்திடமேல்வருதயவற்றவன்றனையும்
பழுதறநோக்கிப்படுகதத்தீயைப்பரப்பிவான்கிழிபடவடுத்த. (உக)

கடுத்திடுவேள்வியாளனைக்கடிவானோக்கிவான்கலங்குறவொலித்தே
அடுத்திடலறிந்தமுனிவரன்மன்னையவித்திடவெடுத்தனைநீரைத்
தடுத்திடவந்தத்தனிமுதவேவுசக்கரத்தேவினைப்பொடிப்பான்
துடித்ததன்மேல்விட்டட்டகாசத்தைச்செய்துவான்றனுக்குறவதிர்த்தான்.

அரன்பரப்பிரமமாவதுசத்தியும்மெனிலிந்தநீர்ப்பட்டார்
உரனழிந்துடலம்பற்பமாகிடவென்னுள்ளமந்திரமெலாமுருவின்

தாஞ்சொலிச்சமைத்தசாபமீரிணைச்சக்கரப்பெருமான்படைச்சாய்த்தான்
வரந்தருவேள்விவிட்டவாச்சியத்தின்வாறிலக்கீர்வறணைடொழிந்தால். (உங)

சக்கரவரசின்றணைவிலம்முனிவன்சாபநீரொழிந்தொளிதழைத்தல்
உக்கிரமுடையனுணர்ச்சிசெய்தகங்காரம்முதிர்ந்துருத்திரனுருவாய்
வக்கிரமனத்துக்கனலவன்பினுமம்மந்திரித்துள்ளநீர்மாய்ந்த
பொக்குணர்ந்தகன்றமானமுஞ்சீறறப்புணரியுந்தனைச்சுடப்பொடிந்து (உச)

அரசனையடுத்தகுரவரைமனையைமக்களையினத்தினைத்திருவை
முரசமார்தானைமுற்றினைநகரைநாட்டினைச்சாம்பராயெரித்துக்
கிரிசறவிடுத்தசாபநீர்கிளர்சக்கரப்படைகருக்கியதறிந்த
சிரசுறுதாருவாதமாமுநிவன்றனுக்கமிட்டேங்கினன்மாதோ. (உரு)

கேழ்கிளர்மார்பிற்கோரணியன்னதாயொருபொன்னிறக்கிள்ளை
வாழ்வரதன்றூண்மருவுமாமுநிகாண்மான்மிளிராழிமாமறையோன்
சூழ்வினைப்புனலைவிட்டதுதீய்ந்ததறிந்தெதிர்சக்கரஞ்சோர
வீழ்வலியேன்றகுறளியையேவிவிடுத்திடுவீறினைக்கேண்மின். (உசு)

நயனுடைக்கேள்விநாவலர்காளந்நரபதிமாய்வுறவெடுத்த
பயனதையாழிப்பண்ணவன்பற்பமாகிடக்கடவனென்றவன்மேல்
சயனுறப்புரோக்கணித்தலுமடங்கறண்ணுறத்துளிபடுதரத்தின்
அயனுறக்கண்டவந்தணன்பினுமாற்றுள்வினையறைகுதுமறிமின். (உஎ)

முற்றிற்று.

ஆக படலம் - கங - க்கு திருவிருத்தம். சஙரு.

———(o)———

ஸ்ரீமதேவரவராயபரமதயாகுரவேநமஃ.

## கச - வது. பூதமெழுந்தபடலம்.

————

பூவிளங்கிளியைப்புணர்ந்துயிர்புரக்கும்புண்ணியற்போற்றுமாமுனிவ
மூவெயின்முருக்குமுரண்மிகுமுருகன்றூதையின்கூறுளமூத்தோன்
தூவியநீரைத்தூற்றியநிகிரிமேற்றொலைவறுகடுங்கதத்தால்
ஓவியமுறழவுற்றுணர்ந்தாற்றுமொருவினையுணர்ந்திதையுளுற்றும். (க)

உருமிடித்தன்னகுரலினனுகியும்பர்மண்ணுக்குறவுரப்பிக்
கருவிடித்தன்னகடுகிரகோரகளத்திரங்காணுறவடுக்கன்
மருவிடத்தன்னமாப்பெரும்பூதம்வரும்படிமந்திரித்திடலும்
செருவிடத்தன்னமீயெனமுனிமுன்செருக்கின்றதுவரசேங்க. (உ)

அப்பெருங்குறளிஞற்றலைவிரிக்குமருங்கலைப்புலவனீங்கிலைகாண
ஒப்பறுங்கமலையொண்ணிறமுதலையுருத்திரனயன்றனக்கொப்பச்
செப்பிடுசிதமிறீயன்றன்பிறப்பின்றீர்க்கத்தின்றீர்க்கமுற்றுயர்ந்து
கப்புறுபவன்றனறிவின்மைகடுப்பக்கனத்துநின்றதுவிண்மண்கலங்க. (ங)

தாமரைபயந்தாவின்மாமலரோன்றனைப்பயந்தாவிகட்குடலீர்
தாமரையமலையருட்சத்திமுன்னவன்பொழிபுரக்தருட்டேவே

ஓமறையுடன்முற்றும்பரமெனலையுணர்கலாதுங்குமாகிரயம்
வேமறையினப்புலையரஞ்ஞானமேவுமால்கருநிறப்பேயே.　　(ச)

புகைமுகத்தன்னபுல்லறிவினரின்மேனியும்புதர்தமக்குகப்பில்
பகைமுகத்தன்னபாவிகணிகர்த்தபடிவமும்பிணஞ்சுடுதீயின்
சிகைமுகந்தன்னசென்னியின்சிகையுஞ்சீர்றகொடிக்கொடியணங்கின்
வகைமுகந்தன்னபூணுடையிணங்கவந்ததுபெருங்குறண்மாப்பேய்.　　(ரு)

உலகினையோம்புமொருபெருந்தொழிலேவிரும்புகோட்பாட்டினையுடைய
திலகனுகிடுநெந்திருநெடுமாலைத்தெரித்திடுமுபநிடதங்கள்
கலகறுமாறுவேறுகூறிடுதியறிவினருளத்தினைக்கடுப்ப
இலகுறும்பிறைசேர்வக்கிரவெயிற்றுப்பகுபெருவாயுளவிருட்பேய்.　　(சு)

கடுஞ்சினங்காமமுதலியகடிந்தகாட்சியர்க்கினிதுறக்கலங்கா
திடுஞ்சினமுதலவில்லதாக்கிடும்வீடருவானிலக்குமியீசன்
கெடுஞ்சினத்துயிர்காளறிமினென்றிடுமேதையர்தமைக்கீழறைகீழோர்
படுஞ்சினகரகக்குழிநிகர்வாய்கண்மூக்குளகிருத்திமம்பட்டால்.　　(எ)

அண்டமொன்றடங்காவாற்றலிற்சமைந்ததாகவிலப்பெரும்பூதம்
சண்டனில்விளங்குதாபதன்முன்னர்த்தாழ்ந்தடியேற்கெங்ஙன்றுபங்
கொண்டிடுகுக்கிக்குணவெனவஃதோகுறுகுறுமாழியானவனைப்
பண்டிகொண்டிடவுண்டிவன்முதனகரைப்பதைத்திடவுண்ணுதிபோதி.　　(அ)

முன்னரிவ்வாழித்தேவினைமுருக்கியுண்டபின்னிவ்வரசினையுண்
ணென்னலுமப்பேயெரிவிழியூற்றவேந்தியபாணிகாநீட்டிக்
கன்னலிற்கறித்துத்தின்றிடவடுத்துக்கனன்மயமாகியபடைகண்
மன்னன்முன்வரலும்விட்டிற்பூச்சென்னமாய்ந்தெரிந்தொழிந்ததுமன்னோ.　　(கூ)

பொருவறுசீற்றத்தூருவாதப்பேர்முனிவரன்போக்கியபூதம்
திருமணவாளன்றிகிரிமுன்னேகித்தீர்ந்ததைத்தேவரும்பிறரும்
தெரிந்ததைத்தெரிந்தசிவனடியவனுந்திடுக்கெனவுட்கியுட்டியங்கி
வருந்தியமானத்தீயினின்வதைந்துமருமமற்றவருணராமல்.　　(க0)

காக்குறுகறைசேர்கண்டனேயடியேன்கழறியசாபமுங்கதிர்முன்
போக்கியவிருளிற்போயதுபின்னும்புரிந்துளதவமெலாமொருங்கே
ஆக்கியபேயைவிடுத்தனனதுவுமலரிமுன்பனியெனவெரித்துச்
சீக்கியதரசுமற்றுளர்தாமுஞ்சிரித்திடத்தகுவதோசிவமே.　　(கக)

சிவசிவசம்போசங்கரகங்காதரவரதிரிபுரதகந
சிவசிவகிரியரசிவணகரந்தீயுறத்தீவிழிதிறப்பாய்
சிவசிவகிரிதண்டகோதண்டசீகண்டபிண்டமாசண்ட
சிவசிவசிவசிற்றம்பலவமலதேவவென்றனக்கருள்புரியே.　　(கஉ)

உணர்வுறுமுனையேபரம்பொருளென்னுவுரைத்தனன்சத்தியம்புரிந்தேன்
வணங்குறுமரசைவதைத்திடுசாபம்வழங்கினேன்பூதத்தைவிடுத்தேன்
இணங்குறுமிடியேற்றின்முறும்பாந்தளினமெனவாயினவீச
குணங்குகண்முடுகிக்கூத்திடுகொட்டிக்கூத்தனேகாத்தியாலென்றான்.　　(கங)

எனத்துதிதிருவாசகமெலாம்பாடியெரிந்துறுமாழிப்பிரானைக்
கனத்தெரிவீசுகனல்விழிப்பட்டவேகண்டெரித்திடவிழிவிழித்தான்

சினத்திடுகொடியசினவிழித்தியுந்திரைகடன்முனமுறந்திரணத்
தினத்தினின்மாய்வுற்றிறந்தனமுனிவனிகலெலாமிழவுபட்டொழிந்த. (கரு)

அருந்ததியொழிந்தவறுவரும்பயந்தானப்பனேவழிபடுபெரியோன்
வருந்திடச்செய்தவினைகளோரன்றேனுமருவிலவெனப்பெருமிடும்பை
தருமவன்றன்னைக்காணலுமாழிச்சக்கிரத்தேவுளந்தணலாய்
மருதவன்றனைவெந்துயர்படரெய்திவருந்திடநினைத்தனன்மாதோ. (கசு)

ஆக்கியசாதமழிதலுஞ்சாதவணியணியாத்தியாரத்தி
நோக்கியநாதன்றனைப்பரவியவாக்கியமெலாநூலருநீர்ப்பரவை
வாக்கியமாகிமாய்ந்ததுமறிந்தமாதவன்மீதுமாதவன்முன்
போக்கியவவைசெய்யாற்றலுமுரைப்பன்புந்திசேரந்தணீர்கேண்மின். (கஎ)

முற்றிற்று.

ஆ படலம் கச - க்கு திருவிருத்தம் ௬ருக.

——(o)——

ஸ்ரீமதேவரவராயபரமதயாகுரவேநமః.

# கரு-வது. துருவாசா இரிதந்தபடலம்.

சைவநூலசயிலச்சுறட்செந்தீ - பெய்வநூலப்பிறங்கற்றிகிரியால்
நைவதோர்ந்தவன்நற்றவரேபினர் - செய்வதோருதிசெப்புதுமாலரோ. (க)

சாதகத்தைத்தனிமுதலாழிமேல் - மோதவிட்டவம்மூப்பனேமுன்னிய
வேதவித்தகவாழிப்பிரான்வெகு - வாதைவைத்திடவந்தனன்மாடரோ. (உ)

கற்றைச்செஞ்சுடர்வெள்கக்கனலினுல் - மறறபத்தாகண்மாயமணவிண்ணெலாம்
துற்றுத்தீச்சிகைதோன்றவடுத்ததை - அறறமாமுனியங்ககடுங்குற. (ங)

கண்டுகண்புனல்கொண்டிக்கதிர்விட - மண்டுதீயவிப்பாமெனமாழ்கியே
விண்டுவாய்விடுத்தோடிப்புலம்பிடு - தொணடன்றன்னைத்தொடர்ந்திடவுற்றதே. (ச)

ஓடெடுத்திடுமொண்டவனுட்கிடப் - பாடெடுத்தபரன்வளைபற்றியே
சூடெடுத்திடச்சுட்டுவிட்டல்லது - வீடெடுப்பதில்லென்றுவிரைந்தது. (ரு)

வீறமற்றுவெங்காட்டிவேகத்துடன் - பாறலுற்றபார்ப்பானைநாம்பற்றியே
கோறலுற்றுக்கொடன்றிவிடேனெனச் - சீறலுற்றவன்பின்னரேசென்றதால். (சு)

முன்னரம்முனியோடலுஞ்சக்கரம் - பின்னரோடலும்பீடுடைப்பெற்றிசேர்
மன்னரோர்ந்துவருவிருந்துண்டலால் - அன்னமுண்கிலேனென்றுருளாடினன். (எ)

வட்டினுக்குமீரேழினுக்கும்பொறிக் - கட்டினுக்குங்கமலன்சிவனிவர்
சுட்டினுக்குந்தொடாமுதரெண்டனும் - பட்டினிக்கிடந்தான்பலதிங்களே. (அ)

இம்மனிவ்வாறிருப்பவிரிதல்செய் - அம்முனிப்பினடுத்திடுமொழியும்
கம்முனிப்புவிகார்பொலிவான்முதல் - எம்முனிப்புகலெய்தினுமேகிலான். (கூ)

அத்தனுமாதிமூலத்தடிமலர் * பத்தர்தம்பகைபாழுறவன்றுகொல்
வெதிரியாழிவிற்றண்டுவாள்வெள்வளை - பற்றினன்பரனென்றுபின்பாறிற்றே. (கo)

சூழிமாமுனிசோகித்தெங்கேகினும் - ஆழியேகியனற்றிடலாய்ந்திடின்
பூழிபுசிநூவாசியேயாயினும் - வாழிமூசம்வீடாவென்னுண்மையால். (கக)

நாககுண்டலநாகமுந்நூலனே - நாகவத்திரநாகாபரணனே
நாகநாணநாகவிடகண்டனே - நாகமேராசனனானுன்னடைக்கலம். (௧௨)

ஏற்றுவாகனவெண்டோளெம்மீசனே - நீற்றுமேனிநிலாமுடிசித்தனே
சாற்றுசங்கரசயம்பனுநாமனே - ஆற்றவில்லேனடியேனடைக்கலம். (௧௩)

ஆலமேவுமநாதியாமுத்தனே - ஏலுமாசெய்யெல்லாம்வல்லசித்தனே
காலுந்தீக்கண்கவின்பெறுகத்தனே - சாலுங்காத்திசம்போநிற்கடைக்கலம். (௧௪)

காதமோபலவோடிக்களைத்தனன் - வேதவாழிவிடுத்திலவெங்கனல்
போதச்சுட்டுப்பொரித்ததுபுண்ணியர் - நாதனேநலிகானுனடைக்கலம். (௧௫)

கானுட்புக்குக்கலங்கினன்கல்லதர் - தானுட்புக்குத்தளர்ந்துயிர்சாம்பினன்
தேனுட்புக்குப்பூநீருற்றுத்தேம்பினன் - ஊனுட்புக்குனக்கேயானடைக்கலம். (௧௬)

வாரிகூவங்கிடங்கிழிவாவிநீர் - ஏரியாறுநதமடுவெண்மலை
சாரியோடிக்கரக்கினுஞ்சக்கர - வாரித்தீயென்னைவாட்டலுக்கென்செய்கேன். (௧௭)

ஐயகோவக்கினிப்பிழம்பாறெலாம் - பெய்யவத்தீயினிற்பிறங்காவிகள்
உய்யவற்றவிந்தோய்ந்துயிர்சாம்பலைச் - செய்யமேனிச்சிவமேநீதேர்தியால். (௧௮)

போதவாகமமெல்லாம்பூதாதிகள் - நாதனென்றுநவின்றனபொய்யதோ
வேதமோதல்விழவெனலாயதோ - சாதம்போலவென்சத்தியம்போயதோ. (௧௯)

சாக்கிநீயெனல்சத்தியமல்லவோ - ஆக்கிநீயென்றறைந்ததுபொய்யதோ
தாக்குமாவிக்கடவுணீயல்லையோ - வாக்குத்தந்ததுமாய்ந்துபொய்யாயதோ. (௨௰)

கன்முழஞ்சிற்கரந்தும்விடானிலை - சென்முழஞ்சிற்சிக்குற்றுவிடானிலை
பன்முழககான்மரம்மண்பதுங்கினும் - வினமுழக்கவேலான்விடானில்லையால். (௨௧)

வேணிநாதநீவெஃகியாளாயெனில் - வாணியன்வன்னியன்கருமானவன்
சேணியன்மேக்குச்செய்யுங்கம்மாளனோ - பேணியென்னைப்பிழைப்பிக்குந்தேவனே.

மானையோட்டிமனிதன்மாடோட்டியோ - தானையோட்டுந்தணலாழியோட்டுவார்
பூனையோட்டிப்பணிந்துயான்போற்றிசெய் - மீனையோட்டிமிளிர்சிவமேயருள். (௨௩)

கலலெடுத்தடிப்பானையுங்காமுக - வில்லெடுத்தடிப்பானையும்வெந்நலம்
புல்லிடப்புரந்தாளும்புராந்தகா - சொல்லிடத்தெனைச்சோர்வறக்காத்தியால். (௨௪)

சூலமேனுஞ்சுழற்றிவிடாய்கொலோ - பாலமேனுந்திறந்துபாராய்கொலோ
காலகாலகபாலகணங்களைச் - சாலவேவிச்சம்மாரஞ்செய்யாய்கொலோ. (௨௫)

முருகமுருகநீயேனுமென்முன்னரே - வருகவருகவிவ்வாழித்தீமாய்வுறத்
திருகுவாய்திகிரிததீயிற்றீந்தனன் - அருகுளாரெனக்காருன்னடைக்கலம். (௨௬)

ஆனைமாமுகனேயத்தெருக்கனே - போனையாகேறிப்புந்தினையென்றன்பால்
சோனைமாரியிற்சோர்ந்தழுஞ்சோர்வறத்-தானையோடிவண்சார்ந்தருள்செய்குதி. (௨௭)

அத்தியீருரியாடையசைத்துளச் - சித்தன்மேனியிற்சிக்கியசீருள
பத்தினிபரமேச்சுரியாள்பரா - சத்திசாம்பவிசாமனைசாருதி. (௨௮)

நாரிசூலிநராந்தகிநாகசு - மாரிமுக்கணிமஞ்சுளநாயகி
காரிகௌரிகௌரிகாமாம்பிகை - சூரியாழிமுடிக்குமுனேருதி. (௨௯)

சோகவேகந்தொலைவுறுமாதவர் - யோகமாகுருவாகியுற்றாய்கொலோ
பாகமேறியபச்சைப்பசுங்கொடி - போகமாகுருவாகிப்போந்தாய்கொலோ. (௩௰)

அஞ்சியஞ்சியரகரவாளெனக் - கெஞ்சிக்கெஞ்சியழுதுகநீர்விழி
பஞ்சுபஞ்சுபடர்ந்துபழங்கணில் - நெஞ்சநெஞ்சுபுண்ணாகிநலிந்தனன்.

